ஸ்ரீ

# ஆழ்வார்கள் அருளிச்செயல் திரட்டு

இதன்கண்

திருப்பல்லாண்டு. திருப்பள்ளியெழுச்சி, திருப்பாவை அமலனாதிபிரான், கண்ணிநுண் சிறுத்தாம்பு ஆகிய ஐந்தும் முழுமையாகக் குறிப்புரையோடும், நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தின் மற்றைப் பகுதி திரட்டாகவும் உள்ளன. நித்திய அநுசந்தானம், நித்திய அநுஷ்டானம், திருவாராதனக் கிரமம், திருமந்திரங்கள், ஸ்ரீவைஷ்ணவத்தைப் பற்றிய முக்கிய விஷயங்கள் முதலியனவும் அடங்கி உள்ளன.

ஆசிரியன்

**வித்துவான் ரா. கண்ணன்**

நூல் கிடைக்கும் இடம்

தாயகம் : 27 (மனை B 146) முதல் மெயின்ரோடு, ஜவஹர் நகர், சென்னை-600 082.

Phone : 5378728

இந்நூலோடு அடியேனால் பாடப்பெற்று 22-10-71ல் வெளியிடப்பட்ட "அலர்மேலு மங்கை அருள்மாலை" என்னும் 108 வெண்பாக்கள் கொண்ட தோத்திர நூலும் சேர்க்கப் பட்டுள்ளது. இந்நூல் திருமலை—திருப்பதி தேவஸ்தான மாத இதழான "ஸப்தகிரி" 1976 டிசம்பர் இதழ் முதல் டிசம்பர் 1977 இதழ்வரையில் தொடர்ந்து வெளிவந்தது. அதனை அடுத்து அக்டோபர் 1978லும் வெளியிடப்பட்டது.

இந்நூலுக்குச் சாற்றுக்கவி வழங்கி அருளிய ஸ்ரீகாஞ்சி ஜகதாசார்யர் பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரிய சுவாமி, சிறப்புப் பாயிரம் அருளிய என் ஆசிரியர் பெருந்தகை புலவர் அரசு, வாழ்த்துப்பா வழங்கி அருளிய மகாவித்துவான் மே. வீ. வேணு கோபாலப்பிள்ளை ஆகிய மூவர்தம் பொன்னார் திருவடிகளுக்கு முடிதாழ்த்தி வணக்கம் செலுத்துகிறேன்.

இந்நூல் மறுபதிப்பாக வெளிவர பொருளுதவி புரிந்த திருமலை—திருப்பதி தேவஸ்தானத்திற்கு உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்நூலை அழகாக அச்சிட்டு உதவிய கவிக்குயில் அச்சக உரிமையாளர் திரு. தேசிக விநாயகம் அவர் களுக்கும் நன்றி.

அழகான பரம், வியூகம், விபவம், அர்ச்சை, அர்ந்தர்யாமி நிலைகளை விளக்கும் வண்ண ஓவியம் வரைந்து உதவிய நண்பர் வேங்கடகிருஷ்ணனுக்கும், அதனை மிக அழகாக அச்சிட்டு உதவிய பாலாஜி இளாசிக் உரிமையாளர் திரு. சந்தான கிருஷ்ணனுக்கும் மிகவும் நன்றி தெரிவிக்கிறேன்.

அடியேன்,
ஸ்ரீ. கண்ணன்

ஸ்ரீ

# ஸ்ரீ கண்ணபிரான் திருவாலய வரலாறு

"கண்ணன் கழல் இணை, நண்ணும் மனம் உடையீர்!
எண்ணும் திருநாமம் திண்ணம் நாரணமே.

திருமாலவன் கவிஞரான முதலாழ்வார் மூவருள் முதல்வரான பெரய்கையாழ்வார் தோன்றிய சான்றோர் தோன்றும் தொண்டை நன்னாட்டு ஸ்ரீ காஞ்சி மாநகருக்குத் (திருவெஃகா) தென்மேற்கே சுமார் ஐம்பது கல் தொலைவில் குன்றும் காடும் சார்ந்த முல்லை நிலத்தில், பண்டுதொட்டு ஆயர்கள் வாழ்ந்து வருகிற ஊர் நல்லிடைசேனை. ஆயர் நல்லாயர், புல்லாயர் என இருவகைப் படுவர். நல்லாயர் ஆனிரை காப்போர், ஆடுகள் மேய்ப்போர் புல்லாயர். ஆயர் இடையர் எனவும் படுவர். 'அடலாயர் கொம்பு' என்று நப்பின்னைப் பிராட்டியாரை நம்மாழ்வாரும், "செற்றார் திறலழியச் சென்று செருச் செய்யும் குற்றமொன்றில்லாத கோவலர் தம் பொற்கொடியே!," உந்து மதகளிற்றன் ஓடாத தோள்வலியன் நந்தகோபாலன் மருமகளே நப்பின்னாய்!" என்று பிராட்டியும் வழங்கி உள்ளதால் வீரம் உடைய குழு (சேனை) வாழும் ஊர் என்ற பொருளில் நல்+இடை+சேனை=நல்லிடை சேனை என்று பெயர் பெற்றது இவ்வூர்.

பல்லாண்டுகளாக இவ்வூரில் ஆழ்வார்கள் பாசுரங்களைச் சேவித்து பஜனை செய்துவரும் பாகவதர்கள் தங்கள் குலதெய் வத்திற்குக் கோயிலமைத்து வழிபட முயன்றதின் பயனாக ஒரு திருக்கோயில் அமைந்துள்ளது. இவர்கள் குடியைச் சார்ந்த ஒரு குடும்பத்தினர் பேரருளாளன் திருவருள் பெற்று வடநாட்டுத் திவ்யதேசயாத்திரை மேற்கொண்டு ஸ்ரீ வசுதேவ தேவகி திருக் குமரனாக இறைவன் திருவவதாரம் செய்த வட மதுரையில் எம் பெருமான் பிறந்த இடமாகக் கருதப்படுகிற சிறைக்கூடமாகக் காட்சி தரும் 'ஜன்ம ஸ்தலம்' என்று வழங்கப்படும் இடத்தில் வழிபட்டு நிற்கும் பொழுது, கண்ணன் எம்பெருமான் அருளப் பாடிட்டு, 'ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓரிரவில் ஒருத்தி மகனாய் ஒளித்து வளர' எனும் திருப்பாவைப் பாசுரத்தை இவர்களை விண்ணப்பிக்கச் செய்து கேட்டருளி அருள் பாலித்து நெஞ்சி னின்றும் நீங்காதவனாயினான்.

அதனால், திருக்கோயில் அமைக்க முற்பட்ட காலத்தில், இக்குடித் தலைமகன் ரா. கண்ணன் அந்தத் திவ்ய தேசத்திற்குச் சென்று, எம்பெருமான் குரவைக்கூத்து (ராசக்கிரீடை)ஜலக்கிரீடை (புனலாடல்) முதலான திருவிளையாடல்களைப் புரிந்து தனது திருவடிகளைப் பதித்த யமுனைநதி தீரத்து மண்ணை எடுத்து

அருளப்பாடு நிகழ்ந்த இடத்தில் வைத்து வழிபட, அங்கிருந்த குருக்கள் எம்பெருமான் மேலிருந்த பூமாலையையும் பிரசாதத்தையும் கொடுத்து அருளப்பாடிட்டனர். இது மொழிதெரியா தேசத்து நிகழ்ந்த அருட்செயல்! எம்பெருமான் அவதரித்த இடத்து மண்ணினை அவ்வாறு பெற்றுக் கொணர்ந்து வழிபாட்டு முறையோடு அம்மண்ணை வைத்து அதன்மேல் இக்கோயில் மூலவர் எழுந்தருளப் பண்ணி (பிரதிஷ்டை) உள்ள சீர்மை பெருமை—மேன்மை அறியத்தக்கது.

திருவல்லிக்கேணி பாகவதர், ஸ்ரீமாந் யாதவ எஸ். முத்து கிருஷ்ண இராமாநுச தாசர் கைங்கரியமாக இக்கோயில் மூலவர் எழுந்தருளியுள்ளது. மூன்று பஞ்சலோக உற்சவ மூர்த்திகள் திருமலை திருப்பதி தேவஸ்தானமே செய்து அளித்திருப்பவை வேங்கடக்கோன் திருவருளே! இதற்கான பாதி பொருட் செலவை அத்தேவஸ்தானமே ஏற்றுக்கொள்ள, மறுபாதி செலவை சென்னை ஸ்ரீமான் முக்கால நம்மாழ்வார் செட்டிகாரு அவர்கள் ஏற்று உதவினார்.

இவ்வூர் மக்கள் யாதவர்கள் ஆகையாலும், இவர்கள் ஸ்ரீ கண்ணபிரான் திருவருள் துணைக்கொண்டு என்றே எதையும் தொடங்குவதாலும், "வண்ணமாடங்கள் சூழ் திருக்கோட்டியூர், கண்ணன் கேசவன் நம்பி பிறந்தினில்" என்று திவ்ய பிரபந்தம் கண்ணன் என்றே தொடங்குவதாலும், எளிமைக்கும் ஈடுபாட்டுக்கும் அச்சொல் உரியதாதலாலும், "உண்ணுஞ் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன்" என்று ஆழ்வார் அனுபவிக்கும் சொல்லாகையாலும் இத்திருக்கோயில் மூலவர் திருநாமம் ஸ்ரீகண்ணபிரான் என்றும், தாயார் திருநாமம் ருக்மணி பிராட்டியார் என்றும் போற்றிக் கொள்ளப் பட்டுள்ளது. திருமலை—திருப்பதியிலிருந்து திருவேங்கடமுடையான் திருவருளால் உற்சவமூர்த்திகள் எழுந்தருளி உள்ளமையால் உற்சவப் பெருமாள் ஸ்ரீ வேங்கடகிருஷ்ணன் என்றும் நாச்சிமார்கள் ஸ்ரீதேவி ஸ்ரீ பூதேவி என்றும் வணங்கப்படுகின்றனர்.

மன்னு வடமதுரை மண்ணும், திருவல்லிக்கேணியிலிருந்து மூலவரும், திருவேங்கடத்திலிருந்து உற்சவமூர்த்திகளும் எழுந்தருளப் பெற்றமையால் இச்சிற்றூரும் திவ்விய தேசமாம் பேறு பெற்றுள்ளது. அந்தத் திவ்விய தேசத்து எம்பெருமான்களை வழிபடுவார் பெறும் பேறுகள் எல்லாம் இங்கு வழிபடுவாரும் பெறுவர் என்பது திண்ணம். இந்தத் திவ்விய தேசத்துமங்களா சாசனப் பாசுரமாகத் திருமகளின் அவதாரமான ஆண்டாள்

பிராட்டியார் அருளிய "பட்டிமேய்ந்தோர் காரேறு" என்னும் நாச்சியார் திருமொழிப் பாசுரம் கொள்ளப்பட்டுள்ளது. இச்சிறப்புகளோடு இத்திருக்கோயில் மகாசம்ப்ரோக்ஷணம் 18-1-1984ல் புனித கங்கை, காவிரி தாம்பிரபரணி முதலிய தீர்த்தங்களால் நிறைவேறியது.

இந்தத் திருக்கோயில் நல்லிடைசேனை திரு. ரா. ராயர்பிள்ளை எல்லம்மாள் குமாரர் புலவர் ரா. கண்ணன் என்பவர் நன்கொடை வசூலித்துக் கட்டினார். அவர் பாடிய "அலர்மேலு மங்கை அருள் மாலை" எனும் நூல் திருமலை—திருப்பதி தேவஸ்தான மாத இதழான 'ஸப்தகிரி'யில் வெளியிட்டதன் காரணமாக உற்சவ மூர்த்திகளைப் பெற்றார். அவர் எழுதி வெளியிட்ட "ஆழ்வார்கள் அருளிச் செயல் திரட்டு" என்ற நூலின் விற்பனைத் தொகையைக் கொண்டு ஸ்ரீ கண்ணபிரான் திருவாலய கைங்கரியடிரஸ்டு (பதிவு 1984) ஏற்படுத்தி, ஆண்டுதோறும் புரட்டாசி மாதம் மூன்றாம் சனிக்கிழமை திருவிழா நடைபெற ஏற்பாடு செய்துள்ளார். அந்த டிரஸ்டினால் 2-2-96ல் (தைபுனர்வசு) இரண்டாம் கும்பாபிஷேகம் நடத்தப்பட்டது. அதன் டிரஸ்டிகள்: சென்னையில் உள்ள திரு. கோ. ரங்கநாதன், அடையாறு பேக்கரி, 2. திரு. க, அருளாளன் Acm. S Rly, 3. திரு. க. அன்பாளன் BSc., Enkay Electronics; 4. திரு. க. அறிவாளன் BSc., (Agri) Agricultural officer, 5.கவிஞர் க. அழகாளன் ஆவர்.

டிரஸ்டி. கவிஞர். க. அழகாளன்
செல்வி. ம. மகாலட்சுமி (எ) மரகதம்

என்கிற நங்கையை திருமணம் கொண்ட நன்னாள் 15-9-1996 அன்று ஸ்ரீ சிர்தி சாயிபாபா மந்திர் மண்டபத்தில் "ஆழ்வார்கள் அருளிச் செயல் திரட்டு" என்ற நூலை வெளியிட்டு மகிழ்கிறோம்.

Please accept my warmest congratulations and the expression of our greatest admiration with your wonderful achievement - the completion of the temple and of the arrangements for the utsava!

I wish we could be there with you in person to share in your joy, in your triumph! வாழ்க, பல்லாண்டு பல்லாண்டு வாழ்க !!

about my present work, and the forthcoming visit to India in — as we do hope. Nov. 1984 – March 1985 I shall write in another letter விரைவில். Thus far, அன்புள்ள வாழ்த்துக்கள்! இறைவன் உங்கள் அனைவருக்கும் நீங்காச் செல்வத்தையும் அருளுமாறு வேண்டுகிறேன்.

அன்புள்ள

Kamil

Dear Mr. Kannan and family

Many heart-felt congratulation with the completion of this great work. We have selected this card with auspicious colours to express our joy. With warmest regards to all, [signature]

**Prof. Dr. K. V. ZVELEBIL**

Head of the department of DRAVIDIOLGY
UTRECHT University
HOLLAND

ஸ்ரீ

ஸ்ரீகண்ணபிரான் ருக்மணி பிராட்டியார் திருவடிகளே சரணம்
ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்



# ஆழ்வார்கள் அருளிச்செயல் திரட்டு

## பொதுத் தனியன்கள்

### ஸ்ரீ மணவாள மாமுநிகள் தனியன்

[க] *ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம்:*
*யதீந்த்ர ப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம்.*

[ஸ்ரீ அரங்கநாதரே ஒரு சிறுபிள்ளையாய் வந்து இத்தனியனைத் திருவாய் மலர்ந்தருளினார் என்பது மரபு. திருவாய்மொழிப்பிள்ளை தயைக்குப் பாத்திரரும், ஞானம் பக்தி முதலிய குணங்களுக்குக் கடல் போன்றவரும் யதிராசரை வழிபடும் பழக்கமுடையவருமாகிய அழகிய மணவாள மாமுநிகளை வணங்குகின்றேன் என்று பொருள்]

### ஸ்ரீவேதாந்த தேசிகர் தனியன்

[உ] *ராமாநுஜ தயா பாத்ரம் ஜ்ஞான வைராக்கிய பூஷணம்*
*ஸ்ரீமத் வேங்கட நாதார்யம் வந்தே வேதாந்த தேசிகம்*

[ராமாநுஜருடைய தயைக்குப் பாத்திரராயும் ஞானம் வைராக்கியங்களை அணியாக உடையவராயும், ஸ்ரீமத் வேங்கட நாதன் என்கிற திருநாமத்தை உடையவராயுமிருந்த ஸ்ரீ வேதாந்த தேசிகரை வணங்குகின்றேன்.]

### குருபரம்பரையின் தனியன்

[௩] *லக்ஷ்மீநாத ஸமாரம்பாம் நாத யாமுந மத்யமாம்*
*அஸ்ம தாசார்ய பர்யந்தாம் வந்தே குருபரம்பராம்*

[ஸ்ரீகூரத்தாழ்வார் அருளியது. ஸ்ரீமந் நாராயணனைத் தொடக்கத்திலும், நாதமுனிகளையும் ஆளவந்தாரையும் நடுவிலும் எமது ஆசாரியரை முடிவிலும் கொண்டுள்ள குருபரம்பரையை வணங்குகின்றேன்.]

குறிப்பு: வடமொழித் தனியன்கள், சுலோகங்கள், மந்திரங்கள் முதலியவற்றுக்குத் தனியாகத் தமிழ் தொடர் எண்ணும் ஆழ்வார்கள் பாசுரங்களுக்குத் தனித்தொடர் எண்ணும் நித்திய

அநுஷ்டானம், நித்திய அநுசந்தானம், திருவாராதனக் கிரமத்திற்குப் பயன்படுத்தக் கொடுக்கப்பட்டுள்ளன. நித்திய அநுசந்தானப் பாசுரங்கள் ★ என்ற குறியாலும் நிறுத்து மிடங்கள் * என்ற குறியாலும், இரண்டுதரம் சேவிப்பவை ** என்ற குறியாலும் அறியப்படும்.

ஸ்ரீ எம்பெருமானார் [உடையவர்] தனியன்

[ச] யோநித்ய மச்யுத பதாம்புஜ யுக்ம ருக்ம
வ்யாமோஹதஸ் ததிதராணி த்ருணாய மேநே,
அஸ்மத்குரோர் பகவதோஸ்ய தயைக ஸிந்தோ:
ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே.

[ஸ்ரீகூரத்தாழ்வார் அருளியது. எவர் அச்சுதனுடைய இணையடிப் பொற்கமலத்தில் மிகுந்த விருப்பமுடைமையால், அதற்குப் புறம்பானவைகளைத் துரும்பாக நினைத்தாரோ, அப்பேர்ப்பட்ட ஷட்குண பூர்ணரும் தயைக்கடலும் எமது குருவுமாகிய ஸ்ரீராமாநுஜருடைய திருவடிகளைச் சரணமாகப் பற்றுகிறேன்.]

நம்மாழ்வார் தனியன்

[ரு] மாதா பிதா யுவதயஸ் தநயா விபூதிஸ்
ஸர்வம் யதேவ நியமேந மதந்வயா நாம்,
ஆத்யஸ்யந: குலபதேர் வகுளாபிராமம்
ஸ்ரீமத் ததங்க்ரி யுகளம் ப்ரணமாமி மூர்த்நா.

[ஸ்ரீ ஆளவந்தார் அருளியது. என்னைச் சேர்ந்தவர்களுக்கு எப்போதும் தாய் தந்தை மாதர் மக்கள் செல்வம் ஆகிய எல்லாமாகவுள்ள நம்முடைய குலபதியாகிய நம்மாழ்வாருடைய வகுளமலர்களால் [மகிழம் பூக்களால்] பூசிக்கப்படும் அழகிய திருவடிகளைத் தலைகுனிந்து வணங்குகிறேன்.]

ஆழ்வாாகள உடையவர் தனியன்

[சு] பூதம் ஸரச்ச மஹதா ஹ்வய பட்டநாத
ஸ்ரீ பக்திஸார குலசேகர யோகிவாஹாந்,
பக்தாங் க்ரிரேணு பரகால யதீந்த்ர மிச்ராந்
ஸ்ரீமத் பராங்குச முநிம் ப்ரணதோஸ்மி நித்யம்.

[ஸ்ரீபராசரபட்டர் அருளியது. பூதத்தாழ்வார், பொய்கையாழ்வார், பேயாழ்வார், பெரியாழ்வார், திருமழிசை யாழ்வார்,

குலசேகராழ்வார், திருப்பாணாழ்வார், தொண்டரடிப் பொடியாழ்வார், திருமங்கையாழ்வார், யதீந்திரர் [ராமநுஜர்] ஆகிய இவர்களையும், ஸ்ரீமத் பராங்குச முநியையும் [நம்மாழ்வார்] நித்தம் வணங்குகின்றேன்.

## பெரியாழ்வார் தனியன்

[எ] குருமுக மநதீத்ய ப்ராஹ வேதாந சேஷாந்
நர பதி பரிக்லுப்தம் சுல்கமா தாதுகாம :
ச்வசுரமமர வந்த்யம் ரங்கநாதஸ்ய ஸாக்ஷாத்
த்விஜகுல திலகம் தம் விஷ்ணுசித்தம் நமாமி

[ஸ்ரீமந் நாதமுனிகள் அருளியது. எவர் வல்லபதேவன் என்கிற அரசன் ஏற்படுத்திய பொற்கிழியைப் பெறவிரும்பிக் குருமுகமாகக் கற்காமலே வேதப்பொருளை [பகவானருளால்] எடுத்துரைத்தாரோ, அழகிய மணவாளனுக்கு நேரான மாமனாரும் தேவதைகளால் தொழத் தக்கவரும், அந்தணர் குலத்திற்குத் திலகம் போன்றவருமான அந்தப் பெரியாழ்வாரை வணங்குகின்றேன்.]

## பாண்டியபட்டர் அருளிய பெரியாழ்வார் தனியன்

மின்னார் தடமதிள்சூழ் வில்லிபுத்தூரென்று * ஒருகால்
சொன்னார் கழற்கமலம் சூடினோம்,—முன்னாள்
கிழியறுத்தா னென்றுரைத்தோம், கீழ்மையினிற்சேரும்
வழியறுத்தோம் நெஞ்சமே! வந்து.

ஓம் என்னும் பிரணவம் போலே பெருமாள் [அ] ஆழ்வார் [உ] ஆண்டாள் [ம] மூவரும் கூடலாயிருக்கும் வில்லிபுத்தூர் ஊரை [ஊர்—மக்கள்—பாகவதரை] ஒருகால் சொன்ன அடியாரது திருவடித் தாமரைகளைத் தலையிலே சூடினோம் என்று சொல்லுவதால் தமிழ் வேதத்தின் முதல் தனியனே தொண்டர்க் குலத்தின் சீர்மையை [ததீய சேஷத்வம்] உணர்த்துகிறது. இதுவே வைணவத்தின் எல்லை.

## ஸ்ரீ பெரியாழ்வார் அருளிய ★ திருப்பல்லாண்டு 12

வேதத்துக்கு முன்னும், முடிவிலும் ஓதப்படும் ஓம் என்னும் அதுபோல் தமிழ்வேதமாகிய நாலாயிரத்துக்குப் பல்லாண்டாகும். திவ்வியப் பிரபந்த சேவையின் முதலிலும், முடிவிலும் இது ஓதப்படுகிறது. எல்லாம் அருளுபவனான இறைவனுக்குத் தேவை ஏதுமில்லை. உயிர் அவனிடத்துச் செய்யக் கூடியதாக இருப்பது அடிமையே; பல்லாண்டு பாடுவதான கைங்கரியமே.

1. **பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு
பலகோடி நூறாயிரம்*
மல்லாண்ட திண்தோள் மணிவண்ணா! உன்
சேவடி செவ்வி திருக்காப்பு.

2. **அடியோமோடும் நின்னோடும் பிரிவு இன்றி
ஆயிரம் பல்லாண்டு*
வடிவாய் நின் வல மார்புனில் வாழ்கின்ற
மங்கையும் பல்லாண்டு*
வடிவார் சோதி வலத்து உறையும் சுடர்
ஆழியும் பல்லாண்டு*
படைபோர் புக்கு முழங்கும் அப் பாஞ்ச
சன்னியமும் பல்லாண்டே.

முதலிரண்டு பாசுரங்களையும் சேர்த்து ஒரே பாசுரம் போல சேவிப்பது மரபு.

1, 2. இவ்விரண்டு பாட்டும், திருமந்திரப் பொருளாயிருக்கிறது. "அடியோமோடும்" என்கிற இடத்தாலே ஓம் பொருளைச் சொல்லிற்று; முதற்பாட்டில் "பல்லாண்டு" என்கிற முதல் சொல்லாலே நம : சப்தார்த்தம் சொல்லிற்று; "மல்லாண்ட திண்தோள் மணிவண்ணா" என்று, அப்பாட்டில் விக்ரஹயோகத்தையும், சௌர்ய வீர்யாதி குணயோகத்தையும், [எம்பெருமான் திருமேனி வனப்பு—ஒளி முதலானவையும், ஆற்றல்—வலி—அருள் முதலானவையும்] இரண்டாம் பாட்டில் விபூதி யோகத்தையும் சொல்லுகையாலே, நாராயண சப்தார்தம் [அடியோமோடும் என்றதனால் லீலா விபூதியான இவ்வுலகும், மங்கை, ஆழி, பாஞ்ச சன்னியம் என்றதனால் நித்யசூரிகள் வாழும் நித்ய விபூதியாம் — பரமபதமான அவ்வுலகும்] சொல்லிற்று; "உன் சேவடி செவ்வி திருக்காப்பு" என்கையாலே, சதுர்த்தியில் [ஆய] பிரார்த்திக்கிற அர்த்தத்தைச் சொல்லிற்றாய்த்து.

3 வாழாட்பட்டு நின்றீர் உள்ளீரேல், வந்து
மண்ணும் மணமும் கொண்மின்*
கூழாட்பட்டு நின்றீர்களை எங்கள்
குழுவினிற் புகுதலொட்டோம்*
ஏழாட்காலும் பழிப்பு இலோம் நாங்கள்
இராக்கதர் வாழ்* இலங்கை
பாழாள் ஆகப் படை பொருதானுக்குப்
பல்லாண்டு கூறுதுமே.

வாழாள்பட்டு — கைங்கர்யமாகிற இன்பத்தை விரும்புபவர் (தன்னலம் கருதாதவர்). கூழாள்பட்டு—கூழ்—சோற்றுக்காகப் பிறருக்கு அடிமைப்பட்டவர்.

4 ஏடு நிலத்தில் இடுவதன் முன்னம் வந்து
எங்கள் குழாம் புகுந்து *
கூடுமனம் உடையீர்கள்! வரம்பு ஒழி
வந்து ஒல்லைக் கூடுமினோ*
நாடும் நகரமும் நன்கு அறிய நமோ
நாராயணாய என்று*
பாடு மனம் உடைப் பத்தருள்ளீர்! வந்து
பல்லாண்டு கூறுமினே.

ஏடு—பாலில் ஏடுபோலத் தேகத்தின் சூட்சும நிலை—நிலத்தில்—மூலப் பிரகிருதி (அ) கைவல்ய நிலம். வரம்பு ஒழி—ஆத்மாவை மட்டும் அனுபவிக்கும் கைவல்ய நிலையை ஒழித்து. நாடும்—சாமான்யரும், நகரும்—அறிஞரும்,

5 அண்டக் குலத்துக்கு அதிபதி ஆகி
அசுரர் இராக்கதரை*
இண்டக் குலத்தை எடுத்துக் களைந்த
இருடிகேசன் தனக்கு*
தொண்டக் குலத்தில் உள்ளீர்! வந்து அடிதொழுது
ஆயிர நாமம் சொல்லி*
பண்டைக் குலத்தைத் தவிர்ந்து பல்லாண்டு பல்-
லாயிரத்தாண்டு என்மினே.

அண்டக் குலம்—உலகங்களின் திரள். இண்டக் குலம்—நீசர் கூட்டம். இருடீகேசன்—இந்திரியங்களுக்குத் தலைவன் அவைகளைப் பட்டி புகுராமல் நடக்குப்படி நியமிப்பவன்.பண்டைக் குலம்—சாதி, பொருள் முதலியவைகளைப் பற்றிய குலம்.

6 எந்தை தந்தை தந்தை தந்தை தம் மூத்தப்பன்
ஏழ்படிகால் தொடங்கி*
வந்து வழிவழி ஆட்செய்கின்றோம்* திரு-
வோணத் திருவிழவில்
அந்தியம் போதில் அரியுரு ஆகி
அரியை அழித்தவனைப்*
பந்தனை தீரப் பல்லாண்டு பல்லாயிரத்
தாண்டு என்று பாடுதுமே.

பந்தனைதீர—ஆயாசம் தீரும்படியாக,

7 தீயிற் பொலிகின்ற செஞ்சுடர் ஆழி
திகழ் திருச்சக்கரத்தின்*
கோயில் பொறியாலே ஒற்றுண்டு நின்று
குடிகுடி ஆட்செய்கின்றோம்*
மாயப் பொருபடை வாணனை ஆயிரந்
தோளும் பொழி குருதி
பாயச்* சுழற்றிய ஆழி வல்லானுக்குப்
பல்லாண்டு கூறுதுமே.

வைணவ சிந்நமான திருவிலச்சினை (பஞ்சசமஸ்காரம்) தரித்துக் கொள்ளல்.

8 நெய்யிடை நல்லதோர் சோறும் நியதமும்
அத்தாணிச் சேவகமும்*
கை அடைக்காயும் கழுத்துக்குப் பூணொடு
காதுக்குக் குண்டலமும்*
மெய்யிட நல்லதோர் சாந்தமும் தந்து என்னை
வெள்ளுயிர் ஆக்கவல்ல*
பையுடை நாகப்பகைக் கொடியானுக்குப்
பல்லாண்டு கூறுவனே.

நியதமும்—எப்போதும், அத்தாணி—பிரியாத. சேவகம்—சேவை, தொண்டு.

9 உடுத்துக் களைந்த நின் பீதக ஆடை
உடுத்துக் கலத்தது உண்டு*
தொடுத்த துழாய்மலர் சூடிக் களைந்தன
சூடும் இத் தொண்டர்களோம்*
விடுத்த திசைக் கருமம் திருத்தித் திரு-
வோணத் திருவிழவில்*
படுத்த பைந் நாகணைப் பள்ளி கொண்டானுக்குப்
பல்லாண்டு கூறுதுமே.

10 எந்நாள் எம்பெருமான் உன் தனக்கு அடி-
யோம் என்று எழுத்துப்பட்ட
அந்நாளே* அடியோங்கள் அடிக்குடில்
வீடுபெற்று உய்ந்தது காண்*
செந்நாள் தோற்றித் திரு மதுரையுள்
சிலை குனித்து* ஐந்தலைய
பைந்நாகத் தலைப் பாய்ந்தவனே! உன்னைப்
பல்லாண்டு கூறுதுமே.

11 **அல்வழக்கு ஒன்றும் இல்லா அணி கோட்டியர்-
கோன்* அபிமானதுங்கன்
செல்வனைப் போலத் திருமாலே! நானும்
உனக்குப் பழ அடியேன்*
நல் வகையால் நமோ நாராயணா என்று
நாமம் பல பரவிப்*
பல் வகையாலும் பவித்திரனே! உன்னைப்
பல்லாண்டு கூறுவனே,

பவித்திரனே—சொரூபம், ரூபம், குணம், விபூதி முதலிய எல்லாவற்றாலும் பாபத்தைப் போக்குபவன், சாமான்யர், பகவானிடம் ஈடுபடுபவர், பலன்களை வேண்டுபவர், கைவல்யர் முதலான எல்லோரையும் திருத்திக் கூட்டிக் கொண்டு பல்லாண்டு பாடும் அருளுடையவர் பெரியாழ்வார். எல்லா ஆத்மாக்களும் உய்ய வேண்டும் என்னும் வைணவ நோக்கத்தை இதில் வெளியிட்டுள்ளார்.

பவித்திரன்—தூயவன், பரமேட்டி—மேலான வைகுந்தத் திருப்பவர்.

12 **பல்லாண்டு என்று பவித்திரனைப் பர-
மேட்டியைச்* சார்ங்கம் என்னும்
வில் ஆண்டான் தன்னை வில்லிபுத்தூர் விட்டு-
சித்தன் விரும்பிய சொல்*
நல் ஆண்டு என்று நவின்று உரைப்பார் நமோ
நாராயணாய என்று*
பல்லாண்டும் பரமாத்மனைச் சூழ்ந்திருந்து
ஏத்துவர் பல்லாண்டே.

இப்பல்லாண்டு, தன்னைக் கையாளுபவன் கையிலே பரத்துவத்தைக் கைப்படுத்தவல்ல சக்தியை உடையது என்பதனைப் புலப்படுத்துகிறது "பரமாத்மனைச் சூழ்ந்திருந்து ஏத்துவர் பல்லாண்டே" என்பது.

திருவரங்கப் பெருமாளரையர் அருளிய தொண்டரடிப் பொடியாழ்வார் தனியன்

மண்டங்குடியென்பர் மாமறையோர், மன்னியசீர்த்
தொண்டரடிப்பொடி தொன்னகரம்—வண்டு
திணர்த்தவயல் தென்னரங்கத்தம்மானைப் பள்ளி
உணர்த்தும் பிரானுதித்த வூர்.

ஸ்ரீ தொண்டரடிப் பொடியாழ்வார் அருளிய

★ திருப்பள்ளி எழுச்சி 10

உயர்ந்த சத்துவகுணனான எம்பெருமானுக்கு, ராஜச தாமச குணமான உறக்கம் இயல்பன்று. அவனுக்குத் திருப்பள்ளி எழுச்சிப் பாடுகை ராஜோபசாரம் போன்றது. உயிர்களுக் கெல்லாம் தலைவன், அரசர்க்கும் அரசன் அவனே அன்றோ?

13 **கதிரவன் குணதிசைச் சிகரம் வந்து அணைந்தான்
கன இருள் அகன்றது காலை அம்பொழுதாய்*
மது விரிந்து ஒழுகின மாமலர் எல்லாம்
வானவர் அரசர்கள் வந்து வந்து ஈண்டி*
எதிர் திசை நிறைந்தனர் இவரொடும் புகுந்த
இருங் களிற்று ஈட்டமும் பிடியொடு முரசும்*
அதிர்தலில் அலைகடல் போன்றுளது எங்கும்
அரங்கத்தம்மா! பள்ளி எழுந்தருளாயே.

குணதிசை—கிழக்கு, மது—தேன், ஈண்டி—திரண்டு, களிறு—ஆண் யானை, பிடி—பெண் யானை.

14 கொழுங்கொடி முல்லையின் கொழுமலர் அணவி
கூர்ந்தது குணதிசை மாருதம் இதுவோ!
எழுந்தன மலர் அணைப் பள்ளிகொள் அன்னம்
ஈன்பனி நனைந்த தம் இருஞ் சிறகு உதறி*
விழுங்கிய முதலையின் பிலம்புரை பேழ்வாய்
வெள் எயிறு உற, அதன் விடத்தினுக்கு அனுங்கி*
அழுங்கிய ஆனையின் அருந்துயர் கெடுத்த
அரங்கத்தம்மா! பள்ளி எழுந்தருளாயே.

அணவி—அணைந்துகொண்டு, பிலம்புரை—குகை போன்ற, பேழ்வாய்—பெரியவாய், அனுங்கி—நோவுபட்டு.

15 சுடர்ஒளி பரந்தன சூழ்திசை எல்லாம்
துன்னிய தாரகை மின்னொளி சுருங்கி
படர் ஒளி பசுத்தனன் பனிமதி இவனோ!
பாயிருள் அகன்றது பைம் பொழிற் கமுகின்*
மடலிடைக் கீறி வண்பாளைகள் நாற
வைகறை கூர்ந்தது மாருதம் இதுவோ!
அடல்ஒளி திகழ் தரு திகிரி அம் தடக்கை
அரங்கத்தம்மா! பள்ளி எழுந்தருளாயே.

துன்னிய—நெருங்கிய, தாரகை—விண்மீன், திகிரி—சக்கரம்.

16 மேட்டு இள மேதிகள் தளை விடும் ஆயர்கள்
வேய்ங்குழல் ஓசையும் விடை மணிக் குரலும்*
ஈட்டிய இசை திசை பரந்தன வயலுள்
இரிந்தன சுரும்பினம் இலங்கையர் குலத்தை*
வாட்டிய வரிசிலை வானவர் ஏறே !
மா முனி வேள்வியைக் காத்து* அவபிரதம்
ஆட்டிய அடுதிறல் அயோத்திஎம் அரசே !
அரங்கத்தம்மா ! பள்ளி எழுந்தருளாயே.

மேட்டுஇளமேதி—உயரமும், இளமையுமுடைய எருமை, விடை—எருது, இரிந்தன சுரும்பு இனம்—வண்டுகளின் கூட்டம் ஆரவாரித்துக் கிளம்பின. மாமுனி—விசுவாமித்திரர். அவபிரதம்—யாகத்தின் முடிவில் செய்யும் அவபிரத ஸ்நாநம்.

17 புலம்பின புட்களும் பூம் பொழில்களின் வாய்
போயிற்றுக் கங்குல் புகுந்தது புலரி*
கலந்தது குணதிசைக் கனைகடல் அரவம்
களி வண்டு மிழற்றிய கலம்பகம் புனைந்த*
அலங்கல் அம்தொடையல்கொண்டு அடியிணை பணிவான்
அமரர்கள் புகுந்தனர் ஆதலில் அம்மா !
இலங்கையர்கோன் வழிபாடு செய் கோயில்
எம்பெருமான் ! பள்ளி எழுந்தருளாயே.

புலம்பின புட்களும்—பறவைகளும் ஆரவாரம் செய்யா நின்றன.

18 இரவியர் மணி நெடுந் தேரொடும் இவரோ !
இறையவர் பதினொரு விடையரும் இவரோ !
மருவிய மயிலினன் அறுமுகன் இவனோ !
மருதரும் வசுக்களும் வந்து வந்து ஈண்டி*

புரவியொடு ஆடலும் பாடலும் தேரும்
குமரதண்டம் புகுந்து ஈண்டிய வெள்ளம்*
அருவரை அனைய நின் கோயில் முன் இவரோ !
அரங்கத்தம்மா ! பள்ளி எழுந்தருளாயே.

இரவியர்—பன்னிரண்டு ஆதித்தர்; பதினொரு விடையர்—ருத்ரர்கள் பதினொருவர், மருவிய மயிலினன்—விருப்பமுடைய மயில்வாகன முருகன், மருதர்—ஒன்பதின்மர், வசுக்கள்—எண்மர், குமர தண்டம்—குமரன்—தேவசேநாபதி; தண்டம்—சேனை.

19 அந்தரத்து அமரர்கள் கூட்டங்கள் இவையோ !
அருந்தவ முனிவரும் மருதரும் இவரோ !
இந்திரன் ஆனையும் தானும் வந்து இவனோ !
எம்பெருமான் ! உன் கோயிலின் வாசல்*
சுந்தரர் நெருக்க விச்சாதரர் நூக்க
இயக்கரும் மயங்கினர் திருவடி தொழுவான்*
அந்தரம் பார் இடம் இல்லை மற்று இதுவோ !
அரங்கத்தம்மா ! பள்ளி எழுந்தருளாயே.

இந்திரன் ஆனையும் தானும்—ஐராவதமும் தேவேந்திரனும், தேவர்கள், சநகாதி மகரிஷிகள், மருதகணங்கள் இயக்கர்—யக்ஷர்கள், சுந்தரர்—கந்தருவர், வித்யாதரர்கள் அந்தரம்—ஆகாசம், பார்—பூமி.

20 வம்பவிழ் வானவர் வாயுறை வழங்க
மாநிதி கபிலை ஒண் கண்ணாடி முதலா*
எம்பெருமான் படிமக்கலம் காண்டற்கு
ஏற்பன ஆயின கொண்டு நன் முனிவர்*
தும்புரு நாரதர் புகுந்தனர் இவரோ !
தோன்றினன் இரவியும் துலங்கு ஒளி பரப்பி*
அம்பர தலத்தினின்று அகல்கின்றது இருள் போய்
அரங்கத்தம்மா ! பள்ளி எழுந்தருளாயே.

வம்பு—மணம், வாயுறை—அறுகம்புல், மாநிதி—சங்கநிதி பதுமநிதி, கபிலை—காமதேனு.

21 **ஏதம்இல் தண்ணுமை எக்கம் மத்தளி
யாழ் குழல் முழவமோடுஇசை திசை கெழுமி*
கீதங்கள் பாடினர் கின்னரர் கெருடர்கள்
கெந்தருவர் அவர் கங்குலுள் எல்லாம்*

மாதவர் வானவர் சாரணர் இயக்கர்
சித்தரும் மயக்கினர் திருவடி தொழுவான்*
ஆதலில் அவர்க்கு நாள்-ஓலக்கம் அருள
அரங்கத்தம்மா ! பள்ளி எழுந்தருளாயே.

ஏதம் இல்—குற்றம் இல்லாத, தண்ணுமை—சிறுபறை, எக்கம்—ஒற்றைத் தந்தியுடைய வாத்தியம், கங்குல்—இரவு, நாள் ஓலக்கம் அருள—பகலில் சபையில் வீற்றிருந்து அருளுவதற்கு.

22 ** கடிமலர்க் கமலங்கள் மலர்ந்தன இவையோ !
கதிரவன் கனைகடல் முளைத்தனன் இவனோ !
துடியிடையார் சுரி குழல் பிழிந்து உதறித்
துகில் உடுத்து ஏறினர் சூழ் புனல் அரங்கா !
தொடை ஒத்த துளவமும் கூடையும் பொலிந்து
தோன்றிய தோள் தொண்டரடிப்பொடி என்னும்
அடியனை, அளியன் என்று அருளி உன் அடியார்க்கு
ஆட்படுத்தாய் ! பள்ளி எழுந்தருளாயே.

அளியன் — அருளத்தக்கவன். உன் அடியார்க்கு ஆள் படுத்தாய்—உன்னுடைய பாகவதர்களுக்கு என்னை அடியானாக ஆளாக்கவேணும் என்று வைணவத்தின் முக்கிய கொள்கையான ததிய சேஷத்வத்தை வேண்டுகிறார்.

## திருப்பாவை

வேதம் அனைத்துக்கும் வித்தாகும் கோதை தமிழ் திருப்பாவை என்பர் சான்றோர். சுவாமி இராமாநுசர் திருப்பாவை ஜீயர் என்று வழங்கப்படுகிறார். நாள்தோறும் காலையில் பிட்சைக்குச் செல்லும்போது திருப்பாவையைச் சேவித்துக் கொண்டு செல்லும் அவர் அதிலேயே ஆழ்ந்து விடுவராம்.

### உய்யக்கொண்டார் அருளிய ஸ்ரீ ★ ஆண்டாள் தனியன்

அன்னவயல் புதுவை ஆண்டாள், அரங்கற்குப்
பன்னு திருப்பாவைப் பல்பதியம்—இன்னிசையால்
பாடிக் கொடுத்தாள் நற்பாமாலை பூமாலை
சூடிக் கொடுத்தாளைச் சொல்லு.

ஸ்ரீ ஆண்டாள் அருளிய திருப்பாவை 30

எட்டடி நாற்சீர் ஒரு விகற்பக் கொச்சகக் கலிப்பா

23 * * மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாளால்*
நீராடப் போதுவீர் போதுமினோ நேரிழையீர் !
சீர் மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள் !
கூர் வேல் கொடுந்தொழிலன் நந்தகோபன் குமரன்*
ஏர் ஆர்ந்த கண்ணி யசோதை இளஞ்சிங்கம்*
கார் மேனிச் செங்கண் கதிர்மதியம் போல் முகத்தான்*
நாராயணனே நமக்கே பறை தருவான்*
பாரோர் புகழப் படிந்து—ஏலோர் எம்பாவாய். 1

கடவுளுடைய திருவுரு, கார்மேனி, செங்கண். கதிர் மதியம்போல் முகத்தான் என்றும், அவன் திருநாமம் பூரண ஞானத்தையும் குலந்தரும் செல்வம் தந்திடும் என்றபடி எல்லா நலங்களையும் விளைக்கும் பெரிய திருமந்திரம் (நாராயணன்) என்றும் இதில் வெளியிடப்படுகிறது. மந்திரம் தாயாகப் அசோதை) பேசப்படுகிறது. மந்திரத்தின் வீறு இளம் சிங்கம் எனப்படுகிறது. கைங்கர்யத்தில் ருசியுடைய பாகவதர்களைக் கைங்கரியத்திற்கு அழைக்கிறது, பரத்துவத்தைப் புலப்படுத்துகிறது இப்பாசுரம், பறை—புருஷார்த்தம், கைங்கரியம்.

24 வையத்து வாழ்வீர்காள்! நாமும் நம் பாவைக்கு*
செய்யும் கிரிசைகள் கேளீரோ* பாற்கடலுள்
பையத் துயின்ற பரமன் அடி பாடி*
நெய் உண்ணோம் பால் உண்ணோம் நாட்காலே நீராடி*

மையிட்டு எழுதோம் மலரிட்டு நாம் முடியோம்*
செய்யாதன செய்யோம் தீக்குறளை சென்று ஓதோம்*
ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டி*
உய்யுமாறு எண்ணி உகந்து—ஏலோர் எம்பாவாய்.

வைணவர்களுடைய குணம் செயல் அருளுடைமை இப் பாசுரத்தில் வெளிப்படுகிறது. நாட்காலே நீராடி என்பதனால் நித்ய கருமங்கள் குறையற செய்யப்படவேண்டும் என்றும் பெரியோர்கள் செய்யாதனவைகளைச் செய்யலாகாது என்றும், ஐயம்—பகவத்வைபவம், பிச்சை—பாகவத வைபவம் இரண் டையும் ஆந்தனையும் பிறருக்குக் காட்டிக் கொடுக்கவேண்டு மென்றும், உயிர் மேம்பாடு அடையும் வழியைச் சுட்டுகிறது; பாற்கடலுள் பையத்துயின்ற பரமன் அடிபாடுதலே வாழ்வு என்று புலப்படுத்தி வியூகத்தைப் பாடுகிறது இப்பாசுரம். மையிட்டு எழுதோம்—ஞானயோகத்தில் ஈடுபடோம். மலரிட்டு நாம் முடியோம்—பக்தியோகத்தில் முயலோம்.

25 ** ஓங்கி உலகு அளந்த உத்தமன் பேர் பாடி*
நாங்கள் நம் பாவைக்குச் சாற்றி நீர் ஆடினால்*
தீங்கு இன்றி நாடு எல்லாம் திங்கள் மும்மாரி பெய்து*
ஓங்கு பெருஞ் செந்நெலூடு கயல் உகள*
பூங்குவளைப் போதில் பொறிவண்டு கண்படுப்ப*
தேங்காதே புக்கு இருந்து சீர்த்த முலை பற்றி
வாங்க* குடம் நிறைக்கும் வள்ளற் பெரும் பசுக்கள்*
நீங்காத செல்வம் நிறைந்து—ஏலோர் எம்பாவாய்* 3

இது பிறரை வாழ்த்தும்போது அநுசந்திக்கும் மங்களா சாசன பாசுரம்.

ஓங்கி உலகு அளந்த உத்தமன் பேர் பாடுதலால் உலகுக்கு உண்டாகும் நிலையான நன்மையைச் சொல்லுகிறது. எல்லா உயிர்கள் பக்கலிலும் அவன் திருவடிகளை வைத்துக் காக்கும் சம்பந்தத்தை—விபவ அவதாரத்தின் சிறப்பை வெளியிடுகிறது. பகவான் பேர்பாட தேக ஆத்ம அபிமானம்போம். ஞானம் உண்டாம், இம்மண்டலத்தில் உள்ள ஆத்மாக்களும் களித்துத் துள்ளும், தெய்வ வண்டான எம்பெருமான் பூங்குவளை மலரான நெஞ்சில் புகுந்து கண்வளர்ந்தருளுவன் என்றபடி.

26 ஆழி மழைக் கண்ணா! ஒன்று நீ கை கரவேல்*
ஆழியுள் புக்கு முகந்துகொடு ஆர்த்து ஏறி*
ஊழி முதல்வன் உருவம்போல் மெய் கறுத்து*
பாழியந் தோள் உடைப் பற்பநாபன் கையில்*

ஆழிபோல் மின்னி வலம்புரிபோல் நின்று அதிர்ந்து*
தாழாதே சார்ங்கம் உதைத்த சரமழைபோல்*
வாழ உலகினில் பெய்திடாய்* நாங்களும்
மார்கழி நீர் ஆடமகிழ்ந்து—ஏலோர் எம்பாவாய். 4

நீங்காத செல்வம் நிறைவதற்கு நீர் இன்றியமையாதது. அந்த நீரை வழங்கும் தெய்வம் எல்லோரும் தீங்கின்றி வாழ உலகில் பெய்யவேண்டுமென்று நியமிக்கின்றனர். வான் சிறப்பு இறை அருளாம். கற்புடையோர் பெய் எனப் பெய்யும் மழை என்றார் திருவள்ளுவரும். மழை தேவதைக்கு அந்தர்யாமியாக இருந்து நியமிப்பவன் எம்பெருமான். முதலாழ்வார்கள் எம்பெருமானார் போன்ற ஆசார்யரை நோக்கி "எல்லோரும் அறியும்படி பிரண வார்த்தத்தைச் சொல்லி, அதன் மூலமாக எம்பெருமானது காருண்ய குணத்தை எல்லோரும் அறிந்து உய்யும்படி வெளியிட வேணும் என்று வேண்டுவதாக இருப்பாசுரத்திற்கு உள்ளுறை.

27 மாயனை மன்னு வடமதுரை மைந்தனை*
தூய பெருநீர் யமுனைத் துறைவனை*
ஆயர் குலத்தினில் தோன்றும் அணி விளக்கை*
தாயைக் குடல் விளக்கம் செய்த தாமோதரனை
தூயோமாய் வந்து நாம் தூமலர் தூவித் தொழுது*
வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்க*
போய பிழையும் புகுதருவான் நின்றனவும்*
தீயினில் தூசு ஆகும் செப்பேலோர் எம்பாவாய். 5

மாயனை என்றது பரமபத நாதனாய் இருந்துகொண்டே திருப்பாற்கடலில் பையத்துயிலும் பரமனாகவும் [வியூகம்] ஓங்கி உலகளந்த உத்தமன், சார்ங்கம்-சரம் உடைய இராமன், வடமதுரை மைந்தன் [கண்ணன்] முதலான விபவ அவதாரங்களை ஏற்பவனாக வும், மழைக் கண்ணனாக அந்தர்யாமியாக 'இருப்பவனாகவும், மனத்தினால் சிந்தித்து வாயினால் பாடி தூமலர் தூவித் தொழும் படி அணிவிளக்காக அர்ச்சையிலும் இருக்கும் நிலையை. தாய் கயிற்றால் கட்டவும் அடிக்கவும் தாழ்ந்து எளியனாய் [சௌலப்பியம்] தாமோதரன்—தாமம்—கயிறு, உதரன்—வயிற்றில் தழும்பை உடையன். அப்பேற்பட்ட அருளுடையவனை நினைத்துப் பாடி மலர் தூவித்தொழ நம்முடைய போயபிழையும் (பழைய பாவங்களும்) புகுதருவான் நின்றனவும்—நமது அறிவுக்குப்படாது புகும் புதிய பாவங்களும் நெருப்பில் இட்ட பஞ்சு போல் ஆகும் என்றபடி. அதாவது தடையாகும் ஊழ்வினைபோம். ஆயர்குலம்—பாகவத குலம்.

28 புள்ளும் சிலம்பின காண் புள் அரையன் கோயிலில்*
வெள்ளை விளி சங்கின் பேர் அரவம் கேட்டிலையோ?
பிள்ளாய்! எழுந்திராய் பேய்முலை நஞ்சு உண்டு*
கள்ளச் சகடம் கலக்கு அழியக் கால் ஓச்சி*
வெள்ளத்து அரவில் துயில் அமர்ந்த வித்தினை*
உள்ளத்துக் கொண்டு முனிவர்களும் யோகிகளும்*
மெள்ள எழுந்து அரி என்ற பேர் அரவம்,
உள்ளம் புகுந்து குளிர்ந்து—ஏலோர் எம்பாவாய் 6

இப்பாசுரம் முதல், மேல் "எல்லே இளங்கிளியே" என்ற பாசுரம் வரை, பத்துப் பாசுரங்களால் ஆழ்வார் பதின்மரைக் குறித்துத் திருப்பள்ளி எழுச்சிப் பாடப்படுவதாகக் கொள்வர் சான்றோர். விளக்கம் காஞ்சி பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரிய சுவாமி அவர்கள் அருளிய திருப்பாவை உரையில் காண்க. "இன்கனி தனி அருந்தான்" என்ற வழக்குப் படியும், பகவத் விஷயத்தை அனுபவிக்கும்போது பகவானைச் சேர்ந்தவரை (ததீயரை) முன்னிட்டல்லது அனுபவிக்கமாட்டார்களா கையாலும், பகவானை அனுபவிக்கும் ருசியுடையராய் இருக்குமவர்கள் இழக்க ஒண்ணாது என்னும் நினைவாலும், உயிர்களிடத்துள்ள இரக்கத்தாலும் மற்றவர்களையும் எழுப்புகிறார்கள். புள் அரையன்—பெரிய திருவடி. பக்தர்களிடம் பகவானைச் சேர்ப்பவர் கருடாழ்வார்; பெரியாழ்வார் அவர் அம்சம். அரி என்ற பேரரவம் உள்ளத்துக் கொண்டவர், விஷ்ணு சித்தர் என்ற திருநாமம் உடையவர் இவர். அரி—பாபத்தைப் போக்குபவன்— "அவா அறச் சூழ் அரியை"—நம்மாழ்வார்; அவா பாபத்தைச் சேர்ப்பது.

29 கீசு கீசு என்று எங்கும் ஆனைச்சாத்தன்*கலந்து
பேசின பேச்சு அரவம் கேட்டிலையோ? பேய்ப் பெண்ணே!
காசும் பிறப்பும் கலகலப்பக் கைபேர்த்து*
வாச நறுங் குழல் ஆய்ச்சியர்* மத்தினால்
ஓசைப் படுத்த தயிர் அரவம் கேட்டிலையோ?
நாயகப் பெண்பிள்ளாய்! நாராயணன் மூர்த்தி*
கேசவனைப் பாடவும் நீ கேட்டே கிடத்தியோ?
தேசம் உடையாய்! திற—ஏலோர் எம்பாவாய். 7

கேசவனை—நம் விரோதிகளைப் போக்குபவன். "கெடும் இடராயின எல்லாம் கேசவா என்ன"—(நம்) பிரம்ம ருத்ராதிகளுக்குத் தந்தையாயிருப்பவன். சிறந்த கூந்தலை உடையவன். கேசி என்ற குதிரை வடிவான அசுரனை அழித்தவன். நாயகப்

பெண் பிள்ளாய்! [அரசர்] பேய்ப் பெண்ணே! ஆனைச் சாத்தான் [மலை நாட்டுப் பறவை] குலசேகராழ்வாரைக் குறிக்கும்.

30 கீழ்வானம் வெள்ளென்று எருமை சிறு வீடு*
மேய்வான் பரந்தன காண் மிக்கு உள்ள பிள்ளைகளும்*
போவான் போகின்றாரைப் போகாமல் காத்து* உன்னைக்
கூவுவான் வந்து நின்றோம்* கோதுகலம் உடைய
பாவாய்! எழுந்திராய் பாடிப் பறை கொண்டு*
மா வாய் பிளந்தானை மல்லரை மாட்டிய*
தேவாதி தேவனைச் சென்று நாம் சேவித்தால்,
ஆவா என்று ஆராய்ந்து அருளேலோர் எம்பாவாய். 8

கோதுகலமுடைய பாவாய்!—கண்ணபிரானுடைய ஆசையைத் தன்னிடத்துப் பெற்றுள்ள பதுமை போன்றவளே! எழுந்திராய்!—நம்மாழ்வாரை உணர்த்தும் பாசுரம். நம்மாழ்வார் ஒருவரே வீற்ற திருக்கோலம் உடையவர். கீழ் வானம் வெள்ளென்று—சத்துவ குணம் தலையெடுக்க, எருமை சிறுவீடு மேய்வான் பரந்தன—தமோ குணங்கள் விலகிப் போயின.

31 தூமணி மாடத்துச் சுற்றும் விளக்கு எரிய*
தூபம் கமழத் துயில் அணைமேல் கண்வளரும்*
மாமான் மகளே! மணிக் கதவம் தாள் திறவாய்*
மாமீர்! அவளை எழுப்பீரோ? உன் மகள் தான்
ஊமையோ? அன்றிச் செவிடோ? அனந்தலோ?*
ஏமப் பெருந்துயில் மந்திரப் பட்டாளோ?
மா மாயன் மாதவன் வைகுந்தன் என்று என்று*
நாமம் பலவும் நவின்றேலோர் எம்பாவாய். 9

அனந்தலோ — பேர் உறக்கமோ? மாமாயன் — நீர்மை உடையன்* மாதவன் — இறையும் அகலாதபடி அலர்மேல் மங்கையைத் தன் மார்பில் அழுத்திக் கொண்டுள்ளவன்— சௌலப்பியன்—நீர்மை எளியன் ஆனது அவள் சம்பந்தத்தாலே; வைகுந்தன்—நித்ய சூரிகளை ஒரு நாடாக உடையவன் (சுவாமித்வம்...மேன்மை) என்றபடி. இது திருமழிசையாழ்வார் பாசுரம். இவருக்கு ஆராவமுதன், யாதோத்காரி சயனத் திருக்கோலத்தில் ஈடுபாடு அதிகம்.

32 நோற்றுச் சுவர்க்கம் புகுகின்ற அம்மனாய்!*
மாற்றமும் தாராரோ வாசல் திறவாதார்?*
நாற்றத் துழாய் முடி நாராயணன், நம்மால்
போற்றப் பறை தரும் புண்ணியனால்* பண்டு ஒருநாள்

கூற்றத்தின் வாய்வீழ்ந்த கும்பகரணனும்*
தோற்றும் உனக்கே பெருந்துயில்தான் தந்தானோ?*
ஆற்ற அனந்தல் உடையாய்! அருங்கலமே!*
தேற்றமாய் வந்து திற—ஏலோர் எம்பாவாய். 10

புண்ணியன்—தார்மிகன், உபாயமாவன், இதுபேயாழ்வார் பாசுரம். இவர் பாசுரங்கள் திருத்துழாய் மயமாகவே இருக்கும். திருமழிசை ஆழ்வாரை அனந்தலோ என்றாள். அவருடைய ஆசார்யரான இவரை ஆற்ற அனந்தல் உடையாய் என்றார். ஆற்ற—மிகவும்.

33 கற்றுக் கறவைக் கணங்கள் பல கறந்து*
செற்றார் திறல் அழியச் சென்று செருச் செய்யும்*
குற்றம் ஒன்று இல்லாத கோவலர் தம் பொற்கொடியே!
புற்றரவு அல்குல் புனமயிலே! போதராய்*
சுற்றத்துத் தோழிமார் எல்லாரும் வந்து* நின்
முற்றம் புகுந்து முகில் வண்ணன் பேர் பாட*
சிற்றாதே பேசாதே செல்வப் பெண்டாட்டி!* நீ
எற்றுக்கு உறங்கும் பொருள்?—ஏலோர் எம்பாவாய். 11

சிற்றாதே-அசையாதே. இது பூதத்தாழ்வார் பாசுரம். புற்றரவல்குல்—இடையழகு-பக்தி-அன்பு. அன்பிலே தொடங்கி அன்பிலே முடிக்கிறார் இவ்வாழ்வார்.

கனைத்து இளங் கற்று எருமை கன்றுக்கு இரங்கி*
நினைத்து முலை வழியே நின்று பால் சோர*
நனைத்து இல்லம் சேறு ஆக்கும் நற்செல்வன் தங்காய்!*
பனித் தலை வீழ நின் வாசல் கடைபற்றி*
சினத்தினால் தென் இலங்கைக் கோமானைச் செற்ற*
மனத்துக்கு இனியானைப் பாடவும் நீ வாய் திறவாய்!*
இனித்தான் எழுந்திராய் ஈது என்ன பேர் உறக்கம்!*
அனைத்து இல்லத்தாரும் அறிந்து—ஏலோர் எம்பாவாய். 12

இது பொய்கையாழ்வார் பாசுரம். தங்காய்—திருமகள் தாமரையில் தோன்றியவள், இவரும் தாமரை மலரில் தோன்றியவர், கனைத்து—முதலில் பேசத் தொடங்கியவர். இப்பாசுரத்திலேயே மதுரகவியாழ்வாரையும், ஆண்டாளையும் கொள்ளலாம்.

35 புள்ளின் வாய் கீண்டானைப் பொல்லா அரக்கனை
கிள்ளிக் களைந்தானைக் கீர்த்திமை பாடிப்போய்
பிள்ளைகள் எல்லாரும் பாவைக் களம் புக்கார்*
வெள்ளி எழுந்து வியாழம் உறங்கிற்று*
புள்ளும் சிலம்பின காண் போது அரிக்கண்ணினாய்*
குள்ளக் குளிரக் குடைந்து நீராடாதே*
பள்ளிக் கிடத்தியோ? பாவாய்! நீ நன்னாளால்*
கள்ளம் தவிர்ந்து கலந்து—ஏலோர் எம்பாவாய். 13

தொண்டரடிப்பொடியாழ்வாரை உணர்த்தும் பாசுரம். கள்ளம் தவிர்ந்து- இவ்வாழவார் "சூதனாய்க் கள்வனாகி" என்றும். "கள்ளமே காதல் செய்து" என்றும் பாடுவதை நோக்குக.

36 உங்கள் புழைக்கடைத் தோட்டத்து வாவியுள்,
செங்கழுநீர்வாய் நெகிழ்ந்து ஆம்பல்வாய் கூம்பினகாண்;
செங்கற்பொடிக் கூறை வெண்பல் தவத்தவர்*
தங்கள் திருக்கோயில் சங்கிடுவான் போதந்தார்*
எங்களை முன்னம் எழுப்புவான் வாய் பேசும்*
நங்காய்! எழுந்திராய் நாணாதாய்! நாவுடையாய்!
சங்கொடு சக்கரம் ஏந்தும் தடக்கையன்*
பங்கயக் கண்ணானைப் பாடேலோர் எம்பாவாய். 14

திருப்பாணாழ்வார் பாசுரம். உங்கள் புழைக்கடை—ஆழ்வார் ஒதுங்கி வாழ்ந்தவர், நாவுடையாய்—சகலவேத சாரத்தையும் பத்துப் பாசுரங்களில் அடக்கியவர்,

37 எல்லே! இளங்கிளியே! இன்னம் உறங்குதியோ!*
சில்என்று அழையேன்மின் நங்கைமீர்! போதர்கின்றேன்;
வல்லை உன் கட்டுரைகள் பண்டே உன் வாய் அறிதும்*
வல்லீர்கள் நீங்களே நானே தான் ஆயிடுக*
ஒல்லை நீ போதாய் உனக்கு என்ன வேறு உடையை?*
எல்லாரும் போந்தாரோ?போந்தார், போந்து எண்ணிக்கொள்*
வல்ஆனை கொன்றானை மாற்றாரை மாற்று அழிக்க
வல்லானை* மாயனைப்பாடேலோர் எம்பாவாய். 15

இல்லாத குற்றத்தையும் சிலர் உண்டு என்றால் இல்லை செய்யாதே இசைகை வைணவ இலக்கணம் என்பதனைச் சுட்டுகிறது "நானேதான் ஆயிடுக" என்பது. இது திருமங்கையாழ்வாரைத் துயிலுணர்த்தும் பாசுரம். இவர் பல பாசுரங்களில் தம்மைக் கிளியாகச் சொல்லிக் கொண்டவர். உனக்கு என்ன வேறுடையை—திருமடல் செய்தவர். இளங்கிளியே, எல்லாரும்

போந்தார் என்பதனால் கடைசிஆழ்வாரான இவரோடு நிரம்பிற்று. அகங்காரம், காமக் குரோதிகளை நீக்குமவனைப் பாடு என்பது உள்ளுறை,

38 ** நாயகனாய் நின்ற நந்தகோபனுடைய
கோயில் காப்பானே!* கொடித் தோன்றும் தோரண
வாயில் காப்பானே!* மணிக்கதவம் தாள் திறவாய்*
ஆயர் சிறுமியரோமுக்கு* அறை பறை
மாயன் மணிவண்ணன் நென்னலே வாய்நேர்ந்தான்*
தூயோமாய் வந்தோம் துயிலெழப் பாடுவான்*
வாயால் முன்னமுன்னம் மாற்றாதே அம்மா!* நீ
நேய நிலைக் கதவம் நீக்கு—ஏலோர் எம்பாவாய். 16

ஆசார்ய சம்பத்தை உண்டாக்கப் புருஷகாரமாய் இருப்பவர்களை உணர்த்துவது இப்பாசுரத்திற்கு உள்ளுறை, நென்னலே—நேற்றே.

39 அம்பரமே தண்ணீரே சோறே அறஞ்செய்யும்*
எம்பெருமான் நந்தகோபாலா! எழுந்திராய்*
கொம்பனார்க்கு எல்லாம் கொழுந்தே! குல விளக்கே!*
எம்பெருமாட்டி! யசோதாய்! அறிவுறாய்*
அம்பரம் ஊடு அறுத்து ஓங்கி உலகு அளந்த*
உம்பர் கோமானே! உறங்காது எழுந்திராய்*
செம்பொற் கழலடிச் செல்வா! பலதேவா!
உம்பியும் நீயும் உறங்கேலோர் எம்பாவாய். 17

அம்பரம்—உடை; ஆகாயம். உம்பி—உன் தம்பி, செல்வா! என்றது கைங்கரிய ஸ்ரீயை உடைய ஆதிசேஷன் பலதேவன் என்றபடி. ஆசார்யனைப் (நந்தகோபன்) பற்றி, திருமந்திரத்தின் (யசோதை) பொருளை உணர்ந்து, எம்பெருமானுக்கு அந்தரங்கரை (பலதேவன்) முன்னிட்டு எம்பெருமானை உணர்த்துதல் சேதன சொரூபம் என்பது உள்ளுறை.

40 ** உந்து மத களிற்றன் ஓடாததோள் வலியன்,
நந்த கோபாலன் மருமகளே! நப்பின்னாய்!*
கந்தம் கமழும் குழலீ! கடை திறவாய்!*
வந்து எங்கும் கோழி அழைத்தன காண்* மாதவிப்
பந்தல் மேல் பல்கால் குயில் இனங்கள் கூவின காண்*
பந்தார் விரலி! உன் மைத்துனன் பேர் பாட*
செந்தாமரைக் கையால்சீர் ஆர் வளை ஒலிப்ப*
வந்து திறவாய் மகிழ்ந்து—ஏலோர் எம்பாவாய் 18

இராமாநுசர் உகந்த பாசுரம், 'திருப்பாவை ஜீயர்' எனப் பெயர் பெறச் செய்தது. இதில் பிராட்டியை—நப்பின்னையைப் புருஷகார மாகப் பற்றுகிறார்கள்.

41 குத்து விளக்கு எரியக் கோட்டுக்கால் கட்டில்மேல்*
மெத்தென்ற பஞ்ச-சயனத்தின் மேல் ஏறி*
கொத்து அலர் பூங்குழல் நப்பின்னை கொங்கைமேல்
வைத்துக் கிடந்த மலர் மார்பா! வாய்திறவாய்*
மைத் தடங்கண்ணினாய்! நீ உன் மணாளனை*
எத்தனை போதும் துயில் எழ ஒட்டாய் காண்*
எத்தனை யேலும் பிரிவு ஆற்றகில்லாயால்*
தத்துவம் அன்று தகவு—ஏலோர் எம்பாவாய். 19

தத்துவம் அன்று—உன் சொரூபத்துக்கும் (சத்யம்—உண்மை) சேராது. தகவு அன்று—உன் சுவாபத்துக்கும் (தர்மம்—நீர்மை) சேராது.

42 முப்பத்து மூவர் அமரர்க்கு முன் சென்று*
கப்பம் தவிர்க்கும் கலியே! துயில் எழாய்*
செப்பம் உடையாய்! திறல் உடையாய்!* செற்றார்க்கு
வெப்பம் கொடுக்கும் விமலா! துயில் எழாய்*
செப்பு அன்ன மென் முலைச் செவ்வாய்ச் சிறு மருங்குல்*
நப்பின்னை நங்காய்! திருவே! துயில் எழாய்*
உக்கமும் தட்டொளியும் தந்து உன் மணாளனை*
இப்போதே எம்மை நீராட்டேலோர் எம்பாவாய். 20

முப்பத்து மூவர்-முப்பத்து மூன்றுபேரைப்பிரதானராக உடைய முப்பத்து முக்கோடி தேவர்கள், கப்பம்—நடுக்கம். கலியே!—மிடுக்கனே, செப்பம்—நேர்மை, திறல்—வல்லமை, உக்கம்—விசிறி, தட்டொளி—கண்ணாடி, திருவே நப்பின்னை என்கிறார்கள் அகங்கார மமகாரங்களை நீக்கி, சொரூப ஞானத்தைத் தந்து உனக்கு அடங்கிய ஈச்வரனை எங்களோடு சேர்ப்பிக்கவேண்டும் என்கிறார்கள்.

43 ஏற்ற கலங்கள் எதிர் பொங்கி மீது அளிப்ப*
மாற்றாதே பால் சொரியும் வள்ளல் பெரும் பசுக்கள்*
ஆற்றப் படைத்தான் மகனே! அறிவுறாய்*
ஊற்றம் உடையாய்! பெரியாய்!* உலகினில்
தோற்றமாய் நின்ற சுடரே! துயில் எழாய்*
மாற்றார் உனக்கு வலி தொலைந்து உன் வாசற்கண்*
ஆற்றாது வந்து உன் அடிபணியுமா போலே*
போற்றி யாம் வந்தோம் புகழ்ந்து-ஏலோர் எம்பாவாய். 21

பசுக்கள்—ஆசார்யர்கள். மகனே.—ஞானநிறைவுடைய சிஷ்யர்களை மிகுதியாகவுடைய வள்ளல் தன்மையினரான ஆசார்யருக்கு அடங்கி நடப்பவனே. ஊற்றமுடையாய்—அடியாரைக் காப்பதில் உறுதியுடையவனே.

44 அங்கண் மா ஞாலத்து அரசர்* அபிமான
பங்கமாய் வந்து நின் பள்ளிக்கட்டிற் கீழே*
சங்கம் இருப்பார் போல் வந்து தலைப்பெய்தோம்*
கிங்கிணிவாய்ச் செய்த தாமரைப் பூப் போலே*
செங்கண் சிறுச் சிறிதே எம்மேல் விழியாவோ?*
திங்களும் ஆதித்தியனும் எழுந்தாற்போல்*
அங்கண் இரண்டும்கொண்டு எங்கள்மேல் நோக்குதியேல்*
எங்கள்மேல் சாபம் இழிந்து—ஏலோர் எம்பாவாய். 22

எங்கள்மேல் சாபம் (பாவம்) நீங்கும்படி திங்களும் ஞாயிறும் தோன்றினால் போல் அழகிய இருகண்களால் நோக்கி அருள்க என்கிறார்கள்.

45 ** மாரி மலை முழைஞ்சில் மன்னிக் கிடந்து உறங்கும்*
சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீ விழித்து*
வேரி மயிர் பொங்க எப்பாடும் பேர்ந்து உதறி*
மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டு*
போதருமா போலே நீ பூவைப்பூ வண்ணா!* உன்
கோயில் நின்று இங்ஙனே போந்தருளி* கோப்பு உடைய
சீரிய சிங்காசனத்து இருந்து* யாம் வந்த
காரியம் ஆராய்ந்து அருள்—ஏலோர் எம்பாவாய். 23

மாரி—மழைக்காலத்தில், மலை முழைஞ்சில்—மலைக் குகையில், —அறிவுற்று—உறக்கம் நீங்கி, வேரி—மணம், சிங்காசனத்திலிருந்து சொல்லுவது மாறாது உறுதி அளிக்கும் என்பதைக் குறிக்கும்.

46 ** அன்றுஇவ் உலகம் அளந்தாய்! அடி போற்றி!
சென்று அங்குத் தென்னிலங்கை செற்றாய்! திறல் போற்றி!*
பொன்றச் சகடம் உதைத்தாய்! புகழ் போற்றி!*
கன்று குணிலா எறிந்தாய்! கழல் போற்றி!
குன்று குடையா எடுத்தாய்! குணம் போற்றி!*
வென்று பகை கெடுக்கும் நின்கையில் வேல் போற்றி!*
என்று என்று உன் சேவகமே ஏத்திப் பறை கொள்வான்*
இன்று யாம் வந்தோம் இரங்கு—ஏலோர் எம்பாவாய். 24

அடிபோற்றி—வாமனன் திருவடி பல்லாண்டு வாழ்க. செற்றாய்—அழித்த (இராமனே), திறல்—மிடுக்கு, கன்று குணிலா—

கன்றுவடிவாய் வந்த வத்சாசுரனை எறிதடியாக, எறிந்தாய்— விளமரமாய் நின்ற கபித்தாசுரன்மேல் வீசியபோது தூக்கிய, கழல்- திருவடிகள். குன்றைக்குடையாக எடுத்துக் கடுமழையால் நலியாதபடி உயிர்களைக்காத்ததும், அவ்வாறு தீங்கு செய்த இந்திரனை அழிக்காமல் விட்டதும் குணம். சேவகம்—வீரச் செயல்கள்.

47 ஒருத்தி மகனாய்ப் பிறந்து* ஓர் இரவில்
ஒருத்தி மகனாய் ஒளித்து வளர*
தரிக்கிலான் ஆகித் தான் தீங்கு நினைந்த*
கருத்தைப் பிழைப்பித்துக் கஞ்சன் வயிற்றில்*
நெருப்பு என்னநின்ற நெடுமாலே!* உன்னை
அருத்தித்து வந்தோம் பறை தருதி யாகில்*
திருத் தக்க செல்வமும் சேவகமும் யாம் பாடி*
வருத்தமுந் தீர்ந்து மகிழ்ந்து—ஏலோர் எம்பாவாய். 25

ஒருத்தி—ஒப்பற்றவள். தீங்கு நினைந்த கஞ்சன்—பூதனை சகடம், கொக்கு, கன்று, கழுதை, குதிரை, விளாமரம், குருந்தமரம். குவலயாபீடயானை, மல்லர்கள் முதலிய ஏவிகொல்ல நினைத்த கஞ்சன்; நெடுமாலே—இவ்வளவு துன்பங்களும் நீ படவேண்டிற்று, உன் மீது அன்பு கொண்டாரிடத்து வந்து கலந்து பரிமாற வேண்டு மென்று நீ கொண்ட அளவிலா காதலே அன்றோ! உன்னை அருத்தித்து வந்தோம்—உன்னையே விரும்பி இரந்து வந்தோம்.

48 மாலே! மணிவண்ணா! மார்கழி நீர் ஆடுவான்*
மேலையார் செய்வனகள் வேண்டுவன கேட்டியேல்*
ஞாலத்தை எல்லாம் நடுங்க முரல்வன*
பால் அன்ன வண்ணத்து உன் பாஞ்சசன்னியமே*
போல்வன சங்கங்கள் போய்ப்பாடு உடையனவே*
சாலப் பெரும்பறையே பல்லாண்டு இசைப்பாரே*
கோலவிளக்கே. கொடியே, விதானமே*
ஆலின் இலையாய்! அருள்—ஏலோர் எம்பாவாய். 26

மாலே—ஆசைப் பெருக்கை உடையவனே! போய்ப்பாடு உடையன—மிக்க பெருமை உடையன. விதானம்—மேல்கட்டி. பகவானை அடைவதற்கு வேண்டிய சாதனங்களை வேண்டிக் கொள்ளுதல். மாலே, மணிவண்ணா என்றதனால் எம்பெருமானது எளிமையையும், ஆலின் இலையாய் என்றதனால் பிரளய காலத்தில் உயிர்களைக்காப்பவன் அவனாகையாலே, வேறொரு துணை வேண்டாத உபாயத்தையும், சங்க ஒலி ஓங்கார சேஷத்வ

ஞானத்தையும், பறை—நம:சப்தார்த்தமான பாரதந்தர்யத்தையும், பல்லாண்டிசைப்பார்—சாத்துவிக சகவாசத்தையும், விளக்கு—பகவத்சேஷத்வத்தைப் பிரகாசப் படுத்துகிற பாகவதசேஷத்வத்தையும்,கொடி—சேஷத்வ இலட்சணமான கைங்கர்யத்தையும், விதானம்— 'அக்கைங்கர்யத்தின் பயன் அனுபவிப்பவன் நான்' என்ற புத்தியின் (நீக்கம்) நிவ்ருத்தியையும் (கைங்கர்யத்தில் களை அறுத்தல்) காட்டும் என்பர்.

49 **கூடாரை வெல்லும் சீர்க் கோவிந்தா! உன்தன்னைப்
பாடிப் பறை கொண்டு யாம் பெறு சம்மானம்*
நாடு புகழும் பரிசினால் நன்றாக*
சூடகமே, தோள்வளையே, தோடே, செவிப்பூவே*
பாடகமே, என்று அனைய பல் கலனும் யாம் அணிவோம்*
ஆடை உடுப்போம், அதன் பின்னே பாற் சோறு
மூட* நெய் பெய்து முழங்கை வழிவார*
கூடியிருந்து குளிர்ந்து—ஏலோர் எம்பாவாய். 27

சீர் கோவிந்தா — சீர் — குணம். கூடாரை வெல்லும் — அடிபணியாதாரை வெல்லும் — கூடினவரிடத்துத் தோற்கும் என்றபடி. பறை—கைங்கரியம். சம்மானம், சூடகமே—காப்பே; தோள்வளையே — திருவிலச்சனையே. தோடே — திருமந்திரமே; செவிப்பூவே — துவயமே; பாடகமே — பாதகடகம் — சரமசுலோகமே (சரணாகதியைக் காட்டும் திருவடி) இம்மூன்று இரகசியத்தாலும் ஞானம், பக்தி, வைராக்கியங்களைச் சொல்லுகிறது. சேஷத்வஞானமான ஆடை உடுப்போம்; அதற்கு மேலே பால்சோறு (கைங்கர்யமானது) மூடநெய்பெய்து—மறையும்படி பாரதந்திரியத்தை (மணம்) வெளியிட்டு; கூடி இருந்து — போக்தாவான உன்னோடு போக்யரான நாங்கள் ஒன்றுபட்டிருந்து, இத்தனை நாள் பிரிந்திருந்த வருத்தமெல்லாம் தீர்ந்து குளிர்ந்திருக்கப்பெறுவது. இதுவே எம்பெருமானான உன்னிடத்து யாம் பெறும் சம்மானம் என்றபடி.

50 **கறவைகள் பின் சென்று கானம் சேர்ந்து உண்போம்*
அறிவு ஒன்றும் இல்லாத ஆய்க் குலத்து* உன் தன்னைப்
பிறவி பெறுந்தனை புண்ணியம் யாம் உடையோம்*
குறைவு ஒன்றும் இல்லாத கோவிந்தா!* உன் தன்னோடு
உறவேல் நமக்கு இங்கு ஒழிக்க ஒழியாது*
அறியாத பிள்ளைகளோம் அன்பினால், உன் தன்னைச்
சிறுபேர் அழைத்தனவும் சீறியருளாதே*
இறைவா! நீ தாராய் பறை—ஏலோர் எம்பாவாய்.

இந்தப்பாசுரத்தில் துவயத்தின் முன் பகுதிப் பொருளான உபாய சொரூபம் (நெறி—வழி) வெளியிடப் படுகிறது. கறவைகள்... ஆய்க்குலம்— ஆகார சுத்தி இல்லாமல் கண்டபடி உண்பதனால் ஞானம் பக்தி யோகங்களுக்கு உரிய அறிவும் இல்லை. ஆனால் உன்னைத்தவிர வேறொன்றை அறியாதவர்கள். விரும்பாதவர்கள். எங்களோடு கலந்து பழக எளிய கோவிந்தனாக வந்து எங்கள் குலத்தில் தோன்றிய உன்னை நாராயணன், வைகுந்தன் என்ற மேன்மையான பெயரிட்டு அழைத்ததுக்குக் கோபிக்காமல், உன்னோடு உண்டான சம்பந்தம் (உறவு) உன்னாலும் விட ஒண்ணாது; எங்களாலும் விட ஒண்ணாது; இருவரும் சேர்ந்து முயன்றாலும் விட ஒண்ணாதது. அதனால் தலைவா! எங்கள் விருப்பத்தைத் (பறை) தந்தருளாய் என்றபடி.

51 ** சிற்றஞ் சிறுகாலே வந்து உன்னைச் சேவித்து* உன்
பொற்றாமரை அடியே போற்றும் பொருள் கேளாய்*
பெற்றம் மேய்த்து உண்ணும் குலத்தில் பிறந்து* நீ
குற்றேவல் எங்களைக் கொள்ளாமல் போகாது*
இற்றைப் பறைகொள்வான் அன்று காண் கோவிந்தா!*
எற்றைக்கும் ஏழ் ஏழ் பிறவிக்கும் உன்தன்னோடு
உற்றோமே ஆவோம்; உனக்கே நாம் ஆட்செய்வோம்*
மற்றை நம்காமங்கள் மாற்று—ஏலோர் எம்பாவாய். 29

இப்பாசுரத்தில் துவயத்தின் பின்பகுதிப் பொருளான உபேய சொரூபம் (வாழ்வு—பேறு) வெளியிடப்படுகிறது. கோவிந்தன்—காப்பவன்—ரக்ஷிப்பவன். திருப்பாவை நோன்பின் நோக்கத்தை—உயிர்கள் அடைய வேண்டிய பேற்றை "கோவிந்தா! நாங்கள் இன்று கொடுக்கிற சம்மானங்களைப் (பறை) பெற்றுக்கொள்ள வந்தோமல்லோம்காண்! காலம் உள்ள அளவும் (எற்றைக்கும்) தேவரீருடைய எவ்வெவ் அவதாரங்களிலும் (ஏழ்ஏழ்பிறவிக்கும்) உறவுடையவர்களாகக் கடவோம்; உனக்கு மாத்திரமே அடிமை செய்யக் கடவோம்; எங்களுடைய மற்றைய விருப்பங்களைத் (காமங்கள்) தவிர்த்து அருளவேணும் என்று வேண்டுகிறார்கள்.

52 ** வங்கக் கடல் கடைந்த மாதவனைக் கேசவனை*
திங்கள் திருமுகத்துச் சேயிழையார் சென்று இறைஞ்சி*
அங்கப் பறைகொண்ட ஆற்றை* அணி புதுவைப்
பைங்கமலத் தண் தெரியல் பட்டர்பிரான் கோதை சொன்ன*
சங்கத் தமிழ்மாலை முப்பதும் தப்பாமே*
இங்கு இப்பரிசு உரைப்பார் ஈரிரண்டு மால் வரைத் தோள்*
செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலால்
எங்கும் திருவருள் பெற்று இன்புறுவர் எம்பாவாய். 30

உயிர்களின் குற்றத்தைப் பொறுப்பிக்கைக்கும் வேண்டுவன வற்றைக் கொடுக்கைக்குமாக அகலாதுறையும் மாதையுடையவன் மாதவன். மாதவன் என்பதும் ஸ்ரீமத் என்பதும் ஒருபொருளன (திருவா. 10-5-7) திருப்பாவையைக் கற்பவர்கள் திருமால் திருவருளால் இம்மையிலும் மறுமையிலும் இன்பத்தைப் பெறுவர் என்று நூற்பயனைத் தெரிவித்த படி.

ஸ்ரீ ஆண்டாள் திருவடிகளே சரணம்

★ திருமஞ்சன காலத்தில் சேவிக்கும் பாசுரம்-நீராட்டம்

53 **வெண்ணெய் அளைந்த குணுங்கும்
விளையாடு புழுதியும் கொண்டு*
திண்ணென இவ்விரா வுன்னைத்
தேய்த்துக் கிடக்கநான் ஒட்டேன்*
எண்ணெய் புளிப்பழங் கொண்டிங்கு
எத்தனை போதுமிருந்தேன்*
நண்ணல் அரிய பிரானே!
நாரணா! நீராட வாராய்

பெரியாழ்வார் திருமொழி 2-4-1

54 **திண்ணார்வெண் சங்குடையாய்! திருநாள்
திருவோண மின்றேழு நாள்* முன்
பண்ணேர் மொழியாரைக் கூவி முளையட்டிப்
பல்லாண்டுகூறு வித்தேன்*
கண்ணாலஞ் செய்யக் கறியும் கலத்தது
அரிசியும் ஆக்கி வைத்தேன்*
கண்ணா! நீ நாளைத்தொட்டுக்கன்றின் பின்போகேல்
கோலஞ்செய் திங்கேயிரு*

பெரியாழ்வார் திருமொழி 3-3-9

**மங்கல சடங்குகளிலும், ஆலம் சுற்றும் பொழுதும் மங்களா சாசனம் செய்யும் பாசுரமாக அனுசந்திப்பது வழக்கம்.

55 முன்பொலா இராவணன் தன்
முதுமதி ளிலங்கை வேவித்து*
அன்பினால் அனுமன் வந்தாங்
கடியிணை பணிய நின்றார்க்கு*
என்பெலாம் உருகி உக்கிட்டு
என்னுடை நெஞ்ச மென்னும்*
அன்பினால் ஞான நீர்கொண்டு
ஆட்டுவன் அடியனேனே. திருக்குறுந்தாண்டகம்-15

56 சூட்டுநன் மாலைகள் தூயன ஏந்தி*
விண் ணோர்கள் நன்னீர்
ஆட்டியந் தூபம் தராநிற்கவே அங்கு*
ஓர் மாயையினால்
ஈட்டிய வெண்ணெய் தொடுஉண்ணப்
போந்து இமிலேற்றுவன் கூன்
கோட்டிடை யாடினை கூத்து*
அட லாயர்தம் கொம்பினுக்கே. திருவிருத்தம்-21

★ பூச்சூட்டல்

57 **ஆனிரை மேய்க்கநீ போதி,
அருமருந் தாவ தறியாய்*
கானகம் எல்லாம் திரிந்து உன்*
கரிய திருமேனி வாட*
பானையிற் பாலைப் பருகிப்
பற்றாதார் எல்லாம் சிரிப்ப*
தேனில் இனிய பிரானே!
செண்பகப் பூச்சூட்ட வாராய்.

58 செண்பகம் மல்லிகை யோடு
செங்கழு நீர் இரு வாட்சி*
எண்பகர் பூவும் கொணர்ந்தேன்
இன்றிவை சூட்டவா என்று*
மண்பகர் கொண்டானை ஆய்ச்சி
மகிழ்ந்துரை செய்தஇம் மாலை*
பண்பகர் வில்லிபுத்தூர்க்கோன்
பட்டர்பிரான் சொன்ன பத்தே.
பெரியாழ்வார் திருமொழி 2-7-10

59 மாயமான் மாயச் செற்று
மருதிற நடந்து* வையம்
தாயமா பரவை பொங்கத்
தடவரை திரித்து* வானோர்க்
கீயுமால் எம்பி ரானார்க்
கென்னுடைச் சொற்க ளென்னும்*
தூயமா மாலை கொண்டு
சூட்டுவன் தொண்ட னேனே,
திருக்குறுந்தாண்டகம்–16

★ காப்பிடல்

60 **இந்திர னோடு பிரமன்
ஈசன் இமையவ ரெல்லாம்*
மந்திர மாமலர் கொண்டு
மறைந்துஉவ ராய்வந்து நின்றார்*
சந்திரன் மாளிகை சேரும்
சதுரர்கள் வெள்ளறை நின்றாய்*
அந்தியம் போதிது வாகும்;
அழகனே! காப்பிட வாராய்*
பெரியாழ்வார் திருமொழி 2-8-1

★ தூபம் சாம்பராணி காட்ட சேவிக்கும் பாசுரம்

61 பரிவதி லீசனைப் பாடி—விரிவது மேவ லுறுவீர்!
பிரிவகை யின்றிநன் னீர்தூய்—புரிவது வும்புகை பூவே.

62 வகையால் மனமொன்றி மாதவனை* நாளும்
புகையால் விளக்கால் புதுமலரால் நீரால்*
திசைதோ றமரர்கள் சென்றிறைஞ்ச நின்ற*
தகையான் சரணம் தமர்கட்கோர் பற்றே.
திருவாய்மொழி 1-6-1, 10-4-1

★ தீபம் காட்ட சேவிக்கும் பாசுரம்

63 **வையம் தகளியா வார்கடலே நெய்யாக*
வெய்ய கதிரோன் விளக்காக*—செய்ய
சுடராழி யான்அடிக்கே சூட்டினேன் சொன் மாலை*
இடராழி நீங்குகவே என்று.—பொய்கையாழ்வார்

64 **அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக*
இன்புருகு சிந்தை இடுதிரியா*—நன்புருகி
ஞானச்சுடர் விளக்கேற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ்புரிந்த நான், —பூதத்தாழ்வார்

65 **திருக்கண்டேன்; பொன் மேனி கண்டேன்* திகழும்
அருக்கன் அணிநிறமும் கண்டேன்*—செருக்கிளரும்
பொன்னாழி கண்டேன்; புரிசங்கம் கைக்கண்டேன்*
என்னாழி வண்ணன்பால் இன்று. —பேயாழ்வார்,

★ கருப்பூரம் காட்ட சேவிக்கும் பாசுரம்

பல்லாண்டு பல்லாண்டு—(எண். 1-2)

★ ஆடை அணி அலங்கார சாத்துப்படி செய்து மலரிடும் பாசுரம்

66 பூசும் சாந்தென் நெஞ்சமே:
புனையும் கண்ணி எனதுடைய*
வாச கம்செய் மாலையே;
வான்பட் டாடையும்அஃதே*
தேச மான அணிகலனும்
என்கை கூப்புச் செய்கையே*
ஈசன் ஞாலம் உண்டுமிழ்ந்த
எந்தை ஏகமூர்த்திக்கே.

திருவாய்மொழி 4-3-2

★★திருஅமுது (ப்ரசாதம்) கண்டருளப் பண்ணும் பாசுரம்

67 நாறு நறும்பொழில்மா
லிருஞ் சோலை நம்பிக்கு* நான்
நூறு தடாவில்வெண்ணெய்
வாய் நேர்ந்து பராவிவைத்தேன்*
நூறு தடாநிறைந்த
அக்கார வடிசில்சொன்னேன்*
ஏறு திருவுடையான்
வந்திவை கொள்ளுங்கொலோ!

68 இன்று வந் தித்தனையும்
அமுதுசெய் திடப்பெறில்* நான்
ஒன்றுநூ றாயிரமாக்
கொடுத் துப்பின்னும் ஆளும்செய்வன்*
தென்றல் மணங்கமழும்
திரு மாலிருஞ் சோலைதன்னுள்
நின்ற பிரான்* அடியேன்
மனத் தேவந்து நேர்படிலே.

நாச்சியார் திருமொழி 9,6,7

கூடாரை வெல்லும்—திருப்பாவை. (எண். 49)

★அடைக் காயமுது செய்விக்கும் பாசுரம்

69 போய்ப்பா டுடையநின் தந்தையும் தாழ்த்தான்
பொருதிறல் கஞ்சன் கடியன்*
காப்பாரு மில்லை கடல்வண்ணா! உன்னைத்
தனியேபோ யெங்கும் திரிதி*

பேய்ப்பால் முலையுண்ட பித்தனே! கேசவ
நம்பீ! உன்னைக்காது குத்த*
ஆய்ப்பாலர் பெண்டுகள் எல்லாரும் வந்தார்;
அடைக்காய் திருத்தி நான் வைத்தேன்.
பெரியாழ்வார் திருமொழி 2-3-1

★மந்திர புஷ்பம் சமர்ப்பிக்கும் பாசுரம்

70 சென்றால் குடையாம் இருந்தால்சிங் காசனமாம்*
நின்றால் மரவடியாம் நீள்கடலுள்*—என்றும்
புணையாம் மணிவிளக்காம் பூம்பட்டாம் புல்கும்
அணையாம், திருமாற் கரவு.
பொய்கையாழ்வார்-மு.தி, அ53.

★ தீர்த்தமாடுதல்

71 ஆயிரம் தோள்பரப்பி முடியாயிர மின்னிலக*
ஆயிரம் பைந்தலைய அனந்தசயன னாளும்மலை*
ஆயிரம் ஆறுகளும் சுனைகள்பல வாயிரமும்*
ஆயிரம் பூம்பொழிலும் உடை மாலிருஞ் சோலையதே.
பெரியாழ்வார் திருமொழி 4-3-10

72 இலைத்தலைச் சரம்துரந் திலங்கைகட் டழித்தவன் *
மலைத்தலைப் பிறந்திழிந்து வந்துநுந்து சந்தனம்*
குலைத்தலைத் திறுத்தெறிந்த குங்குமக் குழம்பினோடு*
அலைத்தொழுகு காவிரி அரங்கமேய அண்ணலே*
திருச்சந்தவிருத்தம்-54

★ துயிலுமுன் சேவிப்பது

73 நாகணைமிசை நம்பிரான் சரணே
சரண்நமக் கென்று* நாடொறும்
ஏக சிந்தைய னாய்க்குருகூர்ச்சடகோபன் மாறன்*
ஆக நூற்றஅந் தாதி ஆயிரத்துள்
இவையுமோர் பத்தும் வல்லார்*
மாக வைகுந்தத்து மகிழ்வெய்துவர் வைகலுமே.
திருவாய்மொழி 5-10-11

திருமலைநம்பிகள் அருளியதிருப்பாணாழ்வார் தனியன்

காட்டவே கண்ட பாத கமலம்நல் லாடை யுந்தி*
தேட்டரு முதர பந்தம் திருமார்பு கண்டம் செவ்வாய்*
வாட்டமில் கண்கள் மேனி முனியேறித் தனிபுகுந்து*
பாட்டினால் கண்டு வாழும் பாணர்தாள் பரவி னோமே

★ஸ்ரீ திருப்பாணாழ்வார் அருளிய அமலனாதிபிரான்—10.

74 **அமலனாதிபிரான் அடியார்க்கு என்னை ஆட்படுத்த
விமலன்* விண்ணவர்கோன் விரையார்பொழில் வேங்கடவன்*
நிமலன் நின்மலன் நீதிவானவன் நீள்மதிளரங்கத் தம்மான்* திருக்
கமலபாதம் வந்தென் கண்ணினுள்ளன ஒக்கின்றதே.

75 **உவந்த வுள்ளத்தனாய் உலகமளந்து அண்டமுற
நிவந்த நீண்முடியன் அன்றுநேர்ந்த நிசாசரரை*
கவர்ந்த வெங்கணைக் காகுத்தன் கடியார்பொழில் அரங்கத் தம்மான்* அரைச்
சிவந்த ஆடையின்மேல் சென்றதாமென சிந்தனையே.

76 **மந்திபாய் வடவேங்கட மாமலை* வானவர்கள்
சந்திசெய்ய நின்றான் அரங்கத் தரவி னணையான்*
அந்திபோல் நிறத்தாடையும் அதன்மேல் அயனைப் படைத்ததோரெழில்
உந்திமேல தன்றோ அடியே னுள்ளத் தின்னுயிரே.

77 சதுரமா மதிள்சூழ் இலங்கைக்கு இறைவன் தலைபத்து
உதிரவோட்டி* ஓர் வெங்கணை உய்த்தவன் ஓதவண்ணன்*
மதுரமா வண்டுபாட மாமயிலா டரங்கத் தம்மான்* திருவயிற்று*
உதரபந்தனம் என் உள்ளத்துள் நின்றுலாகின்றதே.

78 பாரமாய பழவினைப் பற்றறுத்து* என்னைத்தன்
வாரமாக்கி வைத்தான் வைத்தன்றி யென்னுள் புகுந்தான்*
கோர மாதவம் செய்தனன்கொல் அறியேன் அரங்கத்தம் மான்* திரு
வார மார்பதன்றோ அடியேனை ஆட்கொண்டதே.

79 துண்ட வெண்பிறையன் துயர் தீர்த்தவன்* அஞ்சிறைய
வண்டு வாழ்பொழில்சூழ் அரங்கநகர் மேயஅப்பன்*
அண்ட ரண்ட பகிரண்டத்து ஒரு மாநிலம் எழுமால்வரை, முற்றும்
உண்ட கண்டம் கண்டீர்! அடியேனை உய்யக் கொண்டதே,

80 கையினார் சுரிசங்கன லாழியர்* நீள்வரைபோல்
மெய்யனார். துளபவிரையார் கமழ் நீண்முடி எம்
ஐயனார்* அணிஅரங்கனார் அரவினணைமிசைமேய மாயனார்
செய்யவா யையோ என்னைச் சிந்தை கவர்ந்ததுவே.

81 பரியனாகிவந்த அவுணன் உடல் கீண்ட* அமரர்க்கு
அரியஆதிப் பிரான் அரங்கத் தமலன் முகத்து*
கரியஆகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி*
நீண்டவப்
பெரியவாய கண்கள் என்னைப் பேதைமை செய்தனவே.

82 ** ஆலமா மரத்தின் இலைமே லொருபா லகனாய்*
ஞாலமேழு முண்டான் அரங்கத் தரவி னணையான்*
கோலமா மணியாரமும் முத்துத் தாமமும்
முடிவில்லதோரெழில்*
நீலமேனி ஐயோ! நிறைகொண்டது என் நெஞ்சினையே.

83 **கொண்டல் வண்ணனைக் கோவல னாய்வெண்ணெய்
உண்ட வாயன்* என்னுள்ளம் கவர்ந்தானை*
அண்டர்கோன் அணியரங்கன் என் னமுதினைக்
கண்ட கண்கள்* மற்றொன்றினைக் காணாவே.

முதல் மூன்று பாசுரங்களும் அ, உ, ம என்ற எழுத்துக்களில் தொடங்கி ஓம் எனும் பிரணவப் பொருளை வெளியிடுகிறது.

1. அமலன்—மிகவும் தூயனாய், ஆதி—உலக தோற்றத்திற்குக் காரணனாய், பிரான்—தலைவனாய்—உபகாரகனாய், அடியார்க்கு—பாகவதர்களுக்கு, என்னை—இழிந்த என்னை ஆள்படுத்த ஆட்படுத்துகையாலே வந்த, விமலன்—சிறந்த புகழொளியுடை—யனாய் விண்ணவர்கோன்—நித்ய சூரிகளுக்குத் தலைவனாக இருந்து வைத்து, (தன்னைப் பற்றினவர்க்காக) விரை ஆர்பொழில் வேங்கடவன்—மணம் நிறைந்த சோலைகளையுடைய திருவேங்கட மலையில் வந்து தங்குமவனாய், நிமலன்—ஆச்ரயிப்பார்க்கு அரியனாய் இருக்கையாகிற குற்றம் அற்று, ஆச்ரித பாரதந்திரியத்தை வெளியிட்டு நிற்குமவனாய், நின்மலன்— அடியாருடைய குற்றத்தை காண்கையாகிற தோஷமில்லாத வத்சலனாய், நீதிவானவன்—சேஷசேஷி முறை வழுவாதபடி நியாயமே செல்லும் நிலமான பரமபதத்திற்கு நிர்வாககனாய் இருந்து கொண்டு, நீள்மதில் அரங்கத்து அம்மானாய் வந்தவனது திருவடித் தாமரைகள் என் கண்ணின் உள்ளனபோல் ஒத்திருக்கின்றனவே!

ஸ்ரீமந் நாதமுனிகள் அருளிய மதுரகவியாழ்வார் தனியன்

வேறொன்றும் நானறியேன் வேதம் தமிழ்செய்த*
மாறன் சடகோபன் வண்குருகூர்—ஏறு, எங்கள்
வாழ்வாம் என்றேத்தும் மதுரகவியார் *எம்மை
ஆள்வார் அவரே அரண்.

★ஸ்ரீ மதுரகவியாழ்வார் அருளிய கண்ணிநுண் சிறுத்தாம்பு—11

84 ** கண்ணிநுண் சிறுத்தாம்பினால் கட்டுண்ணப்
பண்ணிய பெருமாயன்* என்னப் பனில்*
நண்ணித் தென்குருகூர் நம்பி என்றக்கால்*
அண்ணிக்கும் அமுதூறும் என் நாவுக்கே.

85 நாவினால் நவிற்றி இன்பம் எய்தினேன்*
மேவினேன் அவன் பொன்னடி மெய்ம்மையே*
தேவு மற்றறியேன் குருகூர் நம்பி*
பாவின் இன்னிசை பாடித் திரிவனே.

86 திரிதந்தாகிலும் தேவ பிரானுடை*
கரியகோலத் திருவுருக்காண்பன் நான்*
பெரியவண் குருகூர் நகர் நம்பிக்காள்
உரியனாய்* அடியேன் பெற்ற நன்மையே.

87 நன்மையால் மிக்க நான் மறையாளர்கள்*
புன்மையாகக் கருதுவர் ஆதலின்*
அன்னையாய் அத்தனாய் என்னை ஆண்டிடும்
தன்மையான்* சடகோபன் என்நம்பியே.

88 நம்பினேன் பிறர் நன்பொருள் தன்னையும்*
நம்பினேன் மடவாரையும் முன்னெலாம்*
செம்பொன்மாடத் திருக்குருகூர் நம்பிக்கு
அன்பனாய் அடியேன் சதிர்த்தேன் இன்றே.

89 இன்று தொட்டும் எழுமையும் எம்பிரான் *
நின்று தன்புகழ் ஏத்த அருளினான்*
குன்ற மாடத் திருக்குருகூர் நம்பி*
என்றுமென்னை இகழ்விலன் காண்மினே.

90 கண்டு கொண்டென்னைக் காரி மாறப்பிரான்*
பண்டை வல்வினை பாற்றி அருளினான்*
எண்டிசையும் அறிய இயம்புகேன்*
ஒண்டமிழ்ச் சடகோபன் அருளையே.

91 அருள் கொண்டாடும் அடியவர் இன்புற*
அருளினான் அவ்வரு மறையின் பொருள்*
அருள் கொண்டு ஆயிரம் இன் தமிழ்ப் பாடினான்*
அருள் கண்டீர் இவ்வுலகினில் மிக்கதே.

92 மிக்கவேதியர் வேதத்தின் உட்பொருள்*
நிற்கப்பாடி என் நெஞ்சுள் நிறுத்தினான்*
தக்க சீர்ச்சடகோபன் என் நம்பிக்கு, ஆள்
புக்க காதல் அடிமைப் பயனன்றே.

93 **பயனன்றாகிலும்* பாங்கலராகிலும்*
செயல் நன்றாகத் திருத்திப் பணிகொள்வான்*
குயில் நின்றால் பொழில்சூழ் குருகூர் நம்பி*
முயல் கின்றேன் உன்றன் மொய்கழற் கன்பையே.

94 **அன்பன் தன்னை அடைந்தவர்கட்கெல்லாம்
அன்பன்* தென்குருகூர் நகர் நம்பிக்கு*
அன்பனாய் மதுரகவி சொன்னசொல்
நம்புவார் பதி* வைகுந்தம் காண்மினே.

இப்பிரபந்தம் நம: சப்தப் பொருளை வெளியிட்டு, சரம புருஷார்த்தமான ஆசார்யனே பேற்றுக்கு வழி (ஆசார்ய நிஷ்டை) என்பதைப் புலப்படுத்துகிறது.

ஸ்ரீ பெரியாழ்வார் திருமொழி 461

95 வண்ண மாடங்கள் சூழ்திருக் கோட்டியூர்*
கண்ணன் கேசவன் நம்பி பிறந்தினில்*
எண்ணெய் சுண்ணம் எதிரெதிர் தூவிட*
கண்ணன் முற்றம் கலந்தள றாயிற்றே.

கண்ணன்—கண்+ண்+அன் "தனிக்குறில் முன் ஒற்று உயிர் வரின் இரட்டும்" உடல்மேல் உயிர்வந்து ஒன்றுவது இயல்பே என்ற நன்னூல் சூத்திரம் 205, 204 விதிப்படி கண்ணன் என்றாகியது. — கண்ணுக்குத் தோன்றி திருவருள் செய்பவன்; அக வாயில் குணங்களுக்கு விளக்கங்களான திருக்கண்களை உடையவன்; கண்ணழகன், உயர்ந்தவன், கண்—ஏழாம் வேற்றுமை இடப்பொருள் உருபு இவனிடமிருந்து தோன்றியவையே எல்லாம்—அகமும் புறமும் இருப்பவன்.

96 கருங்கண் தோகைமயிற் பீலி யணிந்து
கட்டிநன் குடுத்த பீதக ஆடை*
அருங்கல உருவின் ஆயர் பெருமான்
அவனொரு வன்குழ லூதின போது*
மரங்கள் நின்றுமது தாரைகள் பாயும்:
மலர்கள் வீழும்; வளர் கொம்புகள் தாழும்*
இரங்கும், கூம்பும்: திருமால் நின்றநின்ற
பக்கம் நோக்கி அவை செய்யும் குணமே.

97 தன்னடியார் திறத்தகத்துத் தாமரையா
ளாகிலும் சிதகு ரைக்குமேல்*
என்னடியார் அதுசெய்யார் செய்தாரேல்
நன்று செய்தா ரென்பர் போலும்*
மன்னுடைய விபீடணற்காய் மதிளிலங்கைத்
திசைநோக்கி மலர்க்கண் வைத்த*
என்னுடைய திருவரங்கற் கன்றியும்
மற்றொருவர்க் காளா வரே?

98 தேவுடைய மீனமாய் ஆமையாய் ஏனமாய்க் குறளாய்*
மூவுருவில் இராமனாய்க் கண்ணனாய்க் கற்கியாய்
முடிப்பான் கோயில்*
சேவலொடு பெடையன்னம் செங்கமல மலரேறி ஊசலாடி
பூவணைமேல் துதைந்தெழு செம் பொடியாடி
விளையாடும் புனலரங்கமே.

99 துப்புடை யாரை யடைவ தெல்லாம்
சோர்விடத் துத்துணை யாவரென்றே*
ஒப்பிலேன் ஆகிலும் நின்ன டைந்தேன்
ஆனைக்கு நீயருள் செய்தமையால்*
எய்ப்பென்னை வந்து நலியும் போதங்
கேதும்நான் உன்னை நினைக்க மாட்டேன்*
அப்போதைக் கிப்போதே சொல்லி வைத்தேன்
அரங்கத் தரவணைப் பள்ளி யானே!

100 வண்ண மால்வரை யேகுடை யாக
மாரி காத்தவனே! மது சூதா!
கண்ண னே! கரி கோள்விடுத் தானே!
காரணா! களி றட்டபி ரானே!
எண்ணு வார் இடரைக்களை வானே!
ஏத்தரும் பெருங் கீர்த்தியி னானே!
நண்ணி நானுன்னை நாடொறு மேத்தும்
நன்மை யேயருள் செய்எம்பி ரானே!

101 வயிற்றில் தொழுவைப் பிரித்து
வன்புலச் சேவை யதக்கி*
கயிற்றும் அக் காணி கழித்துக்
காலிடைப் பாசங் கழற்றி*
எயிற்றிடை மண்கொண்ட எந்தை
இராப்பக லோதுவித்து* என்னைப்
பயிற்றிப் பணிசெய்யக் கொண்டான்
பண்டன்று பட்டினங் காப்பே.

102 அன்று வயிற்றிற் கிடந்திருந் தேஅடி-
மைசெய்ய லுற்றிருப்பன்*
இன்றுவந் திங்குன்னைக் கண்டு கொண்டேன் இனிப்
போக விடுவதுண்டே*
சென்றங்கு வாணனை ஆயிரந்தோளும்
திருச்சக் கரமதனால்
தென்றித்* திசைதிசை வீழச் செற்றாய்; திரு
மாலிருஞ் சோலைஎந்தாய்.

103 **★சென்னியோங்கு தண்திருவேங்
கடமுடையாய்* உலகு
தன்னைவாழ நின்றநம்பீ!
தாமோதரா! சதிரா!
என்னையும் என்னுடைமையையும் உன்
சக்கரப்பொறி யொற்றிக்கொண்டு*
நின்னருளே புரிந்திருந்தேன்;
இனியென் திருக்குறிப்பே?

104 ★**தடவரைவாய் மிளிர்ந்து மின்னும்
தவள நெடுங்கொடிபோல்*
சுடரொளியாய் நெஞ்சினுள்ளே*
தோன்றுமென் சோதிநம்பீ*
வடதடமும் வைகுந்தமும்
மதில் துவராபதியும்,
இடவகைகள் இகழ்ந்திட்டென்பால்
இடவகை கொண்டனையே.

105 ★**வேயர் தங்கள் குலத்துதித்த
விட்டுசித் தன்மனத்தே*
கோயில்கொண்ட கோவலனைக்
கொழுங்குளிர் முகில்வண்ணனை*

ஆயரேற்றை அமரர்கோவை
அந்தணர்தம் அமுதத்தினை*
சாயைபோலப் பாடவல்லார்
தாமும் அணுக்கர்களே.

**1 முதல் 12 வரை 53, 54, 57, 58, 60, 69, 71 பெரியாழ்வார் திருமொழியைச் சேர்ந்தவை.

ஸ்ரீ ஆண்டாள் அருளிய நாச்சியார் திருமொழி**—143

தனியன்

சூடிக் கொடுத்த சுடர்க்கொடியே தொல்பாவை*
பாடி அருளவல்ல பல்வளையாய்*—நாடிநீ
வேங்கடவற் கென்னை விதியென்ற இம்மாற்றம்
நாங்கடவா வண்ணமே நல்கு—உய்யக் கொண்டார் அருளியது

★பட்டிமேய்ந்து— விருந்தாவனத்தே பரந்தாமனைக் கண்டமை

(கீழேவரும் பத்தும், நல்லிடைசேனை திருவாலயம் ஸ்ரீகண்ண பிரான் ருக்மணி பிராட்டியார் மங்களாசாசனப் பாசுரங்களாகக் கொள்ளப்பட்டு நித்தியானுசந்தானமாயுள்ளது.)

106 **பட்டிமேய்ந்தோர் காரேறு பலதேவற்கோர் கீழ்க்கன்றாய்*
இட்டீறிட்டு விளையாடி இங்கே போதக் கண்டீரே*
இட்டமான பசுக்களை இனிது மறித்து நீரூட்டி*
விட்டுக்கொண்டு விளையாட விருந்தாவனத்தே
கண்டோமே.

107 அனுங்க என்னைப் பிரிவுசெய்து ஆயர்பாடி கவர்ந்துண்ணும்*
குணுங்குநாறிக் குட்டேற்றைக் கோவர்த்தனனைக் கண்டீரே*
கணங்களோடு மின்மேகம் கலந்தாற்போல* வனமாலை
மினுங்கநின்று விளையாட விருந்தாவனத்தே கண்டோமே. 2

108 *மாலாய்ப் பிறந்த நம்பியை மாலேசெய்யும் மணாளனை*
ஏலாப்பொய்கள் உரைப்பானை இங்கே போதக் கண்டீரே*
மேலால் பரந்த வெயில்காப்பான் வினதைசிறுவன்
சிறகென்னும்
மேலாப்பின் கீழ்வருவானை விருந்தாவனத்தே கண்டோமே. 3

109 கார்த்தண் கமலக்கண் ணென்னும் நெடுங்கயிறுபடுத்தி*
என்னை
ஈர்த்துக் கொண்டு விளையாடும் ஈசன்றன்னைக் கண்டீரே*
போர்த்த முத்தின் குப்பாயப் புகர்மால்யானைக்
கன்றேபோல்*
வேர்த்து நின்று விளையாட விருந்தாவனத்தே கண்டோமே. 4

110 மாதவன் என்மணியினை வலையில் பிழைத்த பன்றிபோல்*
ஏதுமொன்றும் கொளத்தாரா ஈசன்றன்னைக் கண்டீரே*
பீதகஆடை உடைதாழப் பெருங்கார்மேகக் கன்றேபோல்*
வீதியார வருவானை விருந்தாவனத்தே கண்டோமே. 5

111 தருமமறியாக் குறும்பனைத் தன்கைச் சார்ங்கம் அதுவே போல்*
புருவவட்ட மழகிய பொருத்தமிலியைக் கண்டீரே*
உருவு கரிதாய் முகம்செய்தாய் உதயப்பருப் பதத்தின்மேல்*
விரியும்கதிரே போல்வானை விருந்தாவனத்தே கண்டோமே. 6

112 பொருத்தமுடைய நம்பியைப் புறம்போலுள்ளும் கரியானை*
கருத்தைப் பிழைத்து நின்றஅக் கருமாமுகிலைக் கண்டீரே*
அருத்தித் தாராகணங்களால் ஆரப்பெருகு வானம் போல்*
விருத்தம் பெரிதாய் வருவானை விருந்தாவனத்தே கண்டோமே. 7

113 ** வெளிய சங்கு ஒன்று உடையானைப் பீதகவாடை உடையானை!
அளிநன் குடையதிருமாலை ஆழியானைக் கண்டீரே*
களிவண்டெங்கும் கலந்தாற் போல் கமழ்பூங்குழல்கள் தடந்தோள்மேல்*
மிளிரநின்று விளையாட விருந்தாவனத்தே கண்டோமே* 8

114 **நாட்டைப் படையென்று அயன்முதலாத் தந்தநளிர்மா மலருந்தி
வீட்டைப் பண்ணிவிளையாடும் விமலன்றன்னைக் கண்டீரே*
காட்டை நாடித்தேனுகனும் களிறும் புள்ளும் உடன் மடிய,
வேட்டை யாடிவருவானை விருந்தாவனத்தே கண்டோமே. 9

115 **பருந்தாள் களிற்றுக்கருள் செய்த பரமன்றன்னை* பாரின்மேல்
விருந்தாவனத்தே கண்டமை விட்டுசித்தன்கோதை சொல்*
மருந்தாமென்று தம்மனத்தே வைத்துக்கொண்டு வாழ்வார்கள்*
பெருந்தாளுடைய பிரானடிக்கீழ்ப் பிரியாதென்றும் இருப்பாரே. 10

(பாசுரம் 277ம் சேர்த்து சேவிக்கவும்)

1. பட்டிமேய்ந்து—காவலில்லாமல் விருப்பப்படி திரிந்து இட்டீறிட்டு—பலவகையான மகிழ்ச்சிக் குறிப்பு. 2. அனுங்க வருந்த. குணுங்கு—வெண்ணெய்மொச்ச நாற்றம். குட்டேற்றை—இளைய காளை போன்றவனை. 4. சணங்களோடு—தோழர் கூட்டத்தோடு 3. மாலாய்—பெண்கள் பக்கலுண்டான காதலே ஒரு வடிவமாய்க் கொண்டு பிறந்த நம்பி. மாலே—காதலை விளைக்கிற மணாளன். வினதை—கருடாழ்வார்தாய் 4. முத்தின் குப்பாயம்—முத்துச் சட்டை, புகர்மால்—ஒளியுடைய பெரிய 7. அருத்தித் தாராகணங்கள்—விரும்பத் தக்க விண்மீன் கூட்டம். 12. விருத்தம்—வட்டம். அளிநன்—தண் அருள் மிகுதியாக 9 அயன்—பிரம்மன், நளிர்—குளிர்ந்த, மா—பெரிய, மலர் உந்தி—நாபீகமலம். விமலன்—நிர்மலனான கண்ண பிரான் 10. பருந்தாள் களிறு—கஜேந்திராழ்வான். பெருந்தாள்—பெருமையுடைய திருவடி.

*'பாசுரம் 67, 68 நாச்சியார் திருமொழியைச் சேர்ந்தவை.

ஸ்ரீ மணக்கால்நம்பிகள் அருளிய பெருமாள் திருமொழி தனியன்

இன்னமுதம் ஊட்டுகேன் இங்கேவா பைங்கிளியே
தென்னரங்கம் பாடவல்ல சீர்ப்பெருமாள்—பொன்னஞ்
சிலைசேர் நுதலியர் வேள் சேலரர்கோன்* எங்கள்
குலசேகரனென்றே கூறு.

ஸ்ரீ குலசேகரப் பெருமாள் அருளிச் செய்த
பெருமாள் திருமொழி—105

116 **இருளிரியச் சுடர்மணிகள் இமைக்கும் நெற்றி
யினத்துத்தி யணிபண மாயிரங்க ளார்ந்த*
அரவரசப் பெருஞ்சோதி யனந்த னென்னும்
அணிவிளங்கு முயர்வெள்ளை யணையைமேவி*
திருவரங்கப் பெருநகருள் தெண்ணீர்ப் பொன்னி
திரைக்கையால் அடிவருடப் பள்ளிகொள்ளும்*
கருமணியைக் கோமளத்தைக் கண்டுகொண்டு என்
கண்ணிணைக ளென்றுகொலோ களிக்கும் நாளே

117 வன்பெரு வானக முய்ய அமரருய்ய
மண்ணுய்ய மண்ணுலகில் மனிசர் உய்ய*
துன்பமிகு துயரகல அயர்வொன் றில்லாச்
சுகம் வளர அகமகிழும் தொண்டர் வாழ*

அன்பொடு தென்திசை நோக்கிப் பள்ளிகொள்ளும்
அணியரங்கன் திருமுற்றத்து* அடியார் தங்கள்
இன்பமிகு பெருங்குழுவு கண்டு யானும்
இசைந்துடனே யென்றுகொலோ இருக்கு நாளே.

118 தேட்டரும் திறல்தேனினைத்
தென்னரங்கனை* திருமாதுவாழ்
வாட்டமில் வனமாலை மார்வனை
வாழ்த்தி மால்கொள் சிந்தையராய்*
ஆட்டமேவி அலந்தழைத்து
அயர்வெய்தும் மெய்யடியார்கள் தம்*
ஈட்டம் கண்டிடக் கூடுமேல்
அதுகாணும் கண்பயனாவதே.

119 ஏறடர்த்ததும் ஏனமாய் நிலங்கீண்டதும்
முன்னிராமனாய்*
மாறடர்த்ததும் மண்ணளந்ததும்
சொல்லிப் பாடி* வண்பொன்னிப்பேர்
ஆறுபோல் வருங்கண்ணநீர் கொண்டு
அரங்கன் கோயில் திருமுற்றம்*
சேறுசெய் தொண்டர் சேவடிச்
செழுஞ்சேறு என்சென்னிக் கணிவனே.

120 **ஊனேறு செல்வத் துடற் பிறவி யான்வேண்டேன்*
ஆனேறேழ் வென்றான் அடிமைத் திறமல்லால்*
கூனேறு சங்கமிடத் தான்தன் வேங்கடத்து*
கோனேரி வாழும் குருகாய்ப் பிறப்பேனே.

121 **செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமாலே*
நெடியானே வேங்கடவா நின்கோயிலின் வாசல்*
அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்தியங்கும்*
படியாய்க் கிடந்துன் பவளவாய் காண்பேனே.

122 **தருதுயரம் தடாயேல் உன் சரணல்லால் சரணில்லை*
விரைகுழுவு மலர்ப்பொழில் சூழ் வித்துவக்கோட்
[டம்மானே
அரிசினத்தால் ஈன்றதாய் அகற்றிடினும்* மற்றவள்தன்
அருள் நினைந்தே அழும்குழவி அதுவேபோன்
[றிருந்தேனே

123 **மன்னுபுகழ்க் கௌசலைதன் மணிவயிறு வாய்த்தவனே*
தென்னிலங்கைக் கோன்முடிகள் சிந்துவித்தாய்*
செம்பொன்சேர்
கன்னிநன் மாமதிள் புடைசூழ் கணபுரத்தென்
கருமணியே*
என்னுடைய இன்னமுதே இராகவனே தாலேலோ.

124 **அங்கணெடு மதிள்புடைசூழ் அயோத்தி என்னும்
அணிநகரத் துலகனைத்தும் விளக்கும் சோதி*
வெங்கதிரோன் குலத்துக்கோர் விளக்காய்த் தோன்றி
விண்முழுதும் உய்யக்கொண்ட வீரன் தன்னை*
செங்கண்நெடுங் கருமுகிலை இராமன் தன்னைத்
தில்லைநகர்த் திருச்சித்ர கூடந் தன்னுள்*
எங்கள் தனிமுதல்வனை எம்பெருமான் தன்னை
என்றுகொலோ கண்குளிரக் காணுநாளே.

திருக்கச்சி நம்பி அருளிய திருமழிசையாழ்வார் தனியன்

தருச் சந்தப் பொழில்தழுவு தாரணியின் துயர்தீர*
திருச் சந்த விருத்தம்செய் திருமழிசைப் பரன்வருமூர்*
கருச் சந்தும் காரகிலும் கமழ் கோங்கும் மணநாறும்*
திருச்சந்தத் துடன்மருவு திருமழிசை வளம்பதியே

125 ஸ்ரீ திருமழிசையாழ்வார் அருளிய திருச்சந்த விருத்தம்—120

பூநிலாய ஐந்துமாய்ப் புனற்கண் நின்ற நான்குமாய்*
தீநிலாய மூன்றுமாய்ச் சிறந்தகால் இரண்டுமாய்*
மீநிலாய தொன்றுமாகி வேறுவேறு தன்மையாய்*
நீநிலாய வண்ண நின்னை யார்நினைக்க வல்லரே.

126 காரொடொத்த மேனிநங்கள் கண்ண விண்ணின்
[நாதனே*
நீரிடத்தரா வணைக் கிடத்திஎன்பர் அன்றியும்*
ஓரிடத்தை யல்லை எல்லைஇல்லை என்பர் ஆதலால்*
சேர்விடத்தை நாயினேன் தெரிந்திறைஞ்சு மாசொலே.

127 **செழுங்கொழும் பெரும் பனிபொழிந்திட*
[உயர்ந்தவேய்
விழுந்துலர்ந் தெழுந்து விண்புடைக்கும் வேங்கடத்துள்
[நின்று*
எழுந்திருந்து தேன்பொருந்து பூம்பொழில்
[தழைக் கொழும்
செழுந்தடங் குடந்தையுள் கிடந்த மாலு மல்லையே*

128 **நடந்த கால்கள் நொந்தவோ நடுங்கஞாலம்
[ஏனமாய்*
இடந்த மெய்குலுங்கவோ விலங்குமால் வரைச்சுரம்*
கடந்த கால் பரந்தகா விரிக்கரைக் குடந்தையுள்*
கிடந்த வா றெழுந்திருந்து பேசு வாழி கேசனே.

129 நின்ற தெந்தை ஊரகத்து இருந்ததெந்தை பாடகத்து*
அன்று வெஃகணைக் கிடந்த தென்னிலாத முன்னெலாம்,
அன்றுநான் பிறந்திலேன் பிறந்தபின் மறந்திலேன்*
நின்றதும் இருந்ததும் கிடந்ததும்என் நெஞ்சுளே.

130 புன்புல வழியடைத்து அரக்கு இலச்சினை செய்து*
நன்புல வழிதிறந்து ஞானநற் சுடர் கொளீஇ*
என்பில் எள்கி, நெஞ்சுஉருகி உள்கனிந்து எழுந்ததோர்*
அன்பில் அன்றி ஆழியானை யாவர்காண வல்லரே?

131 வைதுநின்னை வல்லஆ பழித்தவர்க்கும் மாறில்போர்*
செய்துநின்னை செற்றதீயில் வெந்தவர்க்கும்
[வந்துன்னை*
எய்தலாகும் என்பராதலால் எம்மாய நாயினேன்*
செய்தகுற்றம் நற்றமாக வேகொள் ஞால நாதனே.

132 அத்தனாகி அன்னையாகி ஆளுமெம் பிரானுமாய்*
ஒத்தொவ்வாத பல்பிறப் பொழித்துநம்மை ஆட்
[கொள்வான்*
முத்தனார் முகுந்தனார் புகுந்து நம்முள் மேவினார்*
எத்தினால் இடர்க்கடல் கிடத்தி ஏழை நெஞ்சமே.

(பாசுரம் 72-ம் காண்க.)

ஸ்ரீ தொண்டரடிப்பொடியாழ்வார் அருளிய திருமாலை—45

133 **காவலிற் புலனைவைத்துக் கலிதன்னைக் கடக்கப்
[பாய்ந்து*
நாவலிட் டுழிதருகின்றோம் நமன் தமர் தலைகள்மீதே*
மூவுல குண்டுமிழ்ந்த முதல்வநின் நாமம்கற்ற*
ஆவலிப் புடைமை கண்டாய் அரங்கமா நகருளானே.

134 **பச்சைமா மலைபோல்மேனி பவளவாய்
[கமலச்செங்கண்*
**அச்சுதா அமரரேறே ஆயர்தம் கொழுந்தே
யென்னும்*

சுவை தவிரயான் போய் இந்திர லோகமாளும்*
அச் சுவை பெறினும் வேண்டேன் அரங்கமா
[நகருளானே.

135 வேத நூல் பிராயம்நூறு மனிசர்தாம் புகுவரேலும்*
பாதியும் உறங்கிப் போகும் நின்றதில் பதினையாண்டு*
பேதைபா லகனதாகும் பிணிபசிமூப் புத்துன்பம்*
ஆதலால் பிறவிவேண்டேன் அரங்கமா நக ருளானே.

136 நாட்டினான் தெய்வமெங்கும் நல்லதோர் அருள்
[தன்னாலே*
காட்டினான் திருவரங்கம் உய்பவர்க்கு உய்யும் வண்ணம்
கேட்டிரே நம்பிமீர்காள் கெருடவா கனனும் நிற்க*
சேட்டைதன் மடியகத்துச் செல்வம் பார்த்திருக்
கின்றீரே.

137 ** குடதிசை முடியை வைத்துக் குணதிசை பாதம்
நீட்டி*
வடதிசை பின்பு காட்டித் தென்திசை இலங்கை
[நோக்கி*
கடல்நிறக் கடவுளெந்தை அரவணைத் துயிலுமா கண்டு*
உடலெனக்கு உருகுமாலோ என்செய்கேன்
[உலகத்தீரே

138 ** வளவெழும் தவளமாட மதுரைமா நகரந் தன்னுள்*
கவள மால் யானைகொன்ற கண்ணனை அரங்கமாலை*
துவளத் தொண்டாய தொல் சீர்த் தொண்டரடிப்
[பொடி சொல்*
இளைய புன் கவிதையேலும் எம் பிராற் கினியவாறே.

* அச்சுதன்-தன்னிடம் அடைந்தாரைக் கைவிடாதவன்.

எம்பெருமானார் அருளிய திருமங்கையாழ்வார் தனியன்

வாழி பரகாலன்வாழி கலிகன்றி
வாழி குறையலூர் வாழ்வேந்தன்—வாழியரோ,
மாயோனை வாள்வலியால் மந்திரங்கொள், மங்கையர்கோன்
தூயோன் சுடர்மான வேல்,

ஸ்ரீ திருமங்கையாழ்வார் அருளிய பெரிய திருமொழி—1084

139 **வாடினேன் வாடி வருந்தினேன் மனத்தால்
பெருந் துயர் இடும்பையில் பிறந்து*
கூடினேன்கூடி இளையவர்தம்மோ
டவர்தரும் கலவியே கருதி*
ஓடினேன்ஓடி உய்வதோர் பொருளால்
உணர்வெனும் பெரும்பதந்தெரிந்து,
நாடினேன்நாடி நான்கண்டு கொண்டேன்
நாராயணா என்னும் நாமம்.

140 **எம்பிரான் எந்தை என்னுடைச் சுற்றம்
எனக்கரசு என்னுடை வாழ்நாள்*
அம்பினால் அரக்கர் வெருக்கொள நெருக்கி
அவர்உயிர் செகுத்தஎம் அண்ணல்*
வம்புலாஞ் சோலை மாமதிள் தஞ்சை
மாமணிக்கோயிலே வணங்கி*
நம்பிகாள் உய்ய நான் கண்டுகொண்டேன்
நாராயணா என்னும் நாமம்,

141 **குலம்தரும் செல்வம் தந்திடும் அடியார்
படுதுயர் ஆயின எல்லாம்*
நிலந்தரஞ் செய்யும் நீள்விசும்பு அருளும்
அருளொடு பெருநிலம் அளிக்கும்*
வலந்தரும் மற்றுந்தந்திடும் பெற்ற
தாயினும்ஆயினசெய்யும்*
நலந்தரும் சொல்லை நான் கண்டுகொண்டேன்
நாராயணா என்னும் நாமம்.

142 **மஞ்சுலாஞ் சோலை வண்டறை மாநீர்
மங்கையார் வாள்கலிகன்றி*
செஞ்சொலால் எடுத்த தெய்வநன் மாலை
இவை கொண்டு சிக்கெனத் தொண்டீர்!
துஞ்சும்போது அழைமின் துயர்வரில் நினைமின்
துயரிலீர் சொல்லிலும் நன்றாம்*
நஞ்சுதான் கண்டீர் நம்முடை வினைக்கு
நாராயணா என்னும் நாமம்.

143 அங்கண் ஞாலம் அஞ்ச அங்கோர் ஆளரியாய்* அவுணன்
பொங்க ஆகம் வள்ளுகிரால் போழ்ந்த புனிதன் இடம்

பைங்கண் ஆளைக்கொம்பு கொண்டு பத்திமையால்*
[அடிக்கீழ்ச்
செங்கண் ஆளி யிட்டிறைஞ்சும் சிங்கவேள் குன்றமே.

144 தாயே தந்தை என்றும் தாரமே கிளைமக்கள் என்றும்*
நோயே பட்டொழிந்தேன் உன்னைக் காண்பதோர்
[ஆசையினால்,
வேயேய் பூம்பொழில் சூழ் விரையார் திருவேங்கடவா*
நாயேன் வந்தடைந்தேன் நல்கியாளென்னைக்
கொண்டருளே

145 **இன்துணைப் பதுமத் தலர்மகள் தனக்குமின்பன்
நற்புவி தனக்கிறைவன்*
தன்துணை ஆயர்பாவை நப்பின்னை தனக்கிறை
மற்றையோர்க் கெல்லாம்
வன்துணை* பஞ்சபாண்டவர்க்காகி வாயுரை
தூதுசென் றியங்கும்—
என்துணை* எந்தை தந்தை தம்மானைத்
திருவல்லிக் கேணி கண்டேனே.

146 ஏனத்தின் உருவாகி நிலமங்கை எழில்கொண்டான்*
வானத்தில் அவர் முறையால் மகிழ்ந்தேத்தி வலங்
[கொள்ள
கானத்தின் கடல்மல்லைத் தலசயனத் துறைகின்ற*
ஞானத்தின் ஒளிஉருவை நினைவார்என் நாயகரே.

147 மஞ்சாடு வரையேழும் கடல்களேழும்
வானகமும் மண்ணகமும் மற்றும் எல்லாம்*
எஞ்சாமல் வயிற்றடக்கி ஆலின்மேலோர்
இளந்தளிரில் கண்வளர்ந்த ஈசன் தன்னை*
துஞ்சாநீர் வளஞ்சுரக்கும் பெண்ணைத் தென்பால்
தூய நான் மறையாளர் சோமுச் செய்ய*
செஞ்சாலி விளைவயலுள் திகழ்ந்து தோன்றும்
திருக்கோவலூர்—அதனுள் கண்டேன் நானே.

148 மூவ ராகிய ஒருவனை மூவுல குண்டுமிழ்ந் தளந்தானை*
தேவர் தானவர் சென்றுசென் றிறைஞ்சத்தண்
[திருவயிந்திரபுரத்து*
மேவு சோதியை வேல்வலவன் கலிகன்றி விரித்துரைத்த*
பாவு தண்டமிழ் பத்திவை பாடிடப் பாவங்கள்
[பயிலாவே

149 ஒரு குறளாய் இருநிலம் மூவடிமண் வேண்டி
உலகனைத்தும் ஈரடியால் ஒடுக்கி* ஒன்றும்
தருக எனா மாவலியைச் சிறையில் வைத்த
தாடாளன் தாளணைவீர்* தக்ககீர்த்தி
அருமறையின் திரள்நான்கும் வேள்வி ஐந்தும்
அங்கங்கள் அவையாறும் இசைகள் ஏழும்*
தெருவில்மலி விழாவளமும் சிறக்கும் காழிச்
சீராம விண்ணகரே சேர்மின் நீரே

150 செங்கமலத் தயன்அனைய மறையோர்
காழிச்சீராம விண்ணகர் என்செங் கண்மாலை*
அங்கமலத் தடவயல்சூழ் ஆலிநாடன்*
அருள்மாரி அரட்டமுக்கி அடையார் சீயம்*
கொங்குமலர்க் குழலியர்வேள் மங்கைவேந்தன்*
கொற்றவேல் பரகாலன் கலியன் சொன்ன*
சங்கமுகத் தமிழ்மாலை பத்தும் வல்லார்
தடங்கடல் சூழ் உலகுக்குத் தலைவர் தாமே.

151 ஏழை ஏதலன் கீழ்மகன் என்னாதிரங்கி
மற்றவற் கின்னருள் சுரந்து*
மாழை மான்மட நோக்கியுன் தோழி
உம்பி எம்பிஎன் றொழிந்திலை* உகந்து
தோழன் நீயெனக் கிங்கொழி என்ற
சொற்கள் வந்தடியேன் மனத்திருந்திட*
ஆழிவண்ண! நின் அடியிணை யடைந்தேன்
அணிபொழில் திருவரங்கத் தம்மானே.

152 வாதமாமகன் மர்க்கடம் விலங்கு
மற்றோர் சாதி யென்றொழிந்திலை* உகந்து
காதலாதரம் கடலினும் பெருகச்செய்
தகவினுக்கில்லை கைம்மாறென்று*
கோதில் வாய்மையினாயொடுமுடனே
உண்பன்நான் என்ற ஒண்பொருள்* எனக்கும்
ஆதல் வேண்டும் என்றடியிணை அடைந்தேன்
அணி பொழில் திருவரங்கத் தம்மானே

153 மிக்கானை மறையாய் விரிந்த விளக்கை* என்னுள்
புக்கானைப் புகழ்சேர் பொலிகின்ற பொன்மலையை*
தக்கானைக் கடிகைத் தடங்குன்றின் மிசையிருந்த
அக்காரக் கனியை அடைந்துய்ந்து போனேனே.

154 மற்றுமோர் தெய்வம் உளதென் றிருப்பாரோடு
உற்றிலேன்* உற்றதும் உன்னடி யார்க்கடிமை*
மற்றெல்லாம் பேசிலும் நின்திரு எட்டெழுத்தும்
கற்று* நான் கண்ண புரத்துறை யம்மானே!

155 பேயிருக்கு நெடுவெள்ளம் பெருவிசும்பின்
மீதோடிப் பெருகு காலம்*
தாயிருக்கும் வண்ணமே உம்மைத் தன்
வயிற்றிருத்தி உய்யக்கொண்டான்*
போயிருக்க மற்றிங்கோர் புதுத்தெய்வம்
கொண்டாடும் தொண்டீர்* பெற்ற
தாயிருக்க மனைவெந்நீ ராட்டுதிரோ
மாட்டாத தகவற்றீரே.

156 **அணியார் பொழில்சூழ் அரங்கநகர் அப்பா
துணியேன் இனிநின் னருளல்ல தெனக்கு*
மணியே மணிமாணிக்கமே மதுசூதா*
பணியாய் எனக்கு உய்யும்வகை, பரஞ்சோதி!

ஸ்ரீதிருமங்கையாழ்வார் அருளிய திருக்குறுந் தாண்டகம்—20

157 ஆவியை அரங்கமாலை அழுக்குடம் பெச்சில்வாயால்*
தூய்மையில் தொண்டனேன் நான் சொல்லினேன்
[தொல்லை நாமம்*
பாவியேன் பிழைத்த வாறென் றஞ்சினேற்கு
[அஞ்சலென்று*
காவிபோல் வண்ணர் வந்தென் கண்ணுளே
[தோன்றினாரே

(பாசுரம்—55, 59ம் காண்க.)

ஸ்ரீதிருமங்கையாழ்வார் அருளிய திருநெடுந்தாண்டகம்—30

158 பாருருவில் நீரெரி கால் விசும்புமாகிப்
பல்வேறு சமயமுமாய்ப் பரந்து நின்ற*
ஏருருவில் மூவருமேயென நின்ற
இமையவர் தந்திருவுருவே றெண்ணும்போது*
ஓருருவம் பொன்னுருவம் ஒன்று செந்தீ
ஒன்றுமா கடலுருவம் ஒத்துநின்ற*
மூவுருவும் கண்டபோது ஒன்றாம் சோதி
முகிலுருவம் எம்மடிகள் உருவந்தானே

159 முளைக்கதிரைக் குறுங்குடியுள் முகிலை மூவா
மூவுலகும் கடந்தப்பால் முதலாய் நின்ற*
அளப்பரிய ஆரமுதை அரங்கமேய
அந்தணனை அந்தணர் தம் சிந்தையானை*
விளக்கொளியை மரதகத்தைத் திருத்தண்காவில்
வெஃகாவில் திருமாலைப் பாடக்கேட்டு*
வளர்த்ததனால் பயன்பெற்றேன் வருகவென்று
மடக்கிளியை கைகூப்பி வணங்கினாளே.

## இயற்பா

முதலியாண்டான் அருளிய பொய்கையாழ்வார் தனியன்

கைதைசேர் பூம்பொழில்சூழ் கச்சிநகர் வந்துதித்த*
பொய்கைப் பிரான்கவிஞர் போரேறு—வையத்து
அடியவர்கள் வாழ அருந்தமிழந் தாதி*
படிவிளங்கச் செய்தான் பரிந்து

ஸ்ரீபொய்கையாழ்வார் அருளிய முதல் திருவந்தாதி 100

வையம் தகளியா முதல் பாசுரம் 63 சேவிக்கவும்.

160 முதலாவரர் மூவரே; அம்மூவ ருள்ளும்*
முதலாவான் மூரிநீர் வண்ணன்—முதலாய
நல்லான் அருளல்லால் நாமநீர் வையகத்து*
பல்லார் அருளும் பழுது.

161 குன்றனைய குற்றஞ் செயினும் குணங்கொள்ளும்*
இன்று முதலாக என்நெஞ்சே—என்றும்
புறனுரையே யாயினும் பொன்னாழிக் கையரன்*
திறனுரையே சிந்தித் திரு

162 தமருகந்த தெவ்வுருவம் அவ்வுருவம் தானே*
தமருகந்த தெப்பேர்மற் றப்பேர்—தமருகந்து
எவ்வண்ணம் சிந்தித் திமையா திருப்பரே*
அவ்வண்ணம் ஆழியான் ஆம்.
(சென்றால் குடையாம் பாசுரம்—70 சேவிக்கவும்)

163 நயவேன் பிறர்பொருளை; நள்ளேன்கீ ழாரோடு*
உயவேன் உயர்ந்தவரோ டல்லால் வியவேன்;

திருமாலை அல்லது தெய்வம்என் றேத்தேன்*
வருமாறென் நம்மேல் வினை?

164 நாவாயில் உண்டே; நமோநாரணா, என்று
ஓவா துரைக்கும் உரையுண்டே—மூவாத
மாக்கதிக்கண் செல்லும் வகையுண்டே* என்னொருவர்
தீக்கதிக்கட் செல்லும் திறம்?

165 பொன்திகழும் மேனிப் புரிசடையம் புண்ணியனும்
நின்றுலகம் தாய நெடுமாலும்—என்றும்
இருவரங் கத்தால் திரிவரேலும்* ஒருவன்
ஒருவனங்கத் தென்று முளன்*

166 உளன்கண்டாய் நல்நெஞ்சே! உத்தமன் என்றும்
உளன்கண்டாய் உள்ளுவா ருள்ளத்—துளன்கண்டாய்*
வெள்ளத்தின் உள்ளானும் வேங்கடத்து மேயானும்
உள்ளத்தின் உள்ளானென் றோர்.

167 ஓரடியும் சாடுதைத்த ஒண்மலர்ச் சேவடியும்*
ஈரடியும் காணலாம் என்நெஞ்சே! ஓரடியில்
தாயவனைக் கேசவனைத் தண்டுழாய் மாலைசேர்*
மாயவனை யேமனத்து வை.

## திருக்குருகைப்பிரான் பிள்ளான் அருளிய பூதத்தாழ்வார் தனியன்

என்பிறவி தீர இறைஞ்சினேன் இன்னமுதா
அன்பே தகளி யளித்தானை நன்புகழ்சேர்
சீதத்தார் முத்துகள் சேரும்* கடல்மல்லைப்
பூதத்தார் பொன்னங் கழல்.

## ஸ்ரீ பூதத்தாழ்வார் அருளிய இரண்டாம் திருவந்தாதி—100

அன்பே தகளியா முதல் பாசுரம்—64 சேவிக்கவும்.

168 அறிந்தைந்தும் உள்ளடக்கி ஆய்மலர்கொண்டு* ஆர்வம்
செறிந்த மனத்தராய்ச் செவ்வே* அறிந்தவன்றன்
பேரோதி யேத்தும் பெருந்தவத்தோர் காண்பரே
காரோத வண்ணன் கழல்.

169 தாமுளரே; தம்முள்ளம் உள்ளதே* தாமரையின்
பூவுளதே; ஏத்தும் பொழுதுண்டே—வாமன்
திருமருவு தாள்மருவு சென்னியரே* செவ்வே
அருநரகம் சேர்வ தரிது.

170 அழைப்பன் திருமாலை யாங்கவர் கள் சொன்ன*
பிழைப்பில் பெரும்பெயரே பேசி—இழைப்பரிய
வாயவனே யாதவனே என்றவனை யார்முகப்பும்*
மாயவனே என்று மதித்து.

171 காணக் கழிகாதல் கைம்மிக்குக் காட்டினால்*
நாணப் படுமென்றால் நாணுமே?—பேணிக்
கருமாலைப் பொன்மேனி காட்டாமுன் காட்டும்*
திருமாலை நாங்கள் திரு.

172 உறுங்கண்டாய் நன்னெஞ்சே! உத்தமன்நற் பாதம்
உறுங்கண்டாய் ஒண்கமலந் தன்னால்—உறுங்கண்டாய்
ஏத்திப் பணிந்தவன்பேர் ஈரைஞ்ஞூ றெப்பொழுதும்*
சாற்றி யுரைத்தல் தவம்.

173 அத்தியூ ரான்புள்ளை யூர்வான்* அணிமணியின்
துத்திசேர் நாகத்தின் மேல்துயில்வான்—முத்தீ
மறையாவான் மாகடல்நஞ் சுண்டான் றனக்கும்*
இறை யாவான் எங்கள் பிரான்.

174 இறையெம் பெருமான் அருளென்று* இமையோர்
முறை நின்று மொய்ம்மலர்கள் தூவ*—அறைகழல
சேவடியான் செங்கணெடியான்* குறளுருவாய்
மாவடியில் மண்கொண்டான் மால்.

175 மாலே! நெடியானே! கண்ணனே! விண்ணவர்க்கு
மேலா! வியன் துழாய்க் கண்ணியனே!—மேலால்
விளவின்காய் கன்றினால் வீழ்த்தவனே! என்றன்
அளவன்றால் யானுடைய அன்பு.

குருகைகாவலப்பன் அருளிய பேயாழ்வார் தனியன்

சீராரும் மாடத் திருக்கோவ லூரதனுள்*
காரார் கருமுகிலைக் காணப்புக்கு ஓராத்
*திருக்கண்டேன்' என்றுரைத்த சீரான் கழலே*
உரைக்கண்டாய் நெஞ்சே! உகந்து.

ஸ்ரீபேயாழ்வார் அருளிய மூன்றாம் திருவந்தாதி-100

திருக்கண்டேன் முதல் பாசுரம் 65 சேவிக்கவும்.

176 மனத்துள்ளான் மாகடல்நீ ருள்ளான்* மலராள்
தனத்துள்ளான் தண்டுழாய் மார்பன்—சினத்துச்

செருநர் உகச் செற்றுகந்த தேங்கோத வண்ணன்*
வருநரகம் தீர்க்கும் மருந்து.

177 நாமம் பல சொல்லி நாராய ணாஎன்று*
நாம் அங்கை யால்தொழுதும் நன்னெஞ்சே—வா*மருவி
மண்ணுலகம் உண்டுமிழ்ந்த வண்டறையும் தண்துழாய்*
கண்ணனையே காண்கநங் கண்.

178 தேசும் திறலும் திருவும் உருவமும்*
மாசில் குடிப்பிறப்பும் மற்றவையும்—பேசில்*
வலம்புரிந்த வான்சங்கம் கொண்டான்பேர் ஓத*
நலம்புரிந்து சென்றடையும் நன்கு.

179 **வந்துதைத்த வெண்திரைகள் செம்பவள வெண்முத்தம்*
அந்தி விளக்கும் அணிவிளக்காம்—எந்தை
ஒருவல்லித் தாமரையாள் ஒன்றியசீர் மார்வன்*
திருவல்லிக் கேணியான் சென்று.

180 சிறந்தஎன் சிந்தையும் செங்கண் அரவும்*
நிறைந்தசீர் நீள்கச்சி யுள்ளும்...உறைந்ததுவும்*
வேங்கடமும் வெஃகாவும் வேளுக்கைப் பாடியுமே*
தாம் கடவார் தண்துழா யார்.

தாழ்சடையும் நீண் முடியும் ஒண்மழுவும் சக்கரமும்
181 சூழரவும் பொன்னாணும் தோன்றுமால்—சூழும்
திரண்டருவி பாயும் திருமலைமேல் எந்தைக்கு*
இரண்டுருவும் ஒன்றாய் இசைந்து.

182 பொருப்பிடையே நின்றும் புனல் குளித்தும்* ஐந்து
நெருப்பிடையே நிற்கவும் வேண்டா*—விருப்புடைய
வெஃகாவே சேர்ந்தானை மெய்ம்மலர்தூய் கைதொழுதால்
அஃகாவே தீவினைகள் ஆய்ந்து.

183 **தொட்ட படையெட்டும் தோலாத வென்றியான்*
அட்ட புயகரத்தான் அஞ்ஞான்று—குட்டத்துக்
கோள் முதலை துஞ்சக் குறித்தெறிந்த சக்கரத்தான்*
தாள் முதலே நங்கட்குச் சார்வு.

184 **சார்வு நமக்கென்றும் சக்கரத்தான்* தண்துழாய்த்
தார்வாழ் வரைமார்பன் தான்முயங்கும்—காரார்ந்த
வானமரும் மின்னிமைக்கும் வண்தாமரை நெடுங்கண்*
தேனமரும் பூமேல் திரு.

ஸ்ரீ திருமழிசையாழ்வார் அருளிய நான்முகன் திருவந்தாதி-96

185 **நான்முகனை நாராயணன்படைத்தான்* நான் முகனும்
தான்முகமாய்ச் சங்கரனைத் தான்படைத்தான்—யான்
அந்தாதி மேலிட் டறிவித்தேன் ஆழ்பொருளை* [முகமாய்
சிந்தாமல் கொண்மின்நீர் தேர்ந்து.

186 **தாளால் உலகம் அளந்த அசைவே கொல்?
வாளா கிடந்தருளும் வாய்திறவான்—நீள்ஓதம்
வந்தலைக்கும் மாமயிலை மாவல்லிக் கேணியான்
ஐந்தலைவாய் நாகத் தணை.

187 'திறம்பேன்மின் கண்டீர் திருவடிதன் நாமம்*
மறந்தும் புறந்தொழா மாந்தர்—இறைஞ்சியும்
சாதுவராய் போதுமின்கள்' என்றான்* நமனும்தன்
தூதுவரைக் கூவிச் செவிக்கு.

188 காப்பு மறந்தறியேன் கண்ணனே என்றி நப்பன்*
ஆப்பங் கொழியவும் பல்லுயிர்க்கும்—ஆக்கை
கொடுத்தளித்த கோனே! குணப்பரனே! உன்னை
விடத்துணியார் மெய்தெளிந்தார் தாம்.

189 **இனியறிந்தேன் ஈசற்கும் நான்முகற்கும் தெய்வம்*
இனியறிந்தேன் எம்பெருமான்! உன்னை—இனியறி
காரணன்நீ கற்றவைநீ* கற்பவைநீ நற்கிரிசை [ந்தேன்
நாராணன்நீ நன்கறிந்தேன் நான்.

நம்மாழ்வார் அருளிய திருவிருத்தம்-100

(இதன் கீழ் மற்ற ஆழ்வார்களின் அகத்துறைப் பாசுரங்கள் சில சேர்க்கப்பட்டுள்ளன)

190 **பொய்ந்நின்ற ஞானமும் பொல்லா ஒழுக்கும் அழுக்கு
[டம்பும்*
இந்நின்ற நீர்மை இனியாம் உறாமை* உயிரளிப்பான்
எந்நின்ற யோனியு மாய்ப்பிறந்தாய்! இமையோர்
[தலைவா!
மெய்ந்நின்று கேட்டருளாய்* அடியேன் செய்யும்
விண்ணப்பமே.

தலைவியின் வேறுபாடு கண்ட தோழி வியந்துரைத்தல்

191 செழுநீர்த் தடத்துக் கயல்மிளிர்ந் தால் ஒப்ப*
[சேயரிக்கண்
அழுநீர் துளும்ப அலமரு கின்ற* வாழியரோ

முழுநீர் முகில்வண்ணன் கண்ணன் விண்ணாட்டவர்
[மூதுவராம்
தொழுநீர் இணையடிக்கே* அன்பு சூட்டிய சூழ்குழற்கே.

தலைமகளின் இளமைக்குச் செவிலி இரங்கல்

192 முலையோ முழுமுற்றும் போந்தில* மொய்பூங்
[குழல்குறிய
கலையோ அரையில்லை* நாவோ குழறும்* கடல்மண்
[ணெல்லாம்
விலையோ எனமிளி ருங்கண்: இவள்பரமே! பெருமான்
மலையோ, திருவேங் கடமென்று கற்கின்ற வாசகமே.

பெரியாழ்வார் திருமொழி-மாயன் மேல் மகள்
மாலுறு கோலம் தாயவள் கூறல்

193 காறை பூணும் கண்ணாடி காணும் தன் கையில்
[வளைகுலுக்கும்*
கூறை உடுக்கும் அயர்க்கும் தன்கொவ்வைச் செவ்வாய்
[திருத்தும்*
தேறித்தேறிநின் றாயிரம்பேர்த் தேவன் திறம்
பிதற்றும்*
மாறில் மாமணி வண்ணன் மேலிவள் மாலுறுகின்றாளே*

நாச்சியார் திருமொழி-திருவரங்கத்துறை செல்வனைக் காமுறல்

194 எழிலுடைய அம்மனைமீர்! என்னரங்கத் தின்னமுதர்*
குழலழகர்* வாயழகர்* கண்ணழகர்* கொப்பூழில்
எழுகமலப் பூவழகர் எம்மானார்* என்னுடைய
கழல்வளையைத் தாமும் கழல்வளையே யாக்கினரே.

கனவைத் தோழிக் குரைத்தல்

195★★ வாரண மாயிரம் சூழவலம் செய்து*
நாரண நம்பி நடக்கின்றான் என்றெதிர்*
பூரண பொற்குடம் வைத்துப் புறமெங்கும்*
தோரணம் நாட்டக் கனாக்கண்டேன் தோழீநான்.

196 ★★மத்தளம் கொட்ட வரிசங்கம் நின்றூத*
முத்துடைத் தாமம் நிரைதாழ்ந்த பந்தற்கீழ்*
மைத்துனன் நம்பி மதுசூதன் வந்து* என்னைக்
கைத்தலம் பற்றக் கனாக்கண்டேன்* தோழீ! நான்.

★★ திருமண அழைப்பிதழில் அச்சிடப்படுகிற மங்களாசாசனப்
[பாசுரங்கள்

197 கருப்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ?
திருப்பவளச் செவ்வாய்தான் தித்தித் திருக்குமோ*
மருப்பொசித்த மாதவன்றன் வாய்ச்சுவையும் [நாற்றமும்*
விருப்புற்றுக் கேட்கின்றேன் சொல்* ஆழிவெண்சங்கே.

மேகவிடு தூது

198 ஒளிவண்ணம் வளைசிந்தை உறக்கத்தோ டிவையெல்லாம்
எளிமையால் இட்டென்னை ஈடழியப் போயினவால்*
குளிரருவி வேங்கடத்தென் கோவிந்தன் குணம் பாடி*
அளியத்த மேகங்காள்! ஆவிகாத் திருப்பேனே?

பெருமாள் திருமொழி-ஆய்ச்சியர் ஊடி அமலனை எள்கல்

199 கருமலர்க் கூந்தல் ஒருத்தி தன்னைக் கடைக்கணித்து*
ஆங்கே யொருத்தி தன்பால்
மருவி மனம்வைத்து* மற்றொருத்திக் குரைத்தொரு
பேதைக்குப் பொய்குறித்து*
புரிகுழல் மங்கை யொருத்தி தன்னைப் புணர்தி:
அவளுக்கும் மெய்யனல்லை*
மருதிறுத் தாய்! உன் வலர்த்தியூடே வளர்கின்ற
தாலுன்தன் மாயைதானே.

பெரிய திருமொழி-தலைவியின் ஆற்றாமை
கண்டதாய் இரங்கல்

200 ஊழியில் பெரிதால் நாழிகை என்னும் ஒண்சுடர்
துயின்றதால் என்னும்*
ஆழியும் புலம்பும் அன்றிலும் உறங்காதென்றலும்
தீயினிற் கொடிதாம்*
தோழியோ! என்னும்* துணைமுலை யரக்கும் சொல்லு
மின் என் செய்கேன்? என்னும்*
ஏழையென் பொன்னுக் கென்நினைந் திருந்தாய்?
இடவெந்தை யெந்தை பிரானே

பிரிவு ஆற்றாத தலைவி இரங்கிக் கூறுதல்

201 வாளாய கண்பனிப்ப மென்முலைகள் பொன்னரும்ப*
நாணாளும் நின்னினைந்து நைவேற்கு* ஓ! மண்ணளந்த
தாளாளா! தண்குடந்தை நகராளா! வரையெடுத்த
தோளாளா!* என்தனக்கோர் துணையாளன் ஆகாயே!

202 திண்திமில் ஏற்றின் மணியும் ஆயன் தீங்குழலோசையும்
[தென்றலோடு*
கொண்டதோர் மாலையும் அந்தியீன்ற கோல இளம்
[பிறை யோடுகூடி*
பண்டைய அல்ல இவை நமக்கு பாவியே னாவியை
[வாட்டஞ்செய்யும்*
சொண்டல் மணிநிற வண்ணர் மன்னு குறுங்குடிக்கே
[என்னை உய்த்திடுமின்

உடன்போக்கிற் சென்ற தலைமகளைக் குறித்துத்
தாய் இரங்குதல்

203 முற்றிலும் பைங்கிளியும் பந்தும் ஊசலும் பேசுகின்ற*
சிற்றில்மென் பூவையும்விட் டகன்றசெழுங்
கோதை தன்னை*
பெற்றிலேன் முற்றிழையைப் பிறப்பிலிபின் னேநடந்து
மற்றெல்லாம் கைதொழப்போய் வயலாலி புகுவர்
[கொலோ?

204 வலம்புரி யாழியனை வரையார் திரள் தோளன்தன்னை*
புலம்புரி நூலவனைப் பொழில் வேங்கட வேதியனை*
சிலம்பிய லாறுடைய திருமாலிருஞ் சோலைநின்ற*
நலந்திகழ் நாரணனை நணுகுங்கொல் என் நன்னுதலே?

(திருவாய்மொழி—பூவை தூது)

205 நீயலையே சிறுபூவாய்! நெடுமாலார்க் கென்தூதாய்*
நோயெனது நுவலென்ன* நுவலாதே
[இருந்தொழிந்தாய்*
சாயலொடு மணிமாமை தளர்ந்தேன் நான்* இனியுனது
வாயலகில் இன்னடிசில் வைப்பாரை நாடாயே.

திருவிருத்தம்—வண்டு விடு தூது

206 வீசும் சிறகால் பறத்திர்* விண்ணாடுநுங் கட்கெளிது
பேசும் படியன்ன பேசியும் போவது* நெய்தொடுவுண்டு

ஏகம் படியன்ன செய்யும்எம் ஈசர்விண் ணோர்பிரானார்
மாசின் மலரடிக் கீழ்* எம்மைச் சேர்விக்கும் வண்டுகளே.

நலம் பாராட்டு

207 வண்டுகளோ! வம்மின்! நீர்ப்பூ நிலப்பூ மரத்தில்

உண்டு களித்துழல் வீர்க்கொன் றுரைக்கியம்*
(ஏனமொன் றாய்
மண்துக ளாடிவை குந்தமன் னாள்குழல் வாய்
(விரைபோல்
விண்டு சள்வாரும்* மலர்உள வோநும் வியலிடத்தே?

தலைவி அறத்தொடு நிற்றல்

208 யாதானும் ஓராக் கையில்புக்கு* அங்காப்புண்டும்
[ஆப்பவிழ்ந்தும்
மூதாவி யில்தடுமாறும் உயிர்முன்னமே* அதனால்
யாதானும் பற்றிநீங் கும்விர தத்தைநல் வீடுசெய்யும்
மாதா வினைப்பிதுவை திருமாலை வணங்குவனே.

209 வணங்கும் துறைகள் பலபல ஆக்கி* மதிவிகற்பால்
பிணங்கும் சமயம் பலபல ஆக்கி* அவையவைதோ
றணங்கும் பலபல ஆக்கிநின் மூர்த்தி பரப்பிவைத்தாய்
இணங்குந்நின் னோரை இல்லாய்* நின்கண் வேட்கை
எழுவிப்பனே.

210 ஈனச்சொல் ஆயினும் ஆக எறிதிரை வையம் முற்றும்
ஏனத் துருவாய் இடந்தபி ரான்* இருங் கற்பகம்சேர்
வானத் தவர்க்கும் அல்லா தவர்க் கும்மற்றெல்லா
[எவர்க்கும்
ஞானப் பிரானையல் லால்இல்லை* நான்கண்ட
[நல்லதுவே.

(பாசுரம் 56 காண்க)

211 நம்மாழ்வார் அருளிய—திருவாசிரியம்—7

செக்கர்மா முகிலுடுத்து மிக்க செஞ்சுடர்ப்
பரிதிசூடி* அஞ்சுடர் மதியம் பூண்டு*
பலசுடர் புனைந்த பவளச் செவ்வாய்*
திகழ்பசுஞ் சோதி மரகதக் குன்றம்*
கடலோன் கைமிசைக் கண்வளர் வதுபோல்*
பீதக ஆடை முடிபூண் முதலா*
மேதகு பல்கலன் அணிந்து* சோதி

வாயவும் கண்ணவும் சிவப்ப* மீதிட்டுப்
பச்சைமேனி மிகப் பகைப்ப*
நச்சுவினைக் கவர்தலை அரவின் அமளியேறி*
எறிகடல் நடுவுள் அறிதுயில் அமர்ந்து*

சிவன்அய னிந்திரன் இவர்முத லனைத்தோர்
தெய்வக் குழாங்கள் கைதொழக் கிடந்த*
தாமரை யுந்தித் தனிப்பெரு நாயக!
மூவுல களந்த சேவடி யோயே!

நம்மாழ்வார் அருளிய பெரிய திருவந்தாதி—87

212 பெற்றதாய் நீயே பிறப்பித்த தந்தை நீ*
மற்றையார் ஆவாரும் நீபேசில்*—எற்றேயோ
மாய! மா மாயவளை மாயமுலை வாய்வைத்த*
நீயம்மா! காட்டும் நெறி.

213 நெறிகாட்டி நீக்குதியோ* நின்பால் கருமா
முறிமேனி காட்டுதியோ* மேனாள்—அறியோமை
என்செய்வான் எண்ணினாய்? கண்ணனே!* ஈதுரையாய்
என் செய்தால் என்படோம் யாம்.

214 யானுமென் நெஞ்சும் இசைந்தொழிந்தோம்* [வல்வினையைக்
கானும் மலையும் புகக்கடிவான்*—தானோர்
இருளன்ன மாமேனி எம்இறையார் தந்த*
அருளென்னும் தண்டால் அடித்து

215 பாலாழி நீகிடக்கும் பண்பை* யாம் கேட்டேயும்*
காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்*—நீலாழிச்
சோதியாய்! ஆதியாய்! தொல்வினையெம் பால்கடியும்
நீதியாய்! நிற்சார்ந்து நின்று.

216 ஒன்றுண்டு செங்கண்மால்! யானுரைப்பது* உன்னடியார்க்
கென்செய்வன் என்றேயிருத்திநீ*—நின்புகழில்
வைகும்தம் சிந்தையிலும் மற்றினிதோ* நீயவர்க்கு
வைகுந்தம் என்றருளும் வான்

217 மாலே! படிச்சோதி! மாற்றேல்* இனியுனது
பாலேபோல் சீரில் பழுத்தொழிந்தேன்—மேலால்
பிறப்பின்மை பெற்றடிக்கீழ்க் குற்றேவல் அன்று*
மறப்பின்மை யான்வேண்டும் மாடு.

218 புவியும் இருவிசும்பும் நின்னகத்த* நீயென்
செவியின் வழிபுகுந்தென் னுள்ளாய்*—அவிவின்றி
யான்பெரியன் நீ பெரியை என்பதனை யாரறிவார்?
ஊன்பருகு நேமியாய்! உள்ளு.

219 காரிகலந்த மேனியான் கைகலந்த ஆழியான்*
பார்கலந்த வல்வயிற்றான் பாம்பணையான்*—சீர்கலந்த
சொல்நினைந்து போக்காரேல் சூழ்வினையின் ஆழ்துயரை
என்நினைந்து போக்குவர்இப் போது?

220 திருமங்கையாழ்வார் அருளிய திருவெழு கூற்றிருக்கை—1
(இரத பந்தனம்)

ஒருபே ருந்தியிருமலர்த் தவிசில்...
செல்வம் மல்குதென்... திருக்குடந்தை*
அந்தணர் மந்திர மொழியுடன் வணங்க*
ஆடர வமளியில் அறிதுயில் அமர்ந்த*
பரம!* நின் அடியிணைப் பணிவன்
வருமிடர் அகல—மாற்றோ வினையே.

சிறிய திருமடல்—77½ கண்ணிகள்

221 காரார் வரைக்கொங்கை* கண்ணார் கடலுடுக்கை
சீரார் சுடர்ச்சுட்டிச் செங்கலுழிப் பேராற்று...
ஏரார் முயல்விட்டுக் காக்கைப் பின்போவதே
பேராயிரமும் பிதற்றி* பெருந்தெருவே
ஊரார் இகழிலும் ஊரா தொழியேன் நான்*
வாரார்பூம் பெண்ணை மடல்.

பெரிய திருமடல்—148½ கண்ணிகள்

222 மன்னிய பல்பொறிசேர் ஆயிரவாய் வாளரவின்
சென்னிமணிக் குடுமித் தெய்வச் சுடர்நடுவுள்*...
உலகறிய ஊர்வன்நான்
முன்னி முளைத்தெழுந் தோங்கி யொளிபரந்த*
மன்னியபூம் பெண்ணை மடல்.

## திருவாய்மொழி தனியன்கள்

(அ) பக்தாம்ருதம் விச்வஜநா நுமோதநம்
ஸர்வார்த்ததம் ஸ்ரீசடகோப வாங்மயம்
ஸகஸ்ரசாகோப நிஷத்ஸமாகமம்
நமாம் யஹம் த்ராவிட வேதஸாகரம்—நாதமுனிகள்

பக்தர்க்கு அமுதமாய் மக்கள் அனைவரும் விரும்பி ஏற்பதாய் சகல அர்த்தங்களையும் அளிப்பதாய், ஆயிரமாகப் பணைத்த உபநிடதங்களோடு கூடியதாய் உள்ள ஸ்ரீசடகோபரது வாக்கு களான தமிழ் வேதக்கடலை நான் வணங்குகிறேன்.

மனத்தாலும் வாயாலும் வண்குருகூர்பேணும்*
இனத்தாரை யல்லா திறைஞ்சேன்*—தனத்தாலும்
ஏதுங் குறைவிலேன் எந்தை சடகோபன்*
பாதங்கள் யாமுடைய பற்று—சொட்டை நம்பிகள்

ஏய்ந்தபெருங் கீர்த்தி யிராமா னுசமுனிதன்
வாய்ந்தமலர்ப் பாதம் வணங்குகின்றேன்*
—ஆய்ந்தபெருஞ்
சீரார் சடகோபன் செந்தமிழ்வே தந்தரிக்கும்*
பேராத வுள்ளம் பெற— அநந்தாழ்வான்

ஸ்ரீ நம்மாழ்வார் அருளிய திருவாய்மொழி—1102

223 ★**உயர்வற உயர்நலம் உடையவன் எவன்? அவன்*
மயர்வற மதிநலம் அருளினன் எவன்? அவன்*
அயர்வறும் அமரர்கள் அதிபதி எவன்? அவன்*
துயரறு சுடரடி தொழுதெழுஎன் மனனே!

உயர்வற உயர்நலம்உடையன் என்றதனால் இறைவனுக்குக் கல்யாண குணங்கள் உண்டு என்பதும்; சுடர் அடி என்றதனால் அவனுக்குத் திருமேனி உண்டு என்பதும்; அயர்வு அறும் அமரர்கள் அதிபதி என்றதனால் உலகங்களை உடையவன் அவன் என்பதும், அமரர்கள் என்று நித்ய சூரிகளை முன்னிடுகையினால் அடியார்கள் பற்றும்; மயர்வு என்றதனால் தடையாகும் ஊழ்—மயக்கமும்; மதிநலம் (மெய்யறிவு-பத்தி) அருளினன் என்றதனால் நெறி-வழி உபாயமும் அவனே என்பதுவும், அதிபதி என்றதனால் அவன் தலைவன் (இறைநிலை)—என்பதும் தொழுது எழு மனனே என்றதனால் நாம் தொழவேண்டிய அடிமை (உயிர்நிலை) என்னும் உறவும், தொழுது எழு என்றதனால் கைங்கரியம்—தொண்டு செய்தலாகிய வாழ்வும் (புருஷார்த்தமும்) துயர் அறு சுடர் அடி—உயிர்களின் துயர் நீக்கி, அதனால் துயர் நீங்கி சுடர் வீசித் தன்னைப் பற்றிக் கொள்ளுமாறு விளங்கும் திருவடிகளும் இதனுள் வெளியிட்டு அறியவேண்டிய ஐந்தையும் அருளுகிறார். 'எழு'

என்றதால் வாழ்த்தும்: தொழுது என்றதால், வணக்கமும்: துயர் அறுசுடர் அடி என்றதால் வருபொருளும் உரைத்துத் தமிழ் மரபையும் புலப்படுத்தி அருளுகிறார்.

224 ★அவரவர் தமதம தறிவறி வகைவகை*
அவரவர் இறையவர் என்அடி யடைவர்கள்*
அவரவர் இறையவர் குறைவிலர் இறையவர்*
அவரவர் விதிவழி யடையநின் றனரே.

225 ★திடவிசும் பெரிவளி நீர்நில மிவை மிசை,
படர்பொருள் முழுவது மாயவை யவைதொறும்,
உடல்மிசை உயிரெனக் கரந்து எங்கும் பரந்துளன்,
சுடர் மிகு சுருதியுள் இவை உண்ட சுரனே.

226 ★*பரந்ததண் பரவையுள் நீர்தொறும் பரந்துளன்*
பரந்தஅண் டமிதென நிலவிசும் பொழிவற*
கரந்தசி விடந்தொறும் இடந்திகழ் பொருடொறும்*
கரந்தெங்கும் பரந்துளன் இவையுண்ட கரனே.

227 ★**வீடுமின் முற்றவும்*—வீடுசெய்து உம்முயிர்*
வீடுடை யானிடை*—வீடுசெய்ம்மினே.

228 ★மின்னின் நிலையில, மன்னுயிராக்கைகள்,
என்னுமிடத்து, இறை உன்னுமின் நீரே,

229 ★நீர்நும தென்றிவை*—வேர்முதல் மாய்த்து* இறை
சேர்மின் உயிர்க்கு* அத—னேர் நிறை யில்லே.

230 *பத்துடை யடியவர்க் கெளியவன்; பிறர்களுக் கரிய
வித்தகன்* மலர்மகள் விரும்புநம் அரும்பெற லடிகள்*
மத்துறு கடைவெண் ணெய் களவினில் உரவிடை
[யாப்புண்டு*
எத்திறம் உரலினோ டிணைந்திருந் தேங்கிய எளிவே!

231 பிணக்கற அறுவகைச் சமயமும் நெறியுள்ளி யுரைத்த
கணக்கறு நலத்தனன்* அந்தமி லாதியம் பகவன்*
வணக்குடைத் தவநெறி வழிநின்று புறநெறி களைகட்டு*
உணக்குமின், பசையற அவனுடை
[யுணர்வுகொண் டுணர்ந்தே

232 நினைந்துநைந் துள் கரைந்துருகி இமையோர் பலரும்
முனிவரும்,
புனைந்த கண்ணி நீர் சாந்தம் புகையோடேந்தி
[வணங்கினால்
நினைந்த எல்லாப் பொருள்கட்கும் வித்தாய் முதலில்
[சிதையாமே
மனஞ்செய் ஞானத் துன்பெருமை மாசூணாதோ
[மாயோனே*

233 கடிவார் தீயவினைகள்* நொடியாரும் அளவைக் கண்*
கொடியா அடுபுள் உயர்த்த* வடிவார் மாதவனாரே.

234 ஈடுமெடுப்புமில் ஈசன்* மாடு விடாதென் மனனே*
பாடுமென் நாஅவன் பாடல்*—ஆடுமென் அங்க மணங்கே*

235 யானொட்டி யென்னுள் இருத்துவ மென்றிலன்*
தானொட்டி வந்தென் தனிநெஞ்சை வஞ்சித்து*
ஊனொட் டிநின்றென் உயிரில் கலந்து* இயல்
வானொட்டு மோஇனி யென்னை நெகிழ்க்கவே?

236 திண்ணன் வீடு முதல் முழுதுமாய்*
எண்ணின் மீதிய னெம்பெருமான்*
மண்ணும் விண்ணுமெல்லா முடனுண்ட* நங்
கண்ணன் கண்ணல்ல தில்லையோர் கண்ணே.

237 ஆணல்லன் பெண்ணல்லன் அல்லால் அலியுமல்லன்*
காணலும் ஆகான் உளனல்லன் இல்லையல்லன்*
பேணுங்கால் பேணு முருவாகும் அல்லனுமாம்*
கோணை பெரிதுடைத்தெம் பெம்மானைக் கூறுதலே.

238 நாரணன் முழுவே ழுலகுக்கும் நாதன் வேதமயன்*
காரணம் கிரிசை கருமம் இவைமுதல்வன் எந்தை*
சீரணங் கமரர் பிறர்பல ரும்தொழு தேத்தநின்று*
வாரணத் தைமருப் பொசித்த பிரான் என் மாதவனே.

239 அணைவது அரவணைமேல் பூம்பாவை ஆகம்
புணர்வது* இருவர் அவர் முதலும் தானே*
இணைவனாம் எப்பொருட்கும் வீடு முதலாம்*
புணைவன் பிறவிக்கடல் நீந்துவார்க்கே.

240 தீர்த்தன் உளகளந்த சேவடிமேல் பூந்தாமம்*
சேர்த்தி யவையே சிவன்முடிமேல் தான்கண்டு.
பார்த்தன் தெளிந்தொழிந்த பைந்துழா யான்பெருமை
பேர்த்தும் ஒருவரால் பேசக் கிடந்ததே?

241 எங்கும் உளன் கண்ணன்* என்ற மகனைக் காய்ந்து*
'இங்கில்லை யால்' என் றிரணியன் தூண்புடைப்ப.
அங்கப் பொழுதே அவன் வீயத் தோன்றிய* என்
சிங்கப் பிரான்பெருமை யாராயும் சீர்மைத்தே?

242 யானே என்னை அறிய கிலாதே.
யானே என்றனதே என்றிருந்தேன்*
யானே நீ, என் உடைமையும் நீயே
வானே ஏத்தும் எம் வானவர் ஏறே.

243 **★கிளரொளி யிளமை கெடுவதன் முன்னம்*
வளரொளி மாயோன் மருவிய கோயில்*
வளரிளம் பொழில்சூழ் மாலிருஞ் சோலை*
தளர்வில ராகில் சார்வது சதிரே.

244 முடிச்சோதி யாய்உனது முகச்சோதி மலர்ந்ததுவோ?
அடிச்சோதி நீநின்ற தாமரையாய் அலர்ந்ததுவோ?
படிச்சோதி யாடையொடும் பல்கலனாய்* நின்பைம்பொன்
கடிச்சோதி கலந்ததுவோ? திருமாலே! கட்டுரையே.

245 **★ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி*
வழுவிலா அடிமை செய்ய வேண்டும்நாம்*
தெழிகுர லருவித் திருவேங்கடத்து*
எழில்கொள் சோதிஎந் தைதந்தை தந்தைக்கே.

246 **★குன்றம் ஏந்திக் குளிர்மழை காத்தவன்*
அன்று ஞாலம் அளந்த பிரான்* பரன்
சென்று சேர்திரு வேங்கட மாமலை*
ஒன்று மேதொழ நம்வினை ஓயுமே.

247 ஒளிமணி வண்ணன் என்கோ? ஒருவனென் றேத்த நின்ற
நளிர்மதிச் சடையன் என்கோ? நான்முகக் கடவுள் என்கோ?
அளிமகிழ்ந்துலக மெல்லாம் படைத்தவை ஏத்த நின்ற*
களிமலர்த் துளவ னெம்மான் கண்ணனை மாய னையே.

248 சாதுசனத்தை நலியும் கஞ்சனைச் சாதிப்பதற்கு*
ஆதியஞ் சோதியுருவை அங்குவைத்து இங்குப் பிறந்த*
வேதமுதல் வனைப்பாடி வீதிகள் தோறும் துள்ளாதார்
ஓதியுணர்ந் தவர்முன்னா என் சவிப்பார் மனிசரே.

249 மனிசரும் மற்றும் முற்றுமாய் மாயப் பிறவிபிறந்த*
தனியன் பிறப்பிலி தன்னைத் தடங்கடல் சேர்ந்தபிரானை*
கனியைக் கரும்பினின் சாற்றைக் கட்டியைத் தேனை (அமுதை*
முனிவின்றி ஏத்திக் குனிப்பார் முழுதுணர் நீர்மையினாரே*

250 **பயிலும் சுடரொளி மூர்த்தியைப் பங்கயக் கண்ணனை*
பயிலவினிய நம்பாற்கடல் சேர்ந்த பரமனை*
பயிலும் திருவுடையார் யவரேலும் அவர் கண்டீர்*
பயிலும் பிறப்பிடைதோ றெம்மை யாளும் பரமரே.

251 அடியார்ந்த வையமுண் டாலிலை யன்ன வசஞ்செய்யும்
படியாது மில்குழ விப்படி யெந்தைபி ரான்றனக்கு*
அடியார் அடியார் தம்அடி யார்அடி யார்தமக்
கடியார் அடியார் தம், அடி யாரடி யோங்களே,

252 வம்மின் புலவீர்! நும் மெய்வருத் திக்கைசெய் துய்ம்மினோ
இம்மன் னுலகில் செல்வரிப் போதில்லை நோக்கினோம்
நும்மின் கவிகொண்டு நும்நுமிட்டாதெய்வம்ஏத்தினால்*
செம்மின் சுடர்முடி என்திருமாலுக்குச் சேருமே.

253 ஒருநா யகமாய் ஓட உலகுடன் ஆண்டவர்*
கருநாய் கவர்ந்த காலர் சிதைகிய பானையர்*
பெருநாடு காண இம்மையிலே பிச்சை தாம் கொள்வர்*
திருநா ரணன்தாள் காலம் பெறச்சிந்தித் துய்மினோ.

254 அறியும்செந் தீயைத் தழுவி 'அச்சுதன்' என்னும்மெய்
(வேவாள்*
எறியும்தண் காற்றைத் தழுவி என்னுடைக் கோவிந்தன்
என்னும்*
வெறிகொள் துழாய்மலர் நாறும் வினையுடை யாட்டி
யேன் பெற்ற
செறிவளை முன்கைச் சிறுமான் செய்கின்ற தென்*
கண்ணுக் கொன்றே

255 நமக்கும் பூவின்மிசை நங்கைக்கும் இன்பனை* ஞாலத்தார்
தமக்கும் வானத் தவர்க்கும் பெருமானை* தண்தாமரை
சுமக்கும் பாதப் பெருமானைச் சொல்மாலைகள்*
(சொல்லுமா
றமைக்க வல்லேற் கினியாவர் நிகரகல் வானத்தே.

256 இடகிலேன் ஒன்றட்ட கில்லேன் ஐம்புலன் வெல்ல
(கில்லேன்*
கடவனாகிக்காலந் தோறும் பூப் பறித் தேத்தகில்லேன்*
மடவன் நெஞ்சம் காதல்கூர வல்வினையேன் அயர்ப்பாய்*
தடவுகின்றேன்* எங்குக்காண்பன் சக்கரத்தண் ணலையே?

257 நண்ணாதார் முறுவலிப்ப நல்லுற்றார் கரைந்தேங்க*
எண்ணாராத் துயர்விளைக்கும் இவையென்ன உலகி
யற்கை?
கண்ணாளா! கடல்கடைந்தாய்! உனகழற்கே வரும் பரிசு*
தண்ணாவா தடியேனைப் பணிகண்டாய் சாமாறே.

258 திருவடியை நாரணனைக் கேசவனைப் பரஞ்சுடரை*
திருவடிசேர்வது கருதிச் செழுங்குருகூர்ச் சடகோபன்*
திருவடிமேல் உரைத்ததமிழ் ஆயிரத் துளிப்பத்தும்*
திருவடியே அடைவிக்கும் திருவடிசேர்ந்தொன்றுமினே.

259 **ஒன்றுந் தேவும் உலகும் உயிரும் மற்றும் யாதுமில்லா
அன்று* நான்முகன் றன்னொடுதேவர் உலகோ
டுயிர்படைத்தான்*
குன்றம் போல்மணி மாடம்நீடு திருக்குருகூரதனுள்*
நின்ற ஆதிப்பிரான்நிற்க மற்றைத் தெய்வம் நாடுதிரே

260 ★**இலிங்கத் திட்ட புராணத்தீரும் சமணரும் சாக்கியரும்
வலிந்து வாதுசெய் வீர்களும் மற்றும்நுந் தெய்வமுமாகி
நின்றான்*
மலிந்து செந்நெல் கவரி வீசும் திருக்குருகூரதனுள்
பொலிந்து நின்ற பிரான்கண்டீ ரொன்றும் பொய்யில்லை
போற்றுமினே.

261 கடியன் கொடியன் நெடியமால் உலகங்கொண்ட
அடியன்* அறிவருமேனிமாயத்தன்* ஆகிலும்
கொடிய என்நெஞ்சம் அவனென்றே கிடக்கும் எல்லே*
துடிகொள் இடைமடத் தோழீ அன்னையென் செய்யுமே.

262 கழியமிக் கதோர் காதலள் இவளென் றன்னை காணக்
கொடாள்*
வழுவில் கீர்த்தித் திருக்குறுங்குடிநம்பியை நான் கண்ட
பின்*
குழுமித் தேவர் குழாங்கள் கைதொழச் சோதி வெள்ளத்தி
னுள்ளே
எழுவ தோருரு என்னெஞ் சுள்ளெழும் ஆர்க்கும்
அறிவரிதே.

263 **கூந்தல்மலர் மங்கைக்கும் மண்மடந் தைக்கும்
குலஆயர்கொழுந்துக்கும் கேள்வன்றன்னை*
வாய்ந்த வழுதிவள நாடன் மன்னு குருகூர்ச் சடகோபன்
குற்றேவல்செய்து*
ஆய்ந்த தமிழ்மாலை ஆயிரத்துள் இவையுமோர் பத்தும்
வல்லரார்* உலகில்
ஏந்து பெருஞ்செல்வத்தராய்த்திருமால் அடியார்களைப்
பூசிக்க நோற்றார்களே.

**பிறரை வாழ்த்தி மங்களாசாசனம் செய்ய
சேவிக்கும் பாசுரம்

264 நோற்ற நோன்பிலேன் நுண்ணறிவிலேன் ஆகிலும் இனி
இனி உன்னைவிட்டு* ஒன்றும்
ஆற்ற கின்றிலேன் அரவினணை அம்மானே*
சேற்றுத் தாமரை செந்நெலூடு மலர்சீரிவர மங்கல நகர்*
வீற்றிருந்த எந்தாய் உனக்கு மிகையல்லேன் அங்கே.

265 ★**ஆரா அமுதே! அடியேன் உடலம் நின்பால் அன்பாயே*
நீராய் அலைந்து கரைய உருக்குகின்ற நெடுமாலே*
சீரார் செந்நெல் கவரி வீசும் செழுநீர்த்திருக்குடந்தை
ஏரார் கோலம் திகழக் கிடந்தாய்! கண்டேன் எம்மானே.

266 ★**களைவாய் துன்பம் களையா தொழிவாய் களைகண்
மற்றிலேன்*
வளைவாய் நேமிப் படையாய்? குடந்தைக் கிடந்த
மாமாயா!
தளரா உடலம் என்ன தாவி சரிந்து போம்போது*
இளையா துனதாள் ஒருங்கப்பிடித்துப்போத இசைநீயே.

267 கள்ள வேடத்தைக் கொண்டுபோய்ப் புறம்புக்கவாறும்*
கலந்தசுரரை
உள்ளம் பேதம்செய் திட்டுயிருண்ட உபாயங்களும்*
வெள்ள நீர்ச்சடை யானும் நின்னிடை வேறலாமை
விளங்க நின்றதும்*
உள்ளமுள் குடைந்தென் உயிரை யுருக்கி யுண்ணுமே,

268 **உண்ணுஞ் சோறு பருகுநீர் தின்னும்வெற்றிலையு
மெல்லாம்
கண்ணன்* எம்பெருமா னென்றென்றேகண்கள் நீர்மல்கி*
மண்ணினுள் அவன்சீர் வளமிக் கவனூர் வினவி*
திண்ண மென்னிள மான்புகு மூர்திருக்கோளூரே,

269 **★உலகம் உண்ட பெருவாயா! உலப்பில் கீர்த்தியம்
நிலவும் சுடர்சூ ழொளிமூர்த்தி! நெடியாய்! (மானே!*
(அடியேனாருயிரே!*
திலதம் உலகுக் காய்நின்ற திருவேங் கடத்தெம்
பெருமானே!
குலதொல் லடியேன் உனபாதம் கூடு மாறு கூறாயே.

270 அடியேன் மேவி யமர்கின்ற அமுதே! இமையோர்
அதிபதியே,
கொடியா அடுபுள் ளுடையானே! கோலக் கனிவாய்ப்
பெருமானே!

செடியார் வினைகள் தீர்மருந்தே! திருவேங்கடத்தெம்
பெருமானே!
நொடியார் பொழுதும் உனபாதம் காண நோலா
(தாற்றேனே!

271 **★அகல கில்லேன் இறையும்' என் றலர்மேல் மங்கை
யுறைமார்பா
நிகரில் புகழாய்! உலகமூன்றுடையாய்! என்னை ஆள்
நிகரில் அமரர் முனிக்கணங்கள் விரும்பும் (வானே!
திருவேங்கடத்தானே
புகலொன் றில்லா அடியேன்உன் அடிக்கீழ் அமர்ந்து
(புகுந்தேனே.

272 **★கங்குலும் பகலும் கண்துயி லறியாள் கண்ணநீர்
கைகளால் இறைக்கும்*
சங்குசக் கரங்கள் என்றுகை கூப்பும் தாமரைக்
[கண்என்றே தளரும்
எங்கனே தரிக்கேன் உன்னைவிட் டென்னும் இருநிலம்
[கைதுழா விருக்கும்*
செங்கயல் பாய்நீர்த் திருவரங் கத்தாய்! இவள்திறத்
தென்செய்கின் றாயே?

273 **★என்திரு மகள்சேர் மார்வனே! என்னும் என்னுடை
[யாவியே என்னும்
நின்திரு எயிற்றால் இடந்துநீ கொண்ட நிலமகள்
[கேள்வனே! என்னும்
அன்றுரு வேழும் தழுவிநீ கொண்ட ஆய்மகள்
[அன்பனே என்னும்
தென்திரு வரங்கம் கோயில் கொண்டானே!
[தெளிகிலேன் முடிவிவள் தனக்கே.

274 ★**ஆழி யெழச்சங்கும் வில்லும் எழ* திசை
வாழி யெழத் தண்டும் வாளும் எழ* அண்டம்
மோழை யெழமுடி பாதம் எழ* அப்பன்
ஊழி யெழ உல கங்கொண்ட வாறே!

275 ★**குன்ற மெடுத்த பிரானடி யாரொடும்*
ஒன்றிநின் றசட கோப னுரை செயல்*
நன்றி புனைந்தஓ ராயிரத் துள்ளிவை*
வென்றி தரும்பத்தும் மேவிக்கற் பார்க்கே.

276 வார்த்தை அறிபவர் மாயவற் காளன்றி யாவரோ
போர்த்த பிறப்பொடுநோயொடு மூப்பொடு இறப்பிவை
பேர்த்து* பெருந்துன்பம் வேரறநீக்கித் தன் தாளின் கீழ்ச்
சேர்த்து* அவன்செய்யும் சேமத்தை எண்ணித்
தெளிவுற்றே*

277 ஒன்றுநில்லா கெடும் முற்றவும் தீவினை உள்ளித் தொழு
மின் தொண்டீர்
அன்று அங்கு அமர்வென்று உருப்பிணி நங்கை
அணி நெடுந்தோள் புணர்ந்தான்*
என்றும் எப்போதும் என் நெஞ்சம் துதிப்ப உள்ளே
இருக்கின்ற பிரான்*
நின்ற அணி திருவாறன் விளை என்னும் நீணகர மதுவே.

278 தீர்த்தனுக் கற்றபின் மற்றோர் சரணில்லை
யென்றெண்ணி* தீர்த்தனுக்கே
தீர்த்த மனத்தன னாகிச் செழுங்குரு கூர்ச்
சட கோபன்சொன்ன*
தீர்த்தங்க ளாயிரத் துள்ளிவை பத்தும்
வல்லார்களை* தேவர்வைகல்
தீர்த்தங்க ளேயென்று பூசித்து நல்கி யுரைப்பர் தம்
தேவியர்க்கே

279 கண்கள் சிவந்து பெரியவாய் வாயும் சிவந்து கனிந்து

வெண்பல் இலகு சுடரிலகு விலகு மகர குண்டலத்தன்*
கொண்டல் வண்ணன் சுடர் முடியன் நான்கு தோளன்
[குனிசார்ங்கன்*
ஒண்சங்கு கதைவா ளாழியான் ஒருவன் அடியேன்
[உள்ளானே.

280 **நெடுமாற் கடிமை செய்வேன்போல் அவனைக் கருத
[வஞ்சித்து*
தடுமாற் றற்ற தீக்கதிகள் முற்றும் தவிர்ந்த
[சதிர்நினைந்தால்,
கொடுமா வினையேன் அவனடியார் அடியே கூடும்
[இதுவல்லால்*
விடுமா றென்பதென் அந்தோ வியன்மூ வுலகு
[பெறினுமே?

281 ★**தனிமாப் புகழே யெஞ்ஞான்றும் நிற்கும் படியாத்
[தான்தோன்றி*
முனிமாப் பிரம முதல் வித்தாய் உலகம் மூன்றும்
[முளைப்பித்த*
தனிமாத் தெய்வத் தளிரடிக்கீழ்ப் புகுதல் அன்றி
[அவனடியார்*
நனிமாக் கலவி யின்பமே நாளும் வாய்க்க-நங்கட்கே.

282 ★**வாய்க்க தமியேற் கூழிதோ றூழி யூழி* மாகாயாம்
பூக்கொள் மேனி நான்குதோள் பொன்னாழிக்கை
[யென்னம்மான்*
நீக்க மில்லா அடியார்தம் அடியார் அடியார் அடியார் எங்
கோக்கள்* அவர்க்கே குடிகளாய்ச் செல்லும் நல்ல
கோட்பாடே.

283 **★நல்ல கோட்பாட் டுலகங்கள் மூன்றினுள்ளும்
தான்நிறைந்த*
அல்லிக் கமலக் கண்ணனை அந்தண் குருகூர்ச்
[சடகோபன்
சொல்லப்பட்ட ஆயிரத்துள் இவையும் பத்தும்
[வல்லார்கள்*
நல்ல பதத்தால் மனைவாழ்வர் கொண்ட பெண்டிர்
மக்களே.

**பிறரைமங்களா சாசனம் செய்யும்-வாழ்த்தும்
பாசுரம்

284 ★**மாலைநண் ணித்தொழு தெழுமினோ வினைகெட*
காலை மாலை கமல மலர் இட்டுநீர்*
வேலை மோதும் மதில்சூழ் திருக்கண்ணபுரத்து
ஆலின் மேலால் அமர்ந் தான்அடி யிணைகளே.

285 ★**சரணம் ஆகும்தன தாளடைந் தார்க்கெல்லாம்*
மரணமா னால்வைகுந் தம்கொடுக் கும்பிரான்*
அரண்அமைந்த மதில்சூழ்திருக் கண்ணபுரத்
தரணியாளன்* தனதன்பர்க்கன் பாகுமே.

286 *ஊரும்புள் கொடியும்அஃதே உலகெல்லாம்
[உண்டுமிழ்தான்*
சேரும்தண் அனந்தபுரம் சிக்கெனப் புகுதிராகில்*
தீரும்நோய் வினைகள் எல்லாம் திண்ணம் நாம் அறியச்
சொன்னோம்*
பேரும்ஓ ராயிரத்துள் ஒன்றுநீர் பேசுமினே.

287 **கண்ணன் கழலிணை* நண்ணும் மனமுடையீர்!
எண்ணும் திருநாமம்* திண்ணம் நாரணமே.

288 நாடீர் நாடோறும்* வாடா மலர்கொண்டு*
பாடீர் அவன்நாமம்* வீடே பெறலாமே.

289 குரைகழல்கள் குறுகினம் நங்கோவிந்தன்
[குடிகொண்டான்*
திரைகுழுவு கடல்புடைசூழ் தென்னாட்டுத் திலதமன்ன*
வரைகுழுவு மணிமாட வாட்டாற்றான் மலரடிமேல்*
விரைகுழுவும் நறுந்துளவம் மெய்ந்நின்று கமழுமே.

290 **திருமாலிருஞ்சோலைமலையே திருப்பாற் கடலே
என்தலையே*
திருமால் வைகுந் தமேதண்திருவேங்கடமே எனதுடலே*
அருமா மாயத் தெனதுயிரே மனமே வாக்கே கருமமே*
ஒருமா நொடியும் பிரியான என் ஊழி முதல்வன் ஒருவனே.

291 மங்க ஒட்டுன் மாமாயை திருமாலிருஞ்சோலைமேய
நங்கள் கோனே! யானேநீ யாகி யென்னை யளித்தானே
பொங்கைம் புலனும் பொறியைந்தும் கருமேந் திரியம்
[ஐம்பூதம்*
இங்கிவ் வுயிரேய் பிரகிருதி மானாங் கார மனங்களே.

292 உற்றேன் உகந்து பணிசெய் துனபாதம்
பெற்றேன்* ஈதேயின் னம்வேண் டுவதெந்தாய்*
கற்றார் மறைவாணர்கள் வாழ்திருப் பேராற்கு*
அற்றார் அடியார் தமக்கல்லல் நில்லாவே.

293 ★**சூழ்விசும் பணிமுகில் தூரியம் முழக்கின*
ஆழ்கடல் அலைதிரை கையெடுத் தாடின*
ஏழ்பொழி லும்வளம் ஏந்திய என்னப்பன்*
வாழ்புகழ் நாரணன் தமரைக்கண் டுகந்தே.

294 ★**வைகுந்தம் புகுதலும் வாசலில் வானவர்*
வைகுந்தன் தமர்எமர் எமதிடம் புகுதென்று*
வைகுந்தத் தமரரும் முனிவரும் வியந்தனர்*
வைகுந்தம் புகுவது மண்ணவர் விதியே.

295 ★**வந்தவர் எதிர்கொள்ள மாமணிமண்டபத்து*
அந்தமில் பேரின்பத் தடியரோ டிருந்தமை*
கொந்தலர் பொழில்குரு கூர்ச்சடகோபன்* சொல்
சந்தங்கள் ஆயிரத் திவைவல்லார் முனிவரே.

296 **முனியே! நான்முகனே! முக்கண் ணப்பா!* என்
பொல்லாக்
கனிவாய்த் தாமரைக் கண்கரு மாணிக்கமே! என்கள்வா!
தனியேன் ஆருயிரே! என்தலை மிசையாய் வந்திட்டு
இனிநான் போகவொட்டேன் ஒன்றும் மாயம்செய்
[யேல் என்னையே.

297 **மாயம்செய் யேல்என்னை உன்திரு மார்வத்து மாலை
[நங்கை*
வாசம்செய் பூங்குழலாள் திருவாணை நின்னாணை
கண்டாய்*
நேசம்செய் துன்னோடென்னையுயிர் வேறின்றி
ஒன்றாகவே*
கூசம்செய் யாதுகொண்டாய் என்னைக் கூவிக்கொள்ளாய்
வந்தந்தோ

298 ** கோல மலர்ப்பாவைக் கன்பாகிய வென் அன்பேயோ!
நீல வரையிரண்டு பிறைகவ்வி நிமிர்ந்த தொப்ப*
கோல வராகமொன்றாய் நிலங்கோட்டிடைக் கொண்ட
[எந்தாய்!*
நீலக் கடல் கடைந்தாய்! உன்னைப் பெற்றினிப்
[போக்குவனோ?

299 **சூழ்ந்தகன் றாழ்ந்துயர்ந்த முடிவில் பெரும்
பாழேயோ!*
சூழ்ந்தத னில்பெரிய பரநன் மலர்ச்சோ தீயோ!*
சூழ்ந்தத னில்பெரிய சுடர்ஞான இன்ப மேயோ!*
சூழ்ந்தத னில்பெரிய என் அவா அறச்சூழ்ந்தாயே!

300 **அவாவறச் சூழ்அரியை அயனை அரனை அலற்றி*
அவாவற்று வீடுபெற்ற குருகூர்ச் சடகோபன் சொன்ன
அவாவிலந் தாதிகளால் இவையா யிரமும்* முடிந்த
அவாவிலந் தாதியிப் பத்தறிந் தார்பிறந்தார் உயர்ந்தே.

(பாசுரம் 61, 62, 66, 73 காண்க).

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

*திருவாய்மொழி நூற்றந்தாதி

301 *உயர்வே பரன்படியை யுள்ளதெல்லாந் தான்கண்டு
உயர்வேத நேர்கொண் டுரைத்து*—மயர்வேதும்
வாராமல் மானிடரை வாழ்விக்கும் மாறன்சொல்*
வேராக வேவிளையும் வீடு.

302 *முனிமாறன் முன்புரைசெய் முற்றின்ப நீக்கித்
தனியாகி நின்று தளர்ந்து,—நனியாம்
பரமபத்தி யால்நைந்து பங்கயத்தாள் கோனை
ஒருமையுற்றுச் சேர்ந்தான் உயர்ந்து

மணவாள மாமுனிகள் திருவடிகளே சரணம்

## திருவரங்கத் தமுதனார் அருளிய
## இராமாநுஜ நூற்றந்தாதி

303 **பூமன்னு மாது பொருந்திய மார்பன்* புகழ் மலிந்த
பாமன்னு மாறன் அடிபணிந் துய்ந்தவன்* பல்கலையோர்
தாம்மன்ன வந்த இராமா னுசன்சர ணாரவிந்தம்
நாம் மன்னி வாழ* நெஞ்சே! சொல்லுவோம் அவன்
நாமங்களே

304 மொழியைக் கடக்கும் பெரும்புக ழான் வஞ்ச
முக்குறும்பாம்
குழியைக் கடக்கும் நம் கூரத்தாழ் வான்சரண் கூடியபின்*
பழியைக் கடத்தும் இராமா னுசன்புகழ் பாடி* அல்லா
வழியைக் கடத்தல்* எனக்கினி யாதும் வருத்தமன்றே.

305 **இருப்பிடம் வைகுந்தம் வேங்கடம் மாலிருஞ்சோலை
யென்னும்
பொருப்பிடம்-மாயனுக் கென்பர் நல்லோர் அவை
[தன்னொடும்வந்
திருப்பிடம் மாயன் இராமநுசன் மனத்து; இன்றவன்வந்
திருப்பிடம்* என்றன் இதயத்துள் ளேதனக்கின்புறவே.

306 **இன்புற்ற சீலத் திராமாநுச!* என்றும் எவ்விடத்தும்
என்புற்ற நோயுடல் தோறும் பிறந்திறந்து* எண்ணரிய
துன்புற்று வீயினும் சொல்லுவ தொன்றுண்டுன்
தொண்டர்கட்கே
அன்புற் றிருக்கும்படி* என்னை யாக்கியங் காட்படுத்தே.

307 **அங்கயல் பாய்வயல் தென்னரங்கன் * அணியாகம்
மன்னும்
பங்கய மாமலர்ப் பாவையைப் போற்றதும்
பத்தியெல்லாம்
தங்கிய தென்னத் தழைத்து நெஞ்சே! நந்தலைமிசையே
பொங்கிய கீர்த்தி* இராமா னுசனடிப் பூமன்னவே.

சாத்துமறை—தென்கலையார

!பல்லாண்டு 2 அடியோ (உஅ) சர்வதேச, ராமாநுஜா*
ஸ்ரீமந் ஸ்ரீரங்க, நமஸ்: ஸ்ரீசைல நாதாய, ஸ்ரீசைலேச
முதலியவை சேவிப்பது

308 ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி,
தாழ்வாதுமில் குரவர் தாம் வாழி—ஏழ்பாரும்
உய்ய அவர்களுரைத் தவைகள் தாம்வாழி,
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

309 செய்ய தாமரைத் தாளிணை வாழியே*
சேலை வாழி திருநாபி வாழியே*
துய்ய மார்பும் புரிநூலும் வாழியே*
சுந்தரத் திருத்தோளிணை வாழியே*
கையு மேந்திய முக்கோலும் வாழியே
கருணை பொங்கிய கண்ணிணை வாழியே*
பொய்யிலாத மணவாள மாமுனி
புந்திவாழி புகழ்வாழி வாழியே

310 அடியார்கள் வாழ அரங்கநகர் வாழ,
சடகோபன் தண்தமிழ் நூல் வாழ,—கடல் சூழ்ந்த
மன்னுலகம் வாழ மணவாள மாமுனியே!
இன்னும் ஒரு நூற்றாண்டு இரும்.

வடகலையார்

311 நானிலமும் தான்வாழ நான்மறைகள் தாம்வாழ,
மாநகரின் மாறன் மறைவாழ—ஞானியர்கள்
சென்னியணி சேர்தூப்புல் வேதாந்த தேசிகனே!
இன்னும் ஒரு நூற்றாண்டு இரும்.

ஆண்டாள் வாழித் திருநாமம்

312 திருவாடிப் பூரத்துச் செகத்துதித் தாள் வாழியே!
திருப்பாவை முப்பதூஉம் செப்பினாள் வாழியே!
பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்பிள்ளை வாழியே!
பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானாள் வாழியே!
ஒரு நூற்று நாற்பத்தொரு மூன்றுரைத்தாள் வாழியே!
உயரரங்கர்க் கேகண்ணி யுகந்தளித்தாள் வாழியே!
மருவாரும் திருமல்லி வளநாடி வாழியே!
வண்புதுவை நகர்க்கோதை மலர்ப்பதங்கள் வாழியே!

ரஹஸ்ய த்ரய அர்த்தாநு ஸந்தானம்

## (க) திருமந்த்ரம்

## ஓம் நமோ நாராயணாய :

(இத ஸ்ரீபதிரி காசிரமத்தில் ஸ்ரீமந் நாராயணனே ஆசார்யனும் சிஷ்யனுமாக இருவுரு ஏற்றுநின்று அருளியது,)

அ — சகல ஜகத்காரண பூதனாய், சர்வ ரக்ஷகனாய், ஸ்ரீய: பதியாய், சர்வ சேஷியாய், ஸமஸ்த கல்யாண குணாத்மகனான எம்பெருமான்

ஆய — (லுப்த சதுர்த்தி) பொருட்டு

ம — சேஷத்வாச்ரயனாய், சதுர்விம்சதி தத்வாத்மகனான தேகத்தைப் பார்க்கிலும் பரனாய், அணுவாய், நித்யனாய், ஜ்ஞாநாநந்த மயனான அடியேன் சேஷபூதன்.

உ — அந்யர்களுக்கு சேஷபூதனல்லன்

நம : — எனக்கு நானும் சுதந்திரனல்லன். எம்பெருமானுக்கே பரதந்த்ரன். எனக்கு எம்பெருமானே ஸ்வரூபாநுரூபமான உபாயமும், உபேயமும். நான் பாகவத பர்யந்தம் சேஷபூதனாய், பரதந்த்ரனாயிருப்பவன்.

நாராயண — ஸகலாதாரமாய், ஸர்வாந்தர்யாமியாய், ஸர்வ ஸ்மாத்பரனாய், ஸர்வ ஸுலபனாய், ஸகல சேதநர்களுக்கும் உபாயோபேயமாய், ஸர்வவித பந்துவாய், ஸ்ரீ ஸமேதனான எம்பெருமானுடைய முகோல்லாசத்தின்

ஆய — பொருட்டு, "இந்தக் கைங்கர்யம் நான் பண்ணுகிறேன், இந்தக் கைங்கர்யம் என்னுடையது" என்கிற அஹங்கார மமகார நிவ்ருத்தி பூர்வகமாய் ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தைகளில் பண்ணும் ஸர்வவித கைங்கர்யங்களையும் லபிப்பதாக க்ருபை செய்யும்படி ப்ரார்த்திக்கிறேன்.

குணாத் மகன்—குணங்களை இயற்கையாக உடையவன். சேஷத்வாச்ரயனாய்—அடிமைக்கு இருப்பிடமாய், சதுர் விம்சதி —இருபத்து நான்கு. தத்வாத்மகமான—தத்வ ஸ்வரூபமான ஸர்வ ஸ்மாத்பரனாய் — எல்லாப் பொருளிலும் மேலானவனாய், ஸர்வாவஸ்தைகளிலும் — எல்லா நிலைகளிலும், லபிப்பதாக — கைகூடுவதாக.

## (௧௦) த்வயம்

ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே!
ஸ்ரீமதே நாராயணாய நம: ||

(இது ஸ்ரீவைகுண்டத்தில் பெருமாள் பிராட்டிக்கு உபதேசித்தது. பிராட்டி சேனை முதலிக்கும், சேனைமுதலி நம்மாழ்வாருக்கும் உபதேசித்து வழி வழி வருவது)

ஸ்ரீ — ஸகல சேதனர்களால் ஆச்ரயிக்கப்பட்டு, எம்பெருமானை ஸதா ஆச்ரயித்திருக்கும் புருஷகார பூதையான பெரிய பிராட்டியாரோடு

மந் நித்ய யோகமுடைய

நாராயண வாத்ஸல்ய, ஸ்வாமித்வ, ஸௌசீல்ய, ஸௌலப்ய, ஜ்ஞாந, சக்தி, ப்ராப்தி, பூர்த்திகளாகிற கல்யாணகுண விசிஷ்டனான எம்பெருமானுடைய

சரணௌ உபாயாந்தரத்தை ஸஹியாததாய், ப்ராப்தமாய், போக்கியமாயிருக்கும் திருவடித் தாமரைகளையே

சரணம் — உபாயமாய்

ப்ரபத்யே — உபாயாந்தர ரக்ஷகாந்தர சூந்யனான அடியேன் ஆச்ரயிக்கிறேன் (பற்றுகிறேன்)

நம: — அநிஷ்டமான தேஹாந்தர, ஸ்வர்க்க, நரக கைவல்யங்கள் வராமலிருக்கும் பொருட்டு அவற்றிற்கு ஹேதுவான அவித்யா கர்ம வாஸநா ருசி ப்ரக்ருதி ஸம்பந்தங்கள் நசித்து "இந்தக் கைங்கர்யத்தை நான் செய்கிறேன், இந்தக் கைங்கர்யம் என்னுடையது, இது எனக்குப் போக்யமாயிருக்கிறது" என்கிற அஹங்கார மமகார நிவ்ருத்தி பூர்வகமாய்

ஸ்ரீமதே — ப்ராப்ய பூதையாய், கைங்கர்யத்திற்கு விஷய பூதையாய், கைங்கர்ய வர்த்தகையாகிய பெரிய பிராட்டியாரோடு நித்யமாகக் கூடியிருக்கும்

நாராயண — ஸௌந்தர்ய ஸம்பந்நமான திவ்யமங்கள விக்ரஹ விசிஷ்டனாய், ஸமஸ்த கல்யாண குணாத்மகனாய், ஸர்வசேஷியான எம்பெருமானுடைய முகோல்லாஸத்தின்

ஆய — பொருட்டு, பரமபதந் தொடங்கி ஸர்வ தேசங்களிலும், ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும், ஸர்வவித கைங்கர்யங்களைப் பண்ணும்படி க்ருபை செய்தருள ப்ராத்தித்து லபித்துக் கொள்வதற்கு,

(உபாயமாக ஆச்ரயிக்கிறேன் என்பதோடு அந்வயம்.)

## (கக) சரமச்லோகம்

ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ
அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மாசுச:||

(இதுபகவான் தேர்த்தட்டில் ஸ்ரீபார்த்தசாரதியாய் நின்று அர்ஜுனனுக்கு உபதேசித்த கீதையின பதினெட்டாம் அத்தியாத்தின் அறுபத்தாறாம் சுலோகம்.)

ஸர்வதர்மாந் — ச்ருதி ஸ்ம்ருதி சோதிதங்களாய் யோக்யதையை உண்டு பண்ணும் நித்ய நைமித்திகங்களோடு கூடிய கர்மயோகாத்யுபாயங்களை

பரித்யஜ்ய — முத்தூச்சிப்பியில் ரஜதபுத்தி பண்ணுவாரைப் போலவும், விபரீததிசாகமநம் பண்ணுவாரைப் போலவும், அநுபாயங்களில் உபாயபுத்தி பண்ணினோம என்கிற புத்தி விசேஷத்தோடும், ருசி வாஸநைகளோடும் லஜ்ஜையோடும் மறுபடியும் அவற்றில் அந்வயம் வராமலிருக்கும்படியாக விட்டு "லோகஸங்க்ரஹார்த்தமாகச் செய்வது" என்று நியமித்த ஸ்வவர்ண ஸ்வாச்ரமோசித நித்ய நைமித்திகங்களை மாத்திரம் கைங்கர்ய ரூபமாகச் செய்து கொண்டு ஸ்வபர விநாசஹேதுவாய் ஸ்வரூபோபாய புருஷார்த்தங்களுக்கு ஹாநியான நிஷித்த க்ருத்யங்களைச் செய்யாமல்.

மாம் — வாத்ஸல்ய, ஸ்வாமித்வ, ஸௌசீல்ய, ஸௌலப்ய குணவிசிஷ்டனான என்னை

ஏகம் — யே, நீ செய்யும் ஸ்வீகாரத்தில் உபாய பாவம் பண்ணாமல்

சரணம் — உபாயமாய்

வ்ரஜ — நம்பு;

அஹம் — ஸர்வஜ்ஞனாய், ஸர்வசக்தனாய், ப்ராப்தனான நான்

த்வா — அஜ்ஞனாய், அசக்தனாய், அப்ராப்தனாய் என்னையே உபாயமாய் நம்பியிருக்கும் உன்னை

ஸர்வபாபேப்ய:— என்னை அடைவதற்கு ப்ரதிபந்தகங்களான அவித்யா கர்ம வாஸநா ருசி ப்ரக்ருதி ஸம்பந்தங்களிலிருந்து

மோக்ஷயிஷ்யாமி— விமுக்தனாக்குகிறேன்.

மாசுச: — நீசோகிக்க வேண்டிய நிமித்தமில்லை. என்று ஸாரத்தியம் நடத்தின தேவரருளிச் செய்த சரமச்லோகத்தை அநுஸந்திக்

(சஉ) பெருமாள் தாயார் பன்னிரு திருநாம மந்திரம்

பன்னிரு திருமண்காப்பு-துவாதச ஊர்த்வ புண்ட்ரங்கள்-தரிக்கும் போது அநுசந்திப்பது. மலரிட்டு (அருச்சனை) வழி படவும் ஆம்.

| | பெருமாள் திருநாமம் : மந்திரம் | தாயார் திருநாமம் : மந்திரம் |
|---|---|---|
| 1. | ஓம் கேசவாய நம: | ஓம் ஸ்ரீ தேவ்யை நம: |
| 2. | ஓம் நாராயணாய நம: | ஓம் அம்ருதோத்பவாயை நம: |
| 3. | ஓம் மாதவாய நம: | ஓம் கமலாயை நம: |
| 4. | ஓம் கோவிந்தாய நம: | ஓம் சந்த்ரசோபின்யை நம: |
| 5. | ஓம் விஷ்ணவே நம: | ஓம் விஷ்ணுபத்ந்யை நம: |
| 6. | ஓம் மதுசூதனாய நம: | ஓம் வைஷ்ணவ்யை நம: |
| 7. | ஓம் திரிவிக்ரமாய நம: | ஓம் வராரோஹாயை நம: |
| 8. | ஓம் வாமநாய நம: | ஓம் ஹரிவல்லபாயை நம: |
| 9. | ஓம் ஸ்ரீ தராய நம: | ஓம் சார்ங்கிண்யை நம: |
| 10. | ஓம் ஹ்ருஷீகேசாய நம: | ஓம் ஸ்ரீ தேவதேவ்யை நம: |
| 11. | ஓம் பத்மநாபாய நம: | ஓம் மஹாலக்ஷ்ம்யை நம: |
| 12. | ஓம் தாமோதராய நம: | ஓம் லோக பூஜிதாயை நம: |

உடலில் அவர்கள் எழுந்தருளுமிடம்

1. நெற்றி 2. வயிறு நாபிக்குமேல் 3. மார்பு 4. நெஞ்சு
5. வல வயிறு 6. வலப்புயம் 7. வலக்கழுத்து
8. இட வயிறு 9. இடப்புயம் 10. இடக்கழுத்து
11. அடி முதுகு 12. பிடரி,

(சஙூ) கோபால மந்திரம்

1. ஓம் க்லீம் க்ருஷ்ணாய கோவிந்தாய
கோபீஜந வல்லபாய ஸ்வாஹா.

2. ஓம் நமோ விச்வரூபாய விச்வஸ்தித்யந்த ஹேதவே।
விச்வேச்வராய விச்வாய கோவிந்தாய நமோ நம: ॥

நமோ விஜ்ஞாநரூபாய பரமாநந்த ரூபிணே।
க்ருஷ்ணாய கோபீநாதாய கோவிந்தாய நமோ நம: ॥

நம: கமல நேத்ராய* நம: கமல மாலினே|
நம: கமல நாபாய* கமலா பதயே நம: ||

பர்ஹாபீடாபி ராமாய ராமாயாகுண்டமேதஸே|
ரமா மாநஸ ஹம்ஸாய கோவிந்தாய நமோ நம: ||

சப்ஸ வேச்ச விநாசாய சேசிசாணூர சாதிநே|
வ்ருஷப த்வஜ வந்த்யாய பார்த்த ஸாரதயே நம: ||

(கச) ஓம் சங்க சக்ர கதா பாணே* த்வாரகா நிலயா* அச்சுதா.
கோவிந்த புண்டரீகாக்ஷ ரக்ஷமாம் சரணாகதாம்

சரு) ஹரே ராம ஹரே ராம ராம ராம ஹரே ஹரே
ஹரே க்ருஷ்ண ஹரே க்ருஷ்ண க்ருஷ்ண க்ருஷ்ண
ஹரே ஹரே

(இந்தப் பதினாறு நாமங்கள் கலிதோஷத்தை நாசம் செய்யும். இதைக் காட்டிலும் சிறந்த உபாயம் சகல வேதங்களிலேயும் காணப்படவில்லை. இந்தப் பதினாறு நாமங்கள் பதினாறு கலைகளால சூழப்பட்டிருக்கிற ஜீவனுடைய ஆவரணத்தை (ஞானத்திற்கு மறைவாயிருக்கிற அவித்யையை) நாசம் செய்கிறது. அதற்குப் பிறகு, மேகம் போன பிறகு, சூரிய மண்டலம் பிரகாசமாவது போல, பரப்பிர்ம்மம் பிரகாசிக்கும்.
—யஜுர்வேதம்.

(கசு) வாக்ய குருபரம்பரை

அஸ்மத் குருப்யோ நம:
அஸ்மத் பரமகுருப்யோ நம:
அஸ்மத் ஸர்வகுருப்யோ நம:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீபராங்குச தாஸாய நம: (பெரிய நம்பி)
ஸ்ரீமத் யாமுநமுநயே நம: (ஆளவந்தார்)
ஸ்ரீ ராம மிஸ்ராய நம: (மணக்கால் நம்பி)
ஸ்ரீ புண்டரீ காக்ஷாய நம : (உய்யக்கொண்டார்)
ஸ்ரீமந் நாதமுநயே நம :
ஸ்ரீமதே சடகோபாய நம :
ஸ்ரீமதே விஷ்வக்ஸேநாய நம :
ஸ்ரீயை நம:
ஸ்ரீதராய நம :

## (கஎ) முகுந்தமாலை தனியன்

குஷ்யதே யஸ்ய நகரே ரங்க யாத்ரா திநேதிநே
தம் அஹம் சிரஸா வந்தே ராஜாநம் குலசேகரம்.

(யாவரொருவருடைய நகரத்தில் (கொல்லி) நாள்தோறும் 'ஸ்ரீரங்கயாத்ரை' என்கிற சப்தமானது கோஷிக்கப் படுகின்றதோ அந்த ராஜாவாகிய ஸ்ரீகுலசேகராழ்வாரை அடியேன் தலையினால் வணங்குகின்றேன்)

## (கஅ) தீர்த்தப் ப்ரபாவ ஸ்லோகம்

த்ரிஸ்ர : கோட்யர்த்த கோடீச தீர்த்தாநி புவநத்ரயே,
வைஷ்ண வாங்க்ரிஜலாத் புண்யாத்கோடி பாகே நநோ ஸமம்.

(மூன்று உலகங்களிலுள்ள மூன்றரைக்கோடி தீர்த்தங்களும் வைஷ்ணவர்களுடைய தூய ஸ்ரீபாத தீர்த்தத்தின் கோடியில் ஒரு பாகத்திற்கும் சமானமாக மாட்டாது)

## (கக) கூரத்தாழ்வானருளியவாக்கிய குருபரம்பரை சுலோகம்

அஸ்மத்தேசிகமஸ்மதீய பரமாசார்யாந் அசேஷாந்குருந்
ஸ்ரீமந்லக்ஷ்மண யோகிபுங்கவ மஹாபூர்ணௌமுநிம்யாமுநம்
ராமம் பத்ம விலோசநம் முநிவரம் நாதம்சடத்வேஷிணம்
ஸேநேசம் ச்ரியமிந்திராஸஹசரம் நாராயணம் சம்ச்ரயே.

(என் ஆசாரியனையும், என்னுடைய பரமாசார்யர்களையும் மற்றுமுள்ள எல்லாவாசார்யர்களையும், ஸ்ரீமத் ராமாநுஜ முநிவரையும், பெரிய நம்பியையும், ஸ்ரீஆளவந்தாரையும், மணக்கால் நம்பியையும், உய்யக்கொண்டாரையும், ஸ்ரீமந்நாத முநிகளையும், நம்மாழ்வாரையும், சேனைமுதலியாரையும், பெரிய பிராட்டியாரையும், அவளுடைய கொழுநனான நாராயணனையும் ஆச்ரயிக்கிறேன்)

## (உ0) ஸ்ரீ இராமாயண சுலோகம்

கௌசல்யா ஸுப்ரஜா ராம பூர்வாஸந்த்யா ப்ரவர்த்ததே
உத்திஷ்ட்ட நரஸார்தூல கர்த்தவ்யம் தைவம் ஆஹ்நிகம்.

'கௌசல்யை நல்ல குமாரனை உடையாள். ஸ்ரீ ராமா! காலைச்சந்தி நிகழ்கிறது. புருஷர்களுள் தலையாயவனே! தேவதா சம்பந்தமான நாட்கடன் செய்யத்தகுந்தது. ஆகையால் நித்திரையினின்று எழுந்திராய்.)

(உக) தியாந சுலோகம்

கூர்மாதீந் திவ்யலோகாந் ததநுமணிமயம் மண்டபம் தத்ரசேஷம்
தஸ்மிந் தர்மாதிபீடம் ததுபரிகமலஞ் சாமர க்ராஹிணீச்ச,
விஷ்ணுந் தேவீர் விபூஷாயுத கண முரகம் பாதுகே வைந தேயம்,
ஸேநேசம் த்வாரபாலாந் குமுதமுககணாந் விஷ்ணுபக்தாந் ப்ரபத்யே.

(கூர்மாதிகளையும், திவ்யலோகங்களையும், அதன்பிறகு மணிமயமான மண்டபத்தையும், அதனுள் அநந்தாழ்வானையும். அவரிடத்து தர்மாதிபீடத்தையும், அதன்மேல் கமலத்தையும், சாமரத்தைப் பிடித்துக் கொண்டிருப்பவர்களையும், விஷ்ணுவையும், தேவிமாரையும், ஆபரணங்களையும், ஆயுதங்களையும், நித்ய சூரிகளையும், பாதுகைகளையும், கருடாழ்வானையும் சேனை முதலியாரையும், துவார பாலகர்களான குமுதன் முதலான கணங்களாகிய விஷ்ணுபக்தர்களையும் சரணமாகப் பற்றுகிறேன்.)

(உஉ) கூரத்தாழ்வான் அருளிய சுலோகம்

ராமாநுஜாங்க்ரி ஸரணோஸ்மி குலப்ரதீப :
ஸ்வாஸீத் ஸயா முநமுநேஸ் ஸசநாதவம்ஸ்ய;
வம்ஸ்ய : பராங்குஸமுநேஸ் ஸசஸோபி தேவ்யா :
தாஸஸ்தவேதி வரதாஸ்மி தவேக்ஷணீய :

(வரதராஜனே! எம்பெருமானரைச் சரணடைந்தவன்யான் அவரோ ஆளவந்தார் குலத்துக்கோர் விளக்காயிருக்கிறார். அவ் ஆளவந்தாரோ ஸ்ரீமந்நாதமுனிகளது வம்சத்தவராவர். அந்நாத முனிகளும் நம்மாழ்வார் வம்சத்தவராவர். அந்த ஆழ்வாரும் தேவரீருடைய தேவிகளுடைய தொண்டர் என்கிற காரணத்தாலே அடியேன் தேவரீர் கடாக்ஷத்திற்கு யோக்யனாஇறேன். அதாவது தேவரீருக்கு பரம்பரையாக சம்பந்தம் பெற்ற இராமாநுஜனை சரணம் அடைந்தேன். அதனால் அடியேன் அருளத் தக்கவன் ஆகிறேன்.)

(உஙூ) பிரமன் ஸாதித்த ஜிதந்தா சுலோகம்

உபசாராபதேசேந க்ருதாந் அஹரஹர்மயா,
அபசாரந் இமாந் ஸர்வாந் க்ஷமஸ்வ புருஷோத்தம.

(புருஷோத்தமனே! நாடோறும் அடியேனால் உபசாரம் செய்தலென்கிற வியாஜத்தாலே பண்ணப்பட்ட இவ்வபசாரங்களெல்லாவற்றையும் பொறுத் தருளவேணும்)

(உச)சயனிக்கும்போது அநுஸந்திக்கும் சுலோகம்

ராமாநுஜம் ப்ரபந்நாயே ரக்ஷாம் வீக்ஷ்ய தயா நிதே:
கரம் வக்ஷஸி நிக்ஷிப்ய நித்ராம் குர்வந்தி நிர்பயா :

(இராமாநுசனைச் சரணமடைந்தவர்கள் எவரோ அவர்கள் கருணாநிதியான எம்பெருமானுடைய ரக்ஷணத்தைப் பார்த்து கையை மார்பில் வைத்து பயமின்றி துயில்வார்கள்)

(உரு) உத்தரவாக்யம்

"ஸ்ரீமதே நாராயணாய நம :'

(உசா)

ஸர்வ மங்கள விக்ரஹாய, ஸமஸ்த பரிவாராய.
ஸ்ரீமதே நாராயணாய நம :

(உஎ) மங்களாசாஸனம்

லக்ஷ்மீசரண லாக்ஷாங்க ஸாக்ஷாத் ஸ்ரீவத்ஸவக்ஷஸே
க்ஷேமங்கராய ஸர்வேஷாம் ஸ்ரீரங்கேஸாய மங்களம்
ஸ்ரீய : காந்தாய கல்யாண நிதயே நிதயேர்த்திநாம்
ஸ்ரீவேங்கட நிவாஸாய ஸ்ரீநிவாஸாய மங்களம்.
அஸ்து ஸஸ்தன கஸ்தூரி வாஸனா வாஸிதோரஸே
ஸ்ரீஹஸ்திகிரி நாதாய தேவராஜாய மங்களம்.
கமலாகுச கஸ்தூரி கர்தமாங்கித வக்ஷஸே
யாதவாத்ரி நிவாஸாய ஸம்பத் புத்ராய மங்களம்.
நீலாசல நிவாஸாய நித்யாய பரமாத்மனே
ஸுபத்ரப்ராண நாதாய ஸ்ரீஜகந்நாதாய மங்களம்.
மங்களம் கோஸ்லேந்த்ராய மஹநீய குணாத்மனே
சக்ரவர்த்தி தநூஜாய ஸார்வபௌமாய மங்களம்.
ஸ்வோச்சிஷ்ட மாலிகாபந்த கந்தபந்துர ஜிஷ்ணவே
விஷ்ணுசித்த தனூஜாயை கோதாயை நித்யமங்களம்
ஸ்ரீநகர்யாம் மஹாபுர்யாம் தாம்ரபர்ணீ யுத்தரே தடே
ஸ்ரீதிந்திரிணீ மூலதாம்னே சடகோபாய மங்களம்.
ஸ்ரீபராங்குச பதாப்ஜ ஸுரபீக்ருத மௌளயே
ஸ்ரீவத்ஸசிஹ்ன நாதாய யதிராஜாய மங்களம்.
துலாமூலாவதீர்ணாய தோஷிதாகில ஸூரயே
ஸௌம்ய ஜாமத்ருமுனயே ஸேஷாம் ஸாயாஸ்து மங்களம்.
மங்களா ஸாஸனபரை மதாசார்ய புரோகமை
ஸர்வைச்ச பூர்வைராசார்யை ஸத்க்ருதாயாஸ்து மங்களம்.

(உஅ) சாத்துமறை

ஸர்வதேச தஸாகாலேஷ் வவ்யாஹத பராக்ரமா
ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததா மபிவர்த்ததாம். 1

ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா ப்ரதிவாஸரம் உஜ்ஜ்வலா,
திகந்த வ்யாபிநீ பூயாத் ஸாஹிலோக ஹிதைஷிணீ 2

ஸ்ரீமந் ஸ்ரீரங்க ஸ்ரீய அநுபத்ரவாம் அநுதிநம்
[ஸம்வர்த்தய

ஸ்ரீமந் ஸ்ரீரங்க ஸ்ரீய அனுபத்ரவாம் அநுதிநம்
[ஸம்வர்த்தய 3

நமஸ் ஸ்ரீசைலநாதாய குந்தீநகர ஜந்மநே
ப்ரஸாதலப்த பரம ப்ராப்ய கைங்கர்ய ஸாலிநே. 4

ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம்
யதீந்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம் 5

1. பெரிய ஜீயர் அருளியதும். எல்லாத் தேசங்களிலும் தசைகளிலும் காலங்களிலும் தடையற்ற பராக்கிரமமுடையதாக எம்பெருமானாருடைய திவ்யமான கட்டளை வளர்க! எங்கும் வளர்க!

2. கந்தாடையண்ணன் அருளியது. ராமாநுஜார்யனது திவ்யமான நியமநம் நாடோறும் மிகவொளிர்ந்து திசைகளளவும் பரவியிருக்கக் கடவது. அதுவே உலகினர்க்கு இதத்தை விரும்பிக்கொண்டிருப்பது.

3. உடையவர் அருளியது. சீ மானே! திருவரங்கத்துச் செல்வம் இடுக்கண் இல்லாமல் நாடோறும் தழைத்து செல்லும்படி வரைச் செய்தருளவேணும்.

4. பெரியஜீயர் அருளியது. குந்தீ என்னும் நகரில் பிறந்தவரும் பிள்ளைலோகாசாரியரின் கிருபையால் அடைந்த பெரும் பேறான கைங்கரியத்தினால் விளங்கினவருமான திருவாய்மொழிப் பிள்ளைக்கு நமஸ்காரம் .

வடகலையார் சாத்து

1 முதல் 3 வரையோடு கீழ் உள்ளதைச் சேர்த்து அநுசந்திப்பர்.

நமோ ராமாநுஜார்யாய வேதாந்தார்த்த ப்ரதாயிநே,
ஆத்ரேய பத்மநாபார்ய ஸுதாய குணசாலிநே.
வேதாந்ததேசிகர் அருளியது.

ராமாநுஜ தயாபாத்ரம்—வடமொழி தனியன் (உ)

## அன்றாட ஒழுக்க விதி (நித்ய அனுஷ்டானம்)

**துயிலெழல் :** நாள்தோறும் காலையில் விழித்ததும் படுக்கையிற்றானே கைகூப்பிக் கொண்டு (கசா) வாக்கிய குரு பரம்பரையையும் (கo) த்வயத்தையும் அநுசந்தித்து (சொல்லி), தன்னாசார்யன் முதல் ஆழ்வார் ஆசார்யர்களையும், பெரிய பிராட்டியார், பரமபதநாதன், கோயில் (ஸ்ரீரங்கம்) திருமலை, பெருமாள் கோயில் (காஞ்சிபுரம்) முதலான நூற்றெட்டுத் திவ்யதேச எம்பெருமான்களைத் தியானித்து (க) ஸ்ரீசைலேச தனியன் முதல் (13) திருப்பள்ளியெழுச்சி (23) திருப்பாவை அநுசந்திக்க வேண்டும். அதற்குச் சமயம் இல்லாவிடில் (23) மார்கழி (51) சிற்றம் (52) வங்கம் ஆகிய மூன்று பாசுரங்களாகிலும் அநுசந்திக்கவேண்டும். எழுந்த பின்பு (கள) குஷ்யதே என்னும் சுலோகத்தை அநுசந்தித்து ஸ்ரீரங்க யாத்திரை செய்வதாக பாவித்து பத்தெட்டடி கோயில் முகமாய் நோக்கி நடக்கவேண்டும்.

காலையில் வடக்கு முகமாய் இருந்து (மாலையில் தெற்குமுகமாய் இருந்து) மலசலம் கழித்துக் காலலம்பி, வேறு தீர்த்தத்தால் பத்துதரம் வாயைக் கொப்பளித்துப் பின் கிழக்கு அல்லது மேற்குமுகமாக இருந்து பல் தேய்த்துச் சுத்திசெய்து, உழுந்து எடை தீர்த்தத்தால் அஸ்மத் குருப்யோ நம: அஸ்மத் பரமகுருப்யோநம: அஸ்மத் சர்வகுருப்யோநம: என்றாவது அச்யுதாய நம: அநந்தாய நம: கோவிந்தாய நம: என்றாவது உச்சரித்து, மூன்றுதரம் ஆசமனம் (பருகுதல்) பண்ணவேண்டும்.

**நீராடல் :** (தீர்த்தமாடுதல்) ஒரு செம்பு நீரெடுத்து, (71) ஆயிரந்தோள் (72) இலைத்தலை (கஅ) த்ரிஸ்ரகோடி இவைகளைச் சொல்லி ஸ்ரீமத் பகவத் பாகவத அஸ்மதாசார்யர்களுடைய ஸ்ரீபாத தீர்த்தமென்று அபிமந்திரித்து தலையில் சேர்த்துக் கொண்டே ஸ்ரீபகவத் பாகவதர்களுக்குத் தொண்டு செய்கைக்காக உடம்பை அலம்புகிறேன் என்று நீராடவேண்டும். எம்பெருமானார் திருவடிகளே சரணம் என்று தூய துணியால் துவட்டி மடியோ, பட்டோ உடுத்திக்கொண்டு, காலலம்பி உட்கார்ந்து, முன்போலவே மூன்றுதரம் ஆசமனம் பண்ணிப் பின்னர்,

பெருவிரலினால் கேசவாய நம : என்று வலக் கன்னத்திலும், நாராயணாய நம : என்று இடக்கன்னத்திலும் மோதிர விரலினால் மாதவாய நம : என்று வலக்கண்ணிலும் கோவிந்தாய நம : என்று இடக்கண்ணிலும்; ஆள்காட்டி விரலினால் விஷ்ணவே நம:

என்று வலமூக்கிலும் மதுசூதனாய நம: என்று இடமூக்கிலும்; சுண்டு விரலினால் திரிவிக்ரமாய நம: என்று வலக்காதிலும், வாமநாய நம: என்று இடக்காதிலும்; நடுவிரலினால் ஸ்ரீதராய நம: என்று வலப் புயத்திலும், ஹ்ருஷீகேசாய நம: என்று இடப்புயத்திலும்; ஐந்து விரல்களாலும் பத்மநாபாய நம: என்று நாபியிலும், தாமோதராய நம: என்று பிடரியிலும் அங்கந்யாஸ கரந்யாஸங்கள் செய்யவேண்டும்.

**திருமண்காப்பு அணிதல்:** ஸ்ரீமதே நாராயணாய நம: என்று நீரால் தரை சுத்திசெய்து உயர்ந்த ஒரு மணையை அங்கு வைத்து அதன்மீது திருமண்பெட்டியை எழுந்தருளச் செய்து, தான் கிழக்குமுகமாய் ஒரு மணையின் மீது அமர்ந்து கொண்டு, கையைத் தட்டி திருமண் பெட்டியைத் திறந்து திருமண் கதிரை (நாமக்கட்டியை) கையில் வைத்து மூடிக்கொண்டு ஸ்ரீபூதேவ்யை நம: என்று மூன்றுமுறை அபிமந்திரித்து, தீர்த்தத்தை வலக் கையால் எடுத்து இடக்கையில் விட்டுத் திருமண் சேர்த்துக் கொணடே (க) ஸ்ரீசைலேச தனியன் தொடங்கி (1) திருப்பல் லாண்டு (84) கண்ணிநுண் (23) திருப்பாவை (303—307) இராமாநுச நூற்றந்தாதி (கசா) வாக்ய குருபரம்பரை (கசு) அஸமத் தேசிக (கூ) திருமந்திரம் (௧௦) த்வயம் (கக) சரம சுலோகம் இவைகளைக் காலோசிதமாகத் திருமண் ஸ்ரீசூர்ணம் அணிகிற வரையில் பூர்த்தியாகவாகிலும், சுருக்கமாய் முதற் பாசுரம் சாற்றுப் பாசுரமாகிலும், அநுசந்திக்க வேண்டும்.

பன்னிரு திருமண் காப்பு (த்வாதச ஊர்த்வ புண்ட்ரங்கள்) அணியும்போது (கஉ)-ல் கொடுத்துள்ள பிரகாரம் பெருமாள் பன்னிரு திருநாம திருமந்திரங்களையும், ஸ்ரீசூர்ணம் தரிக்கும் போது தாயார் பன்னிரு திருநாம திருமந்திரங்களையும் சொல்லிக் கொண்டே அணியவேண்டும். அதற்கு நேரமில்லாவிடில் ஆதியும் அந்தமுமாகிய நெற்றியிலும் பிடரியிலுமாவது அணிந்து, பின்பு கைகழுவாது நின்ற சேஷத்தைப் பூமியில் சிந்தாமல் இரண்டு கைகளையும் சேர்த்துச் சிரசில் தடவிக் கொள்ள வேண்டும்.

நூற்றெட்டுத் திவ்விய தேச பாவனையாகிய 108 திருத் துழாய் மணியுள்ள மாலையும், எழுபத்து நான்கு சிம்மாசனாதி பதிகளை நினைவூட்டுகிற 74 தாமரை மணிகளாலான நளினாக்ஷ மாலையும், திருபவித்ரமாலையும் (நூல்மாலை) கழுத்தில் அணிந்து கொண்டு, தன்னாசிரியர் திருவடிநிலையை சிரசில் வைத்துக் கொண்டு, கைகூப்பி மேற்படி கேசவாதி நாமங்களைச் சொல்லிக் கொணடே, பன்னிரு திருநாமங்கள் அணிந்துள்ள இடங்களுக்கு வணக்கம்செய்து, தன்னாசார்யனால் பிரசாதிக்கப்பட்ட

(கசா) வாக்யகுரு பரம்பரையாகிய 13 வாக்கியங்களையும், கூரத்தாழ்வான் அருளிய (கக) அஸ்மத் தேசிக வாக்ய குருபரம்பரை சுலோகத்தையும் (கூ) திருமந்திரம் (கo) த்வயம் (கக) சரம சுலோகம் முதலானவைகளை அநுசந்தித்து ஆசார்யர் தனியனையும், அவ்வம்ச பரம்பரையில் மணவாள மாமுனிகள் பெரிய பெருமாள் பர்யந்தமுள்ள தனியன்களையும் சேவித்து, தீர்த்தம ஸ்வீகரித்து (பருகி) திருமண் பெட்டியைச் சேர்த்துமூடி எழுந்தருளச் செய்யவேண்டியது.

## திருவாராதனைச் சுருக்கம்

**திருக்காப்பு நீக்குதல் :** திவ்ய தேசத்தெம் பெருமானுடைய சித்ர சொரூபமாகிய படம், அல்லது சிலை, திருவடி, அபய ஹஸ்தம், ஆசார்யன் திருவடி நிலை, இவைகளைத் தன் இல்லத்தில் (கோயிலாழ்வானில்) எழுந்தருளப் பண்ணிக் கொண்டு, அந்தச் சந்நிதியில் தண்டன் சமர்ப்பித்து நின்று கொண்டு [உo] கௌசல்யா என்னும் சுலோகத்தையும், [க முதல் சா] பொதுத் தனியன்களையும் [13] திருப்பள்ளி எழுச்சியையும், [44] அங்கண்மா ஞாலமும் சேவித்த பின்பு, [38] நாயகனாய் நின்ற பரசுரம் சேவித்துக் கையைத் தட்டி திருக்காப்பு நீக்கவும்,

திருவால வட்டம் [விசிறி] சமர்ப்பித்து, திருப்பள்ளி சோதித்து [பழைய பூ முதலியவைகளை நீக்கித் துப்புரவு செய்தல்] [45] மாரிமலை என்கிற பாசுரத்தால் எம்பெருமானுக்கு 'ரத்ன சிம்மாசனம்' என்று திருத்துழாய் சமர்ப்பித்து ஸ்ரீய : பதியை அதில் எழுந்தருள வேண்டுமென்று வேண்டிக் கொண்டு, அப்படியே அவர் பத்தெட்டடியிட்டு எழுந்தருளின அந்நடையழகுக்கு [46] அன்றிவ்வுலகம் என்கிற பாசுரத்தால் மங்களாசாசனம் செய்து [உஉ] ராமாநுஜாங்க்ரி என்கிற சுலோகத்தை அநுசந்தித்துப் பெருமாள் சந்நிதியில் தண்டன் சமர்பிக்கவும். அப்பால் வாக்கிய குருபரம்பரை. திருமந்திரம், த்வயம், சரமசுலோகம், [உக] தியான சுலோகம் முதலானவைகளை அநுசந்திக்கவும்.

பெருமாளுக்கும், உபய நாச்சிமாருக்கும், ஸ்ரீமதே நாராயணாய நம : என்றும், ஸ்வாசார்யருக்கு 'அஸ்மத் குருப்யோ நம : என்றும் திருவாராதனம் சமர்ப்பிக்கவேண்டும். ஆசார்ய திருவாராதனம் முதலில் செய்யவேண்டும்.

**வட்டில்களில் தீர்த்தம் சேர்த்தல் :** பெருமாளுக்கு வலப் பக்கத்தில் மணையின் மீது அமர்ந்துக்கொண்டு சந்நிதி பாத்திரங் களைத் துலக்கி மடியாய்க் கொண்டு வந்திருப்பதை, பெருமாள் சந்நிதியில் ஓர் ஆசனத்தின்மீது திருக்காவேரி என்னும் தீர்த்தச் செம்பையும், படிகத்தையும் ஒரு பெரிய தட்டில் (1) அர்க்யம் [ஸ்ரீ ஹஸ்தம் (கை) விளக்குகிறது] [2] பாத்யம் திருவடிகள் விளக்குகிறது] [3] ஆசமநீயம் [ஸ்வீகரிக்கிறது-பருகுவது] [4] ஸ்நாநம் [திருமஞ்சனம் செய்கிறது] இவைகளைக் குறிக்கும் வட்டில்களை வலப்புறத்திலிருந்து பிரதக்ஷிணமாக நான்கு பக் கதில் நான்கு வட்டில்களையும். நடுவே [5] சுத்தோதகம் [தூய நீர்] வட்டிலையும்,

வேறு இரண்டு வட்டில்களை (ஒன்று ஆசார்யருக்கு அர்க்ய பாத்யா சமநீய ஸ்நானோதக தீர்த்த வட்டில், மற்றொன்று சுத் தோதக வட்டில்) எதிர்ப்புறமாகவும் எழுந்தருளச் செய்து,

வட்டில்களுக்கு வாயு, அக்னி, ஜலத்தினால் சுத்தி செய்த பாவமாக அதற்குரிய 'ஸ்ரீமதே நாராயணாய நம: என்னும் மந் திரத்தை உச்சரித்து கைகளால் பரிசித்து சுத்தி செய்ய வேண்டும்.

செம்பு தீர்த்தத்தில் [திருக்காவேரி] திருத்துழாய், ஏலக்காய் பொடி, சாத்துப்படி (சந்தனம்) இவைகளைச் சேர்த்து சுரபி மூத்திரையால் [இரண்டு ஹஸ்தங்களையும் மடக்கி நடு விரலையும் ஆள்காட்டி விரலையும் சேர்த்து, சுண்டுவிரலையும் பவித்ர [மோதிர] விரலையும் சேர்க்க, இப்படி [இரண்டு விரல்கள் சேர்ந்து ஒருமுலைக் காம்பாய் பசுவின் நான்கு முலைக்காம்பு போலக் காட்டும் முத்திரை] சுரபி முத்திரையாய் தொட்டுப் பின் செம்பை வலக்கையினால் மூடிக்கொண்டு, ஐந்துதரம் ஸ்ரீமதே நாராயணாய நம ; என்று அபிமந்திரிக்கவும் [சொல்ல வேண்டும்].

சொம்பிலிருக்கும் தீர்த்தத்தாலும், திருத்துழாயாலும், [உரு] உத்தரவாக்கியத்தைக் கொண்டு அபிமந்திரித்த உத் தரணி [கரண்டி]யில், மேல்படி தீர்த்தங் கொண்டு மேல்படி வாக்கியத்தால் ஐந்து வட்டில்களையும் சோதித்துப் படிகத்தில் சேர்த்துவிட்டு, சொம்பிலிருக்கும் தீர்த்தத்தை அர்க்கிய வட்டில் தொடங்கிப் பிரதக்ஷிணமாக [வலமாக] நான்கு வட்டில் களிலும் நடுவட்டிலிலும் நிரைத்துப் பூரித்து, ஐந்து வட்டில் களையும் ஒவ்வொன்றாக சுரபி முத்திரை காட்டி, வலக்கையினால் மூடிஸ்ரீமதே நாராயணாய நம : என்று ஐந்துதரம் அபிமந்திரிக் கவும்.

திருத்துழாய்த் தளத்தைப் பவித்ர விரலுக்கும் நடு விரலுக்கும் மத்தியில் இடுக்கிக் கொண்டு பாத்ய வட்டில் தொடங்கி மூன்று வட்டில்களிலும் நடுவட்டிலிலும் கொஞ்சம் கொஞ்சமாய் உத்தரணியால் தீர்த்தத்தை எடுத்து அர்க்கியவட்டலில் சேர்த்து, அர்க்யவட்டிலிலிருந்து தீர்த்தத்தை உத்தரணியால் எடுத்து திருத்துழாயுடனே கையினால் உத்தரணியை மூடிக் கொண்டு, முகத்துக்கு நேரே தூக்கி, ஸ்ரீவிரஜை, திருக்காவேரி ஸ்வாமி புஷ்கரணி, அநந்தஸரஸ்ஸு திருத்தாம்பரபரணி திருக்கல்யாணி முதலான நூற்றெட்டுத் திவ்வியதேச தீர்த்தங்கள் என்று பாவித்து, ஸ்ரீமதே நாராயணாய நம: என்று ஐந்து தரம் அபிமந்திரித்து அர்க்கிய வட்டில் தவிர மற்ற நாலு வட்டில்களிலும் கொஞ்சம் கொஞ்சமாய்ச் சேர்த்து, மீதியைத் திருத்துழாயாலே பெருமாள் முதலியவர்கள், ஆசார்யன், சந்நிதி பரிகரங்கள்மீதும், தன்மீதும் தெளித்து [புரோக்ஷித்து] மிகுந்த தீர்த்தத்தைப் படிகத்தில் சேர்த்துவிடவும்.

**திருவாராதனம் சமர்ப்பித்தல் :** ஆசார்யன் திருக்கையால் திருவாராதனம் சமர்ப்பிப்பதாகப் பாவித்து ஐந்து வட்டில்களுள் அர்க்ய வட்டிலிலிருக்கும் தீர்த்தத்தை உத்தரணியில் கொண்டு "ஸர்வமங்கள விக்ரஹாய, ஸ்வஸ்த பரிவாராய, ஸ்ரீமதே நாராயணாய நம: என்று மூன்றுதரம் அர்க்கியம் சமர்ப்பித்து, நடுவட்டிலிலிருக்கும் சுத்தோதகத்தினால் உத்தரிணியைச் சோதித்துப் படிகத்தில் சேர்த்துவிட்டு:

பாத்ய வட்டிலிலிருக்கும் தீர்த்தத்தினால் மூன்றுதரம் பாத்யம் சமர்ப்பித்து ஷை சுத்தோதகத்தினால் உத்தரணியை சோதித்துப் படிகத்தில் சேர்த்துவிட்டு,

ஆசமநீய வட்டிலிலிருக்கும் தீர்த்தத்தினால் மூன்றுதரம் ஆசமநீயம் சமர்ப்பித்து ஷை சுத்தோதகத்தினால் உத்தரணியைச் சோதித்துப் படிகத்தில் சேர்த்துவிட்டு, பிறகு திரு ஒற்றாடை (துடைக்கும் துணி) சமர்ப்பிக்கவும்.

ஒரு திருத்துழாயாலே திருமுத்து (பல்) விளக்கியருளப் பண்ணி, மற்றொரு திருத்துழாயாலே திருநாவழித்து அர்க்கியம் பாத்யம், ஆசமநீயம் சமர்ப்பித்து, சுருளமுது (வெற்றிலை) கண்டருளப்பண்ணவும்.

**திருமஞ்சனம் :** சிலையானால் திருமஞ்சனமும், சித்திரத் திருமேனியாயிருந்தால் திருத்துழாயும் சமர்ப்பித்தல் வழக்கம்.

ஸ்நாந, வட்டிலிலிருக்கும் தீர்த்தத்தினால் திருமஞ்சனம் கண்டருளப் பண்ணும்போது (53) வெண்ணெய் (54) திண்ணார் (55) முன்பொலா (56) சூட்டு நன் பாசுரங்களைச் சேவித்துப் பிறகு திருஒற்றாடை சமர்ப்பிக்கவும்.

சர்வ மங்கள விக்ரஹாய சமஸ்தபரிவாராய, ஸ்ரீமதே நாராயணாய நம: என்று திருத்துழாய் எடுத்து திருப்பரி யட்டமாக (உடுக்கும் உடையாக)ப் பாவித்து சமர்ப்பிக்கவும்.

(கஉ) கேசவாதி பன்னிரு திருநாமங்களால் திருமண் காப்பாகத் திருத்துழாய்ச் சமர்ப்பிக்கவும்.

**பூச்சூட்டல்** (57) ஆனிரை (58) செண்பகம் (59) மாயமான் பாசுரங்கள் சேவித்துப் பூச்சூட்டவும்.

**சாத்துப்படி** (66) பூசும் சாந்து என்கிற பாசுரத்தால் செய்து திருவாடை, புஷ்பம், திருவாபரணமாகத் திருத்துழாய் சமர்ப் பிக்கவும்.

**காப்பிடல் :** (60) இந்திரனோடு பாசுரம் சேவித்துக் காப்பிடவும்.

**தூபம் :** (61) பரிவதில் (62) வகையால் பாசுரங்கள் சேவித்து சாம்பராணி தூபமும்,

**தீபம் :** (63) வையம் (64) அன்பே (65) திருக்கண்டேன் பாசுரங்களால் தீபமும்,

**கருப்பூரம் ஆர்த்தி :** (1) பல்லாண்டு (2) அடியோமோடும் பாசுரங்களால் கருப்பூர ஆரத்தியும் செய்து

அர்க்கியம், பாத்யம், ஆசமநீயம் சமர்ப்பிக்கவும்.

**மந்திர புஷ்பம்** (70) சென்றால் குடையாம் பாசுரத்தால் மந்திரபுஷ்பமாக எம்பெருமானே! சகல அபசாரங்களையும் பொறுத்தருளி எல்லா உபசாரங்களாகவும் திருவுள்ளம் பற்றி யருளவேண்டுமென்று திருவடிகளில் திருத்துழாய் இட்டுத் தண்டன் சமர்ப்பிக்கவும்.

**திருவமுது (பிரசாதம்) கண்டருளப் பண்ணுதல் :**
அர்க்கியம், பாத்தியம், ஆசமநீயம் சமர்ப்பிக்கவும். (67) நாறுநறும் பொழில் (68) இன்று வந்து (49) கூடாரை வெல்லும் பாசுரங்களைச் சேவித்து, தளிகையின் பேரில் தீர்த்தம் தெளித்து, திருத்துழாய் சமர்ப்பித்து, சர்வ மங்கள விக்ரஹாய, சமஸ்த பரிவாராய, ஸ்ரீமதே நாராயணாய நம: என்று அமிசை

[உண்ணச்] செய்து வைத்து: அர்க்கியம், பாத்யம், ஆசமநீயம் சமர்ப்பிக்கவும்.

[69] போய்ப் பாடுடைய பாசுரத்தால் அடைக்காய் அமுது [தாம்பூலம்] செய்விக்கவும். அர்க்கியம், பாத்யம், ஆசமநீயம் பின்னர் சமர்ப்பிக்கவும்.

[உஎ] மங்களாசாசனம் [308] ஆழ்வார்கள் வாழி பாசுரம் சேவிக்கவும்.

**சாற்றுமறை:** [51] சிற்றம் [52] வங்கம் [305] இருப்பிடம் [306] இன்பமற்ற [307] அங்கயல் [303] பூமன்னு பாசுரங்களைச் சேவித்துக்கொண்டே திருத்துழாயும், [1-2] திருப்பல்லாண்டினால் கருப்பூரஹாரத்தியும் சமர்ப்பித்து. [உஅ] ஸர்வதேச முதலிய வாக்கியங்களையும் 308 முதல் 312 வரையுள்ள வாழி திருநாமங்களையும் கும்பிட்டுக் கொண்டு நின்று சேவிக்கவும்.

**திருக்காப்புச் சேர்த்தல்:** [உரு] உத்தரவாக்யத்தால் திருத்துழாய் சமர்ப்பித்து [உ௬] உபசாராபதேசே என்னும் சுலோகத்தை அநுஸந்தித்துத் திருக்காப்பு சேர்த்து, தண்டன் சமர்ப்பிக்கவும்.

**தீருவமுது கொள்ளல்** [பிரசாதம் ஸ்வீகரித்தல்]: படிகத்திலிருக்கிற தீர்த்தமும், திருத்துழாயும், உத்திர வாக்கியம் சொல்லிக் கொண்டே அருந்தி, பின்பு எம்பெருமான் முதலானவர்களுக்குக் கண்டருளப் பண்ணின சேஷத்தை [உணவை] 'அஸ்மத் குருப்யோ நம:' என்று ஆசார்ய தனியனை அனுசந்தித்து உண்ணவேண்டும்.

**காலக்ஷேபம் செய்தல்:** பகவத் விஷய அஷ்டாதச ரகஸ்யாதி வியாக்கியானங்களைப் பயிலுதல்—அல்லது அவரவர்க்குண்டான தொழிலில் இறைவன் சிந்தனையோடு ஈடுபடுதல்.

**இரவு பிரசாதம் கண்டருளப் பண்ணுதல்:** முன்னே செய்தது போல காலத்துக்குச் சேர செய்வது.

**துயிலுதல்:** வாக்ய குருபரம்பரை, த்வயம் இவற்றை அநுசந்தித்து திவ்யதேச எம்பெருமான்களையும், ஆழ்வார்கள் ஆசாரியர்களையும் மனத்தால் சேவித்து [73] நாகணைமிசை என்னும் பாசுரத்தை அநுசந்தித்துக் கொண்டே உறங்கி மறுநாள் காலையில் துயிலெழுகையில் முன்னாளில் சொன்னபடியே வாக்கிய குருபரம்பரையையும், துவயத்தையும் அநுசந்திக்கவும்.

# திருமால் திருநெறியாம் ஸ்ரீவைஷ்ணவம்

திருமால் திருவருளால் ஆழ்வார்கள் அருளிச்செயல்கள் பூத்தற்கு நிலனாய், நிற்கும் இன்தமிழ்ச் செம்மொழியின் தொல் இலக்கணமாம் தொல்காப்பியம், எழுத்தும் சொல்லும் பேசிப் பின் அச்சொல்லால் உணரப்படுவது பொருள் ஆதலால் அதைத் தொகுத்துச் சுட்டும் முறையில்,

"முதல் கரு உரிப்பொருள் என்ற மூன்றே
நுவலுங் காலை முறைசிறந் தனவே
பாடலுள் பயின்றவை நாடுங்காலை"

என்று பொருளதிகாரத் தொடக்கத்தில் அகத்திணை இயலில் [சூ.3] குறிக்கின்றது. இதனை அடுத்து,

"முதல் எனப் படுவது நிலம் பொழுது இரண்டின்
இயல்பு என மொழிப இயல்பு உணர்ந்தோரே"

என்று கூறுகிறது. உலகத்தின் முதல் நிலமும் பொழுதுமாம் இரண்டு என்கிறது. இயல்பு—இயற்கை என்றதனால் செய்து கோடல் பெறாமை அறிந்து கொள்க என்பது இளம்பூரணர் உரை. மரபியல் தொண்ணூற்று ஒன்றாம் நூற்பாவில்,

"நிலம் தீ நீர் வளி விசும்பொடு ஐந்தும்
கலந்த மயக்கம் உலகம்"

என்று கூறி நிலம் முதலாக ஐம்பெரும் பூதமும் கலந்தது உலகம் என்கிறார்.

**நிலம்** : நிலத்திற்குக் காரணமாகிய நீர்; நீர்க்குக் காரண மாகிய தீ; தீக்குக் காரணமாகிய காற்று; காற்றுக்குக் காரணமாகிய விசும்பு [ஆகாயம்] என்று கூறி 'கலந்த மயக்கம், என்றதனால் அவை ஒன்றனுள் ஒன்று ஒடுங்குதலைப் புலப்படுத்தினார்.

**பொழுது** : என்றதனால் சிறுபொழுது, பெரும் பொழுது ஆகும் மாத்திரை முதலாக, நாழிகை, யாமம், பொழுது நாள், பக்கம், திங்கள், இருது, அயநம், ஆண்டு உகம் என்பவை களைப் பெறவைத்தார்.

அந்த இடத்திலும் [நிலம்] காலத்திலும் [பொழுது] தோன்றும் பொருள் கருப்பொருளாம்.

"தெய்வம் உணாவே மாமரம் புள்பறை
செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
அவ்வகை பிறவும் கருஎன மொழிப" [அகத்திணை சூ-20]

என்றதனால் தேவர், மக்கள், விலங்கு, மரம், பறவை முதலாயினவும், உணவு, செயல் முதலாயினவும், பறை யாழ் முதலாயினவும் இன்னவான பிறவும் ஆகிப் பலவகைப்படும். இவற்றால் உலகம் என்பது நிலம்-பொழுது, இவற்றினால் தோன்றும் உயிர்ப்பொருள் உயிரல்பொருள், இவற்றின் சேர்க்கையில் நிகழும் செயல்கள், நுகர்வு-துய்ப்புகள் அனைத்தும் அடங்கும் என்பது தெளிவாம். இதனை,

"மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்
சொல்லிய முறையால் சொல்லவும் படுமே"

என்ற நூற்பாவால் அறியலாம்.

இதன்கண், உலகத்தை நானிலங்களாகப் பகுத்தும், அந்நிலங்களுக்குத் தெய்வங்களை வகுத்தும் போந்த ஆதித் தமிழாசிரியர்கள். காடு சார்ந்த நிலமான முல்லையையும், அதன் அதிதெய்வமான மாயோன் எனப்படும் திருமாலையும் முதற்கண் வைத்துச் சிறப்பித்து உள்ளதைக் காணலாம்.

முல்லை :

"அங்கண் முல்லையின் தெய்வமென்று அருந்தமிழ் உரைக்கும்
செங்கண் மால்"—(பெரியபுராணம்—திருக்குறிப்பு–18)

என்று சைவப்பெரியாரான சேக்கிழாரும் "அருந்தமிழ் உரைக்கும்" என்று வழங்கி உறுதிப்படுத்தி உள்ளார். இதனால் இத்தமிழகம் மக்களை உடைத்தான காலந்தொட்டே திருமாலுக்கு உரிமையும் தலைமையும் இங்கே ஊன்றி விட்டன என்பது தெரியவரும்.

முல்லைக்குரிய மக்களை ஆயர் என்றும் கூறுவர் தமிழ் முன்னோர். "ஆயர் குலத்தினில்" தோன்றும் அணிவிளக்கை (பா 27) என்றும், "கண்ணன் என்னும் கருந்தெய்வக் காட்சிப் பழகிக் கிடப்பேனை" என்றும் ஆண்டாள் அருளும் கண்ணபிரானே மாயோன் என்பதும், முல்லைநில மக்களான ஆயர் அவனையே தம் தொழுதெய்வமாகக் கொண்டிருந்தனர் என்பதும் உலகமறிந்தது.

அரசனைத் திருமாலோடு உவமிக்கும் பூவைநிலை என்ற புறத் துறையில்.

"மாயோன் மேய மன்பெருஞ் சிறப்பின்
தாவா விழுப்புகழ் பூவை நிலையும்" — பொருள் 60.

என்று தொல்காப்பியர் கூறுகிறார். இதனால் மாயோனான கண்ணபிரானின் தலைமை—இறைமைக் குணமும், அவன் புகழ், ஈடுமெடுப்பும் இல்லாதது என்பதும், 'மன், பெருஞ்சிறப்பு, தாவா, விழுப்புகழ்' என்ற சொற்களால் புலப்படுத்தி இவனே முதற்கடவுள் என்பதனை உணர்த்துகிறார். வேறு எக்கடவுளரையும் இவ்வாறு சிறப்பித்துக் கூறவில்லை.

"பூவைப்பூ வண்ணா!' என்று ஆண்டாள் அழைப்பது குறிக் கொள்ளத் தக்கது. "திருவுடை மன்னரைக் காணின் திருமாலைக் கண்டேனே என்னும்" என்கிற நம்மாழ்வார் திருவாக்கும் நோக்கத் தக்கது.

முல்லை நிலம், குறிஞ்சிக்கும் மருதத்திற்கும் இடைப்பட்டு இடையர் வாழும் நிலமாயிற்று. அது ஆனிரை ஓம்புதற்குரிய சூழ்நிலை உடையது. ஆப்பயன் பெறுதலோடு, அவைகளைக் கொண்டு உழுது பயிரிடும் வேளாண்மையும் அங்குத்தான் தொடங் கிற்று. மக்கள் முதன் முதல் சமுதாயமாகச் சேர்ந்து வாழத் தொடங்கிய இடம் அது. இடைச்சேரி எனும் வழக்கை நோக்குக. தலைவன் தலைவி என்ற எண்ணமும் மக்கட்கு எல்லாம் தலைவன்—அரசன்—கோன் என்ற எண்ணமும் உருவாகி நிலைத்ததும் அங்கே. அதனாலேயே ஆயர்குடி அரசகுடி ஆயிற்று. அரசனைக் குறிக்கும் 'கோ' என்ற சொல் இன்றுவரை அந்த ஆயர்தம் குடிப்பெயராக 'கோன்' கோனார்' என்று வழங்கிவருகிறது.

அந்தக் குடிக்குப் பெருந்தலைவன் கூர்வேல் கொடுந்தொழிலன் நந்தகோ(ப)ன் என்பதும், அவன் திருமகன் கண்ணபிரான் என்பதும், அவன் ஆயர் மரபுப்படி, இமிலேற்று வன்கூன் கோட்டையுடைய ஏழு முரட்டுக் காளைகளை அடக்கி, அடலாயர் தம் கொம்பான நப்பின்னைப் பிராட்டியை மணந்தனன் என்பதும், அந்த நப்பின்னைப் பிராட்டியோடு கூடிய கண்ணனையும், அவன் தமைய னான பலராமனையும் பண்டைத் தமிழர் வணங்கி வந்தனர் என்ப தும் சங்க நூல்களில் பரக்கக் காணலாம்.

வேளிர் குடியினர் கண்ணபிரான் வழிவந்தோரே என்ற வரலாற்றைத் தொல்காப்பியப் பாயிர உரையில் நச்சினார்க்கினியர் "அகத்தியனார் துவராபதிப்போந்து, நிலங்கடந்த நெடுமுடி யண்ணல் வழிக்கண் பதினெண் குடி வேளிர் உள்ளிட்டாரையும்,

அருவாளரையும் கொண்டு வந்து கா( )கடுத்து நாடாக்கினார்'' என்று குறிப்பிடுகிறார்.

"முதல் எனப்படுவது நிலம் பொழுது இரண்டின் இயல்பு' என்ற இடத்து நிலத்தை அடுத்துச் சுட்டப் படுவது பொழுது. பொழுது "காரும் மாலையும் முல்லை'' எனப்படுகிறது. கார் காலம் ஆவணித் திங்களும் புரட்டாசித் திங்களும். "மின் வட்டச் சுடராழி வேங்கடக்கோன்'' என்கிறார் குலசேகராழ்வார். அந்தத் திருவேங்கடக் கோனான கண்ணன் வழிபாட்டிற்குரிய மாதமாகப் புரட்டாசித் திங்கள் இதுவரை நிலைபெற்று வருகிறது' 'கோவிந்தா! கோவிந்தா!' எனும் கூப்பாடு கேளா ஊர்—புரட்டாசி சனிக்கிழமைகளை அறியாத ஊர் தமிழகத்தில் உண்டா? அவ னுகந்த திருமலை புஷ்கரணி (குளம்) 'கோனேரி' என்றே வழங்கி வருகிறது. "சோனேரி வாழும் குருக்காய்ப் பிறப்பேனே'' என்கி றார் குலசேகராழ்வார்.

திருமலை வரலாறு கூறும் உண்மை நினைக்கத் தக்கது. அரசனது ஆனிரை மேய்த்த ஆயன், நாள் தோறும் ஒரு பசு புற்றில் பால் சுரந்ததைக் கண்டு, அந்தப் புற்றிலிருந்து திருவேங்கட முடையானை மீட்டு வழிபட்டு, அதனைத் தொண்டைமான் சக்கர வர்த்திக்குத் தன் இடைக்குல மாந்தருடன் சென்று தெரிவிக்க, அவனும் திருப்பணிகள் செய்து உற்சவம் நடத்தினான். அந்த இடைக்குலத்தினருக்கு நாள் தோறும் முதலில் வழிபடும் உரிமை யையும் அவ்வரசன் அளித்தான். அதனால் இன்றும் திருமலையில் ஆயர்குடியினர் நாள்தோறும் விடியற்காலையில் கோயிலைத் திறக்கும் கைங்கரிய உரிமை உடையராக இருந்து முதல் தரி சனத்தைப் பெற்று வருகின்றனர்.

பெரும்பொழுதாகிய கார்காலம் கார்மேனிக் கண்ணன் ஒளியை நினைவூட்டும்; கார் (மேகம்) அவனது தண்ணளியை — கருணையை நமக்காகத் தாழ்ந்துவரும் நிலையைத் தெரிவிக்கும் சிறு பொழுதாகிய மாலை அவனது தீங்குழலோசையை, அவனால் காக்கப்படும் ஆனிரையை (சீவராசிகளை) நினைவூட்டும்.

முல்லை ஒழுக்கம் கற்பு. "கற்பொடு பொருந்திக் கணவன் சொற் பிழையாது இல்லிருந்து நல்லறம் செய்தல் மகளிரது இயற்கை முல்லை'', என நச்சினார்க்கினியர் விளக்கி உள்ளார். அதனால் கற்பொடு பொருந்தி இல்லிருத்தல் முல்லை. முல்லை மணத்திலும், நிறத்திலும் சிறந்தது, இல்லற ஒழுக்கம் கற்பால்

கற்பு முறை வழிபாடாகத் (தலைவன் - தலைவி, பர்த்ரு-பாரியா) திருமால் வழிபாடு - சமயம் விளங்குவதை நுனித்தறியத் தகும். தன்தலைவனுக்கு அன்றி வேறோர் ஆடவனுக்கு நெஞ்சில் இடந்தராத திட்பம் கற்பு.

"கண்டார் இகழ்வனவே காதலன்றான் செய்திடினும்
கொண்டானை அல்லால் அறியாக் குலமகள் போல்"

என்பது குலசேகராழ்வார் அருள் மொழி. இந்த ஒழுக்கத்தினைக்குடி முழுதாகத் தழுவி நிற்பவர் முல்லை நிலத்தினரான ஆயர். "பிறவிப் பெறுந்தனைப் புண்ணியம் யாமுடையோம் என ஆயர் மாண்பு ஆண்டாளால் போற்றப்படுகிறது. கண்ணனை அன்றி வேறு தெய்வத்தை வழிபடாதவர் ஆயர் குலத்தினர்.

அற்பப் பயன் கருதித் தேவதாந்தரங்களை வழிபடாமல் கண்ணன் எம்பெருமான் உகப்பிற்காகவே ஏழேழ் பிறப்பும் உற்றவராய், அவனுக்கே ஆட்செய்யும் பேறு பெற்றவராய் வாழ்வதன்றோ திருமால் நெறியாம் வைணவத்தின் உயிர்த்துடிப்பு! இதன் தோற்றுவாயே முல்லை ஒழுக்கமாம் கற்பு.

தலைவன் வந்து கொள்ளுமளவும் அவன் நினைவாகவே அவன் சிறப்புகளை நினைந்து ஆற்றியிருத்தலாகிய ஒழுக்கம் சிறையிருந்த பிராட்டியாம் சீதையின் செயலால் வெளிப்படுவது நினைவு கூரத்தக்கது.

பூவைப்பூ வண்ணனான கண்ணன் வரலாறு முழுவதும் முல்லைத்திணை ஒழுக்கமாம் என்பதனை அறியுந்தோறும் இன்பம் பெருகும்.

ஓம்பல், குழலூதல், புனலாடல், ஏறுகோடல் இமிலேறு அடக்கித் திருமணம் புரிதல், ஆட்சி புரிதல், அறவுரை பகர்தல், பொங்கல் இடுதல் (மாட்டுப் பொங்கல், கன்றுப் பொங்கல்) முதலிய அனைத்தும் புகழிற்குரிய பூவைநிலை உடைய திருமாலின் முழு அவதாரமான கண்ணன் உகந்து இந்நிலவுலகின் கண் நிகழ்த்தியவை என்பதனை யாரே அறியார்? இவையன்றோ சங்ககால முல்லைத் தமிழரின் வாழ்க்கை!

கொண்டல் வண்ணனைக் கோவலனாய் வெண்ணெய்
உண்டவாயன், என்னுள்ளம் கவர்ந் தானை,
அண்டர் கோன் அணிஅரங்கன் என்னமுதனைக்
கண்ட கண்கள், மற்றொன்றினைக் காணாவே (83)

என்று திருப்பாணாழ்வார் அருளியுள்ள சீர்மையை அறிதல் வேண்டும். ஸ்ரீரங்கநாதனே வெண்ணெய் உண்ட வாயானான

கோவலன். அவனே அண்டர் (வானோர்) கோன்; அண்டர் (இடையர்) கோன். இப்பொழுதும் அவன் குறட்டை மோந்து பார்த்தால் வெண்ணெயின் குணுங்கு [முடைநாற்றம்] நாறும்; கண்ணன் வேறு, அரங்கன் வேறு அன்று; அரங்கனாகவும் கண்ணனாகவும் விளங்குபவன் ஸ்ரீமந் நாராயணனே என்னும் சீர்மையை உணர்த்தும் இப்பாசுரம் என்பவர் வைணவச் சான்றோர். "வளவெழும் தவளமாட மதுரைமா நகரந் தன்னுள், கவளமால் யானை கொன்ற கண்ணனை அரங்கமாலை" [138] என்று அருளுகிறார் தொண்டரடிப்பொடி ஆழ்வார். அதனாலேயே பிராட்டியாம் ஆண்டாளும் திருப்பாவை முதலில் 'கண்ணனே பறை தருவான்' என்று பாட வேண்டிய இடத்தில், வித்தான "நாராயணனே நமக்கே பறை தருவான்" என்று அருளியுள்ளார்.

திருமால் நெறி—ஸ்ரீவைணவ சமயப்படி ஸ்ரீமந் நாராயணனே முதற் பெருங்கடவுள்—பரம்பொருள். பரபிரஹ்மம். அவனே இரும்பொருட்கெல்லாம் அரும்பெறல் தனிவித்து, இவ்வித்தே கடவுள் எனப்படுகிறது.

**கடவுள்:** உலகு, உயிர் எல்லாவற்றையும் படைத்துக்காத்து முடிவில் தம்முள் ஒடுக்கிக் கொள்பவர் (பா 155) கடவுள் உயிர்ப்பொருள், உயிரல் பொருள் அனைத்திலும் அவர் நிறைந்திருக்கிறார். (பா. 225 226) அனைத்திலும் அவர் நிறைந்திருத்தலாலேயே உயிர்களும் உலகங்களும் நிலை பெறுகின்றன. ஆனால் அவர் தனித்தும் விளங்குகிறார். அவர் பிறப்பிலி. ஆனால் உயிர்களை—சாதுக்களைக் காத்தற்கும், தீமைகளை—தீயவர்களை ஒழித்தற்கும் தம்விருப்பமே—அருளே காரணமாக மரம் முதல் தேவர் ஈறாக உருவேற்றுப் பிறக்கிறார். இதுவே அவதாரம் எனப்படுகிறது.

**அவதாரம்:** இறைவன் நமக்காக அவதாரம் ஏற்று நம்மிடையேப் பிறக்கின்றான் என்றால் இறைநிலைகெட்டு இங்குத் தோன்றுகிறான் என்பதன்று. விதை அழிய செடி தோன்றுவது போல் இல்லை அவதாரம்.

"நினைத்த எல்லாப் பொருட்கும் வித்தாய் முதலில் சிதையாமே" (திருவாய் மொழி 1-5-2 பா. (232) என்றும்,

"சாது சனத்தை நலியும் கஞ்சனைச் சாதிப்பதற்கு,
ஆதியஞ் சோதி உருவை அங்கு வைத்து இங்குப் பிறந்த"

(திருவாய்மொழி 3-5-5 பா. 248) என்றும்,

"மனிசரும் மற்றும் முற்றுமாய் மாயப் பிறவி பிறந்த
தனியன் பிறப்பிலி தன்னை, தடங்கடல் சேர்ந்த பிரானை"

திருவாய் மொழி 3-5-6 பா. 249) என்றும்

"சூட்டு நன் மாலைகள் தூயன ஏந்தி, விண்ணோர்கள் நன்னீர்
ஆட்டி அந் தூபம் தராநிற்கவே அங்கு, ஓர் மாயையினால்
ஈட்டிய வெண்ணெய் தொடுஉண்ணப் போந்து இமிலேற்று வன்கூன்
கோட்டிடை ஆடினை கூத்து, அடலாயர்தம் கொம்பினுக்கே"

(திருவிருத்தம்-21 பா. 56 என்றும்,

நம்மாழ்வார் அருளியுள்ளமையைக் கொண்டு திருமகள் கேள்வனான ஸ்ரீமந் நாராயணனே உயிர்களிடத்தில் உள்ள அளவற்ற அன்பு காரணமாக, அவைகள் தன்னை வந்தடைந்து அழிவிலா இன்பம் பெறவேண்டும் என்ற பெருநோக்கோடு நித்ய விபூதியான இந்நிலவுலகில் பலவகையான உயிரினமாகப் பிறக்கின்றான் என்று தெரியவேண்டும்.

இறைவன் எல்லா உயிர்களிலும் (சேதனம்) உயிரில்லாப் பொருள்களிலும் (அசேதனம்) உறைவதால் (இறை-தங்குதல்) விஷ்ணு என்று பெயர் பெறுகிறான். அழியாத நித்திய வஸ்துக்களின் திரளுக்கு ஆதாரமாயும் (பற்றுக்கோடு) ஆதேயமாயும் [தாங்கப் படுவது] இருப்பதால் நாராயணன் எனப்படுகிறான்.

**இறைவனே தாய் தந்தை :** [பா. 211, 212] நாராயணன் தனது உந்தியில் தாமரை மலரை உண்டாக்கி, அதில் நான்முகனைப் படைத்து, அவனால் உயிர் உலகுகளைப் படைக்கிறான். உந்தியிலிருந்து பிரம்மாவைப் படைப்பதால் இறைவன் உயிர் தோன்றுவதற்குக் காரணமான பெண்மையும் உடையவனாய் இருக்கிறான் என்பது போதரும். ஆகவே ஆணும் பெண்ணும் கலந்ததே [மிதுநம்] இறை தத்துவம். தனது தாயாம் தன்மையை [மாத்ருத்வம்] ஸ்ரீதேவிக்குக் கொடுத்து உலகுக்குத் தாயாக [லோக மாதாவாக] நியமிக்கின்றான். இவளே பெரிய பிராட்டி, இலக்குமி என்றெல்லாம் அழைக்கப்படுபவள். தனது வழித் தோன்றிய உயிர்களைக் காத்தற்காக இறைவனின் வலமார்பில் இமைப்பொழுதும் நீங்காது பொன்மயமான திருமேனியோடு வாழ்கிறாள் [பா. 271] இவள் அம்சமே மற்றைப் பிராட்டிமாரான பூதேவியும் நீளாதேவியுமாவர். திருமாலின் அருள் [கிருபா சக்தி]

ஸ்ரீதேவி. இவள் உயிர்களுக்குச் செல்வத்தையும், ஞானத்தையும் அளிப்பவள். பூதேவியை க்ஷமாசக்தி [பொறை] என்றும், நீளா தேவியை ஆனந்தசக்தி [இன்பம்] என்றும் சொல்லுவர். உயிர்கள் நிலைபெற்று உயர்வடைய பூதேவியாகவும், அவைகள் அழகும் இன்பமும் பெற நீளா தேவியாகவும், இலங்குகிறாள் அருளுருவான நமது தாயார் திருமகள்.

**திருமால் திருவுரு :** திருமால் கருவுடை மேகம் போன்ற நீல நிறம் உடையவர். நான்கு திருக்கைகளும், சக்கரம், சங்கு, வில், கதை, வாள் என்கிற ஐந்து [பஞ்சாயுதம்] படைகளும் உடையவர். அவருடைய கண்களும், வாயும், திருக்கைகளும் திருவடிகளும் அன்றலர்ந்த செந்தாமரை ஒத்த அழகுடையன.
[211, 1, 2, 134]

உயிர்களை [ஆத்துமாக்கள்] கௌஸ்துவ மணியாகவும், உலகத்தோற்றத்திற்குக் காரணமான மூலப் பிரகிருதியே ஸ்ரீவத்சம் என்கிற மறுவாகவும் [இது தாயார் எழுந்தருளியுள்ள இடம்] புத்தியே கவுமோதகி என்கிற கதையாகவும், சப்தாதி காரண மாகையாலே பூதாதியை [தாமசாகங்காரம்] பாஞ்ச சன்னியம் என்கிற சங்காகவும், சாத்துவிகாகங் காரமே சார்ங்கம் என்கிற வில்லாகவும், சலனாத்துமகமான மனமே சுதரிசனம் என்கிற சக்கரமாகவும், பஞ்சமகா பூதங்களும் வைஜயந்தி என்கிற வனமாலையாகவும், ஞானேந்திரியங்கள் கன்மேந்திரியங்கள் அம்பு களாகவும், வித்தையே நாந்தகம் என்கிற கத்தியாகவும். அவித்தையே அக்கத்தியின் உறையாகவும் கொண்டுள்ளனன் என்று விஷ்ணு புராணம் கூறும்.

**ஆதிசேஷன் :** [70] இவருக்குப் பாதுகையாகவும், குடையாகவும், சிங்காதனமாகவும், படுக்கையாகவும் இருந்து கொண்டு எல்லாக் கைங்கர்யங்களையும் செய்து கொண்டு சேஷன் எனும் திருப்பெயரைப் பெற்றிருப்பர். இவருடைய குணங்களுக்கு முடிவில்லாமையால் 'அனந்தன்' என்றும் பெரியோர் கூறுவர், இவர் தான் நமக்குக் கைங்கர்யம் — அடிமை செய்தல் புருஷார்த்தம் என்பதனைத் தெரிவிக்கும் வழிகாட்டி. இலக்கு மணனாகவும் பலராமனாகவும், இராமானுஜராகவும், மணவாள மாமுநிகளாகவும் அவதரித்தவர் இவரே.

**திருநாடு :** எனப்படும் பரமபதத்தில். திருமாமணி மண்டபத்தில், ஆதிசேஷனாகிய சிம்மாசனத்தில், ஸ்ரீதேவி, பூதேவி. நீளாதேவிமார் இருபுறம் வீற்றிருக்க, திவ்ய ஆயுதங்களோடும்,

அணிகளோடும், கருடாழ்வார், சேனை முதலியார் முதலான நித்யசூரிகளும், முக்தரும் [பிறவிக்கடலை நீந்தியோர்] தொழுது நின்று பல்லாண்டிசைக்க, அளவற்ற சோதியாய், தன்னையொழிந்த மற்ற விஷயங்களின் அனுபவங்களைக் காரி உமிழும்படி வைராக்கியத்தை உண்டு பண்ணும் பேரழகோடு எல்லையில்லா இன்பமயனாய் வீற்றிருந்து சேவை செய்பவன் திருமால். இது இவனது பரத்துவ நிலை.

எம்பெருமான் எல்லையில்லா கல்யாண குணங்களை உடையவன். இவன் பேரழகும் பெருங்குணங்களுமே உயிர்களின் மனத்தை ஈர்த்து மேன்மை அடையச் செய்கின்றன.

**பகவான் குணங்கள்:** ஞானம், பலம், ஐசுவரியம், வீரியம், சக்தி, தேஜசு எனும் ஆறு பெருங்குணங்கள் உடையவன். 1. ஞானம் தன்னிலும் வேறாகிய எல்லாப் பொருள்களையும், எப்போதும், ஒரே சமயத்தில் நேரே காணத்தக்க அறிவு. இதனால் இறைவன் சர்வஜ்ஞன் என்பதும் அவனே உலகிற்கு மூலம் என்பதும் விளங்கும். 2. தனக்கு ஒரு ஆதாரம் இன்றியே இருந்து கொண்டு சகல சராசரங்களையும் ஒரு சிரமமும் இன்றித் தாங்கி நிற்கும் நிலை பலம். 3. சகல சராசரங்களையும் ஒரே காலத்தில் விளையாட்டாகத் தோற்றுவிக்க வல்லனாதல் ஐசுவரியம். 4. ஒரு நறுமணப் பொருளானது [கஸ்தூரி] சிறிதும் மாறுதல் அடையாமல் இருந்தபடியே இருந்துகொண்டு பிறருடைய மனங்களை எப்படி விகாரப் படுத்துகிறதோ அப்படியே இறைவன் சேதன அசேதனங்களை உண்டாக்கியும், தனக்கு ஒரு விகாரமும் இன்றி இருக்கும் நிலை வீரியம். 5. ஈசுவரன் தானே உலகுக்கெல்லாம் காரணமாய் இருக்கை சக்தி. 6. வேறோர் உதவி இன்றி அடைந்தாரது, துன்பத்தைப் போக்கியும், எதிரிகட்குத் தாபத்தைத் தந்தும் எல்லாவற்றையும் நிர்வகிக்கும் தன்மை தேஜசு.

இந்த ஆறுகுணங்களின் வசமாகத் தோன்றுவன வாத்சல்யம், சுவாமித்வம், சௌசீல்யம், சௌலப்பியம் என்னும் குணங்கள். 1. வாத்சல்யம்: பசு கன்றிடத்துக் கொண்டுள்ள அன்பு போன்றது, குற்றத்தைக் குணமாகக் கொள்ளும் குணம் [பசு கன்றின் வழுவை நக்குவது போன்றது) [பா. 78, 131, 161] 2. சொத்தை உடையவன் சுவாமி. உயிர் அவன் சொத்து. அதைக் காத்தலும் கைக்கொள்வதும் அவன் இயல்பு. இதுவே சுவாமித்வம் (பா. 211, 223) 3. ஈஸ்வரன், தன்னுடைய மேன்மையையும், சேதனனுடைய தாழ்மையையும் பார்த்து வேற்றுமை கொள்ளாமல், தானே மேல்

விழுந்து அவர்களோடு இரண்டறக் கலக்கும் குணம் சௌசில்யம், (பா. 151, 152) 4. இந்திரியங்களுக்கு எட்டாப் பொருளான இறைவன், தன்னை எல்லோரும் கண்ணாரக் கண்டு பற்றும் வண்ணம் எளியனாம் தன்மை சௌலப்யம் (பா. 162, 230,)

**இறைநிலை :** 1. பரத்வம் பரமபதத்தில் இருக்கும் நிலை. இதுதேவர்களும், லீலா விபூதியில் உள்ள மனிதர்களும் சென்று காணஇயலாதது. அதனால் இதனை ஆவரண ஜலம் போலே பரத்வம் என்பர். அண்டத்திற்குப் புறம்பே உள்ள கடல் போன்றது (பா. 223)

**2. வியூகம் :** பிரமாண்டங்களை உண்டாக்கி அவை களுக்குள் தேவர், மனிதர், விலங்கு, தாவரம் முதலான உயிர் களை உண்டாக்கல், காத்தல், அழித்தல் பொருட்டும், தன்னை உபாசிப்பாருக்கு அருளும் பொருட்டும், வாசுதேவன், ப்ரத்யும்நன் அனிருத்தன், சங்கர்ஷணன், முதலான உருவங்களில் நிற்கும் நிலை. வாசுதேவன் திருப்பாற் கடலில், திருவனந் தாழ்வானாகிய படுக்கை யில் உலகைக் காத்தற் பொருட்டு யோகு துயிலில் இருக்கும் நிலை இது தேவர் முதலானோர் வேண்டுதலை நிறைவேற்றுவதற் காகவும், சேதனர்களுக்கு அருள்புரிவதற்காகவும் அவதாரங்கள் மேற்கொள்ள இருக்கும் நிலை. இதனால் இதனை அவதாரங் களுக்கு நாற்றங்கால் என்பர். கேட்டிருக்கும் அத்தனை யல்லது சென்று காணமுடியாதாகையால் பாற்கடல் போலே வியூகம் என்பர். (பா. 74, 211)

**3. விபவம் :** ஆதியஞ்சோதி உருவை நித்திய விபூதியான பரமபதத்திலே வைத்து. "உயிர் அளிப்பான் எந்நின்றயோநியு மாய்ப் பிறந்தாய் இமையோர் தலைவா" என்றபடி தமது அருளே காரணமாக இந்த லீலா விபூதியான உலகில் பல்வகையான உருவேற்றுத் தோன்றுதல் (பா. 98) இது முக்கியம் அமுக்கியம் என இருவகை.

**முக்கியம் :** ஸ்ரீ விஷ்ணு, உபேந்திரன், வாமனன், திரிவிக் கிரமன் முதலான தேவதாவதாரம், நர நாராயணன், ராம கிருஷ்ணாதியான மனிதாவதாரம், மச்சம், கூர்மம், வராகம், நரஸிம்மம் முதலான திரியக் கவதாரம், நைமிசாரணியத்தில் குட்டை மாமரம் ஆன தாவராவதாரம் முதலியன. இவை தமக்கு முன்னதான வியூக சுபாவங்களைக் (தன்மைகள்) கொண்டிருத் தலால் முக்கியம் என்றனர். இவை ஒரு காலத்தில் தோன்றிப்

பிற்காலத்தார் காணா நிலையினவாய் இருப்பதால் பெருக்காறு போல்வன விபவங்கள் என்பர். ஆற்றுவெள்ளம் பெருகும் போது அங்கிருந்தார் மட்டுமே காணலாவ தன்றோ?

**அழுக்யம் :** ஒரு காரியார்த்தமாக ஆத்துமாக்களிடத்தில் இறைவன் ஆவேசித்து நிற்பது. இது சொரூபாவேசம், சக்தியாவேசம் என இருவகை. பரசுராம் பலராம அவதாரங்கள் தன்னுடைய ரூபத்துடன் இருப்பதால் சொரூபாவேசம். பிரமன், சிவன் அக்னி, அர்ஜுனன், வியாசா போல்வாரிடம் எம்பெருமான் சக்தி மாத்திரத்தில் தோன்றி விளங்கிக் காரியம் செய்வது சக்தியாவேசம்.

**4. அந்தர்யாமித்வம் :** (பா. 225, 226) அண்ட சராசரங் களிலும் ஆத்மவர்க்கங்களிலும் (உயிர்கள்) எள்ளுக்குள் எண்ணெய் போல், உயிருக்குயிராய் நிற்கும் நிலை. உயிர்கள் செய்யும் பாப புண்ணியங்களை அறியவும், அவைகளுக்குத் தக்கபடி தீமை நன்மைகளைத் தரவும், யோகிகள் விருப்பத்தை நிறைவேற்றவும், பிராட்டியுடன் திவ்விய மங்கள திருமேனியோடு எல்லா உயிர்களின் இருதய கமலத்தில் இருக்கும் நிலை. இது கண்ணுக்குத் தோற்றாமையால் இதனைப் பூமிக்குள் பரவியிருக்கும் நீருக்கு ஒப்பானது என்பர். பூமிக்குள் இருக்கும் நீரைப் பயன்படுத்த வேண்டுமானால் கடப்பாரை முதலிய கருவிகள் கொண்டு தோண்டினால்தான் கிடைக்கும். அதைப்போல அஷ்டாங்க யோகம் முதலிய சாதனைகளால் தான் அந்தர்யாமியாக உள்ள பகவானை அனுபவிக்க முடியும். இது எல்லோராலும் செய்ய இயலாதது.

**5. அர்ச்சை :** மண்ணில் அரங்கம் முதல் வைகுந்த நாடளவான நூற்றெட்டுத் திவ்யதேசங்களிலும், பிற திருக் கோயில்களிலும், நமது இல்லங்களிலும் "தமருகந்தது எவ்வுருவம் அவ்வுருவம்தானே" (பா. 162) என்றெல்லாம் பொய்கையாழ்வார் அருளியபடி, பக்தர்கள் எழுந்தருளப் பண்ணியுள்ள மண், கல், செம்பு, வெள்ளி, பொன் சிலைகள், சித்திரங்கள் முதலியவைகளில் எம்பெருமான் விருப்பத்தைப் பண்ணி, எளியனாய், சர்வஜ்ஞனாய், சர்வசக்தியுடனும், சமஸ்த கல்யாண குணங்களுடனும், சாந்நித்திய மாக சேவை சாதித்துஅவரவர்கள் வேண்டுவனவெல்லாம் அருளும் நிலை. இதனை, "அதில் தேங்கின மடுக்கள் போலே அர்ச்சாவதாரம். முன்பு சொன்னவை போல அன்றிக்கே, அவனுக்கு விடாய் கெடப் பருகலாம்படி பெருக்காற்றிலே தேங்கின மடுக்கள் போலேயாயிற்று. கண்டு பற்றவேண்டும் என்று ஆசைப்பட்ட இவனுக்குக் காண்பதற்குத் தேசத்தாலும், காலத்தாலும், கரணத்

தாலும், சேய தன்றிக்கே, கோவில்களிலும், வீடுகளிலும் என்றும் ஒக்க எல்லார்க்கும் கண்ணுக்கு இலக்காம்படி நிற்கிற பின்னானார் வணங்கும் சோதி" என்று ஸ்ரீவசன பூஷணம் அருளிச் செய்யும்.

"ஆழ்வார்கள் பல இடங்களிலும் பிரபத்தி பண்ணினது அர்ச்சாவதாரத்திலே" என்றும், பரமபதத்தில் உள்ளாரும் சீலம் முதலான குணங்களை அனுபவம் பண்ணுவதற்கு வருவது இங்கே என்றும் கூறுவர். (பா. 76). இதனை, "நிகரில் அமரர் முனிக் கணங்கள் விரும்பும் திருவேங்கடத்தானே" (பா. 271) என்று நம்மாழ்வார் அருளுவதால் அறியலாம். இருட்டறையில் விளக்குப் போலே ஒளிருவதும், எளிமைக்கு (சௌலப்யம்) எல்லை நிலமாய் இருப்பதும் அர்ச்சை.

ஸ்ரீரங்க விமானம் போலத் தானே தோன்றியவை; காஞ்சிபுரம் போலப் பிரம்மா முதலான தேவர்களால் பிரதிஷ்டிக்கப்பட்டவை, ருஷிகள் யோகிகள் அமைத்து வழிபட்ட எம்பெருமான்கள்; மக்களால் ஊர்களிலும் வீடுகளிலும் வைத்து வணங்கும் எம் பெருமான்கள் என்று அர்ச்சை நான்கு வகையாம்.

**திருக்கோயில் சிறப்பு :** ஆழ்வார்களால் பாடப் பெற்று மங்களாசாசனம் செய்யப் பெற்ற நூற்றெட்டுத் திருப்பதிகளும் 'கிளி கொந்தின பழம்போலே' என்பர் பெரியோர். அதாவது சுவை மிகுதி பலன் மிகுதி என்றவாறு எண்ணிலாத குணங்களும், சக்திகளும், அழகும் உடையவன் இறைவன். ஒவ்வொரு திவ்ய தேசத்திலும் அவனது ஒவ்வொரு குணம், சக்தி ஓங்கித் தோன்றும் என்பர். அரங்கம் சௌகார்த்தம் (எப்பொழுதும் உயிர்களின் நன்மையைச் சிந்தித்துக் கொண்டிருக்கும் வியூகத்தின் தன்மை), வேங்கடம் வாத்சல்ய உஜ்வலம் (அன்று ஈன்ற கன்றின் உடம்பில் உள்ள வழுவை ஆதரித்து விரும்பும் பசுவைப் போன்று அடியார் களுடைய தோஷங்களை இனியவாகக் கொண்டு நன்மை செய்யும் குணம்), குருகூர் பரசத்வம் என்றெல்லாம் விளக்குவர்.

இறைவனை நேரே கண்டு அவனது அளவிலா அழகு, குண, சக்திக் கடலுள் ஆழ்ந்து அனுபவித்த ஆழ்வார்கள் உணர்வின் நிறைவு உள்ளடங்காமல் வெளிப்போந்த ஈரச்சொற்களாம். மங்களாசாசனம் வழங்கும் இடமாகவும், வேதங்களும் பாஞ்சராத் திரம் வைகாநசம் முதலான ஆகமங்களும், ஒழுங்கான வழிபாடு விழாக்களும் நடைபெறும் இடமாகவும், சாத்துவிக நிலையுடைய பாகவதரும் அன்பரும் குழுமும் இடமாகவும் பிரபந்நாகளின் தலைவராம் நம்மாழ்வாரின் திருநாமத்தைத் தாங்கி நின்று

பாபத்தைப் போக்கும் இறைவன் திருவடியாம் 'ஸ்ரீசடகோபன்' (சடாரி), அவன் திருமேனியிலும் திருநோக்கிலும் படிகிற ஞானத்தைத் நல்கும் தீர்த்தம், சாத்துவிக குணத்தை வளர்ப்பதும் இன்பத்தைத் தருவதுமான அவன் சுவைத்த அமுதின் மிச்சில் [பிரசாதம்] கிடைக்கும் இடமாகவும் உள்ளதால் திருக்கோயில்கள் வழிபரடு சிறப்புடையனவாம்.

இவை காரணமாகவே 'ஆலயம் தொழுவது சாலவும் நன்று, என்றும், "மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாய்த் தொடங்கினோர்க்கு வார்த்தை சொலச்சற்குருவும் வாய்க்கும் பராபரமே" என்றும் பிற சான்றோரும் அருளியுள்ளனர். மேன்மை தங்கிய இவ்விடங்களைத் தூய்மையாக வைத்துக் கொள்ள வேண்டும். அங்குச் செல்வோர் தூய்மையும் வாய்மையும் ஆர்வமும் உடையராய் இருப்பதோடு, வீண்பேச்சு, பொறாமை, உயர்வு தாழ்வு இல்லாதவராய், இரக்கம் [தயை] முதலிய நற்குணங்களோடு, வழிபாடே நோக்கமாய், பாசுரம் நாமாவளி, தோத்திரம், மந்திரம் முதலியவைகளை அனுசந்தித்துக் கொண்டு ஈடுபட வேண்டும். கோயிலை வலம் வரும்போது [பிரதட்சணம்] துவயம் அனுசந்திப்பது நலம் என்பர்.

அர்ச்சாவதாரங்களை இது கல், இது மண், இது மரம், இது செம்பால் ஆனது, இது சித்திரப்படம் என்றெல்லாம் நினைத்தல் அறவே ஆகாது. இறைவனாகவே அழுத்தமாக நம்ப வேண்டும். எதனால் ஆனது என்று ஆராய்வது தாய் மறை உறுப்புக்களைப் பரிட்சிக்க நினைப்பது போன்ற கொடிய பாவம் என்பர் பெரியோர். இராம கிருஷ்ணாதி அவதாரங்களை மனிதரராகவும், எம்பெருமானை இதர தேவதைகளோடு சமமாகவும் எண்ணுவது பகவதபசாரம் என்பர். இதுபோலவே இறைவனது அடியார் குலம் கோத்திர தாழ்வுகள், செயல்கள் குற்றங்கள் முதலியவை பற்றிப் பேசுவது தூற்றுவது பாகவதபசாரம் என்பர்.

**நம் குடிசைப் பெருமான் பெருமை :** படம், சிலை உருவங்களில் வழிபடப்படும் எம்பெருமான்களை, தூய்மையான அறை, அலமாறி, பேழை முதலான அவரவர் பொருள் வசதிக்கேற்ற இடத்தில் எழுந்தருளச் செய்யவேண்டும். அப்படி எழுந்தருளப் பண்ணியுள்ள இடம் கோயிலாழ்வார் எனப்படும். பரமபதத்திலும், திவ்ய தேசங்களிலும் எழுந்தருளியுள்ள எம்பெருமானே நமது இல்லத்திலுள்ள கோயிலாழ்வாரில் எழுந்தருளப் பண்ணியிருக்கும் திருவுருவிலிருந்து சகல கல்யாண குணங்களோடும் சக்தியோடும் சேவை சாதிப்பதாக உறுதியாக நம்ப வேண்டும். எங்கும்

எப்பொருளிலும் அந்தர்யாமியாக உள்ள பகவான் நாம் நம்பிக்கை யோடு வழிபாடு செய்யும் திருவுருவில் இல்லாமற் போவனோ? இங்குப் பிரகலாதாழ்வான் வைபவத்தை நினைப்பது.

சுவாமி இராமானுசர் திருவரங்கத்தில் பெரியபெருமாளுக்கு எல்லாவிதக் கைங்கர்யங்களும் செய்து ஈடுபட்டிருந்த நிலையில், அத்வைத மதத்தைச் சார்ந்த யஜ்ஞமூர்த்தி என்ற மகாவித்வான் ஒருவர் சுவாமியிடம் வாதப்போர் செய்து தம் மதத்தை நிலை நாட்ட வந்தார். இருவருக்கும் பதினேழுநாள் வாதப்போர் நடந்தது. சுவாமி உடையவர் மனமுடைந்து தமது மடத்திற்குச் சென்றார். தமது திருவாராதனப் பெருமாளான பேரருளாளனுக்கு அமுது படைத்து, பின் அப்பெருமாளிடம், 'ஆழ்வார் தொடங்கி ஆளவந்தார் வரை இடையீடின்றி ஓங்கி வளர்ந்து வந்த வைணவ தரிசனம், உம்முடையதான ஆத்மா, திருமேனி, அவற்றைப் பற்றிய உருவம், குணங்கள், உலகங்கள் இவையெல்லாம் என்னுடைய காலத்தில் பொய்யாக்கத் திருவுள்ளமோ?" என்று விண்ணப்பித்துத் தாம் உண்ணாமல் கண்ணயர்ந்தார். பேரருளாளன் அவர் கனவில் தோன்றி ஆளவந்தார் அருளிய "மாயாவாத கண்டனத்தைச் சொல்லி அவரை வெல்லும் என்று அருளினான். அதன்படியே அவரை வென்று, திருத்தி, பேரருளாளன் அருள்செய்ததை நினைத்து அவருக்கு "அருளாளப் பெருமாள் எம்பெருமானார்" என்று திருநாமம் சூட்டினார் என்பது வரலாறு. இது பெரிய பெருமாளிடம் சென்று விண்ணப்பிக்காமல் தமது திருவாராதனப் பெருமாளிடமே விண்ணப்பித்து வெற்றி கண்டது நாம் வணங்கும் திருவாராதனப் பெருமாள் திருவரங்கனன்றி வேறல்லன்; அங்கிருப் பவனே இங்கிருப்பவன்; அவன் தலைக்கட்டுவதை இவனும் தலைக் கட்டுவான் என்பதனை நினைவூட்டுவதாகும்.

"ஒருவன் தனக்கு ஸ்ரீவைஷ்ணவத்வம் (வைணவனாய் இருக்கும் தன்மை) உண்டென்று அறிவது எப்படி? என்று நஞ்சீயரைக்கேட்க, அவர் அர்ச்சாவதாரத்திலே பரத்வ புத்தியும், தன்சொந்தப் பிள்ளை முதலானாரிடம் உண்டாகும் அன்பின் அளவாகிலும் ஒரு வைணவரிடம் அன்பு பிறக்கையும், ஒரு வைணவன் கோபித்து வார்த்தை சொன்னால் அந்த வார்த்தை தனக்கு ஆனந்தமாய் இருக்கையும் உண்டானால் ஸ்ரீவைணவத்துவம் உண்டென்று அறிய லாம்." என்று நம்பிள்ளைக்கு அருளினார் என்கிறது குரு பரம்பரை. இதனால், கோயில்களிலும் வீடுகளிலும் உள்ள அர்ச்சா திரு மேனியைப் பரம்பொருள் என்றே எண்ண வேண்டுமென்று பெரி யோர்கள் பணித்திருப்பது அறியலாம்.

**ஸ்ரீவைணவர் பல படியினர்** இவ்வாறு அறிந்து ஸ்ரீவிஷ்ணுவை வழிபடும் மதம் வைணவம். விஷ்ணு சம்பந்தம் உடையவர் வைணவர். வைணவர் பலபடியினர். படிப்படியாக மேல் நிலை எய்தி அவரவர் நிலைப்படி பெயர் பெறுகின்றனர். அவர்களைப் பத்து வகையினராகச் சொல்லுவர். 1. எம்பெருமானையும் அவனடியாரையும் கண்டால் வெறுக்காமல் இருப்பவனும் வைணவனே. இவன் அத்துவேஷி. 2. எம்பெருமானுக்கும் அவனடியாருக்கும் நல்லவனாய் இருப்பவன் அனுகூலன். 3. எம்பெருமானுடைய திருநாமங்களைத் தனக்கும் தன் குடியினருக்கும் கொண்டவன் நாமதாரி. 4. விஷ்ணுவுக்கே உரிய சங்கு சக்கரங்களைத் தன் தோளில் தரித்துக் கொண்டவன் சக்ராங்கி. 5. எம்பெருமான், தனது திருமந்திரமான திருஎட்டெழுத்தை நினைக்கிறவர்களுக்குப் பாபத்தைப் போக்கி மோட்சத்தைக் கொடுக்கிறான் என்பதனை அறிந்து அம்மந்திரத்தை ஓதுபவன் மந்திரபாடி. 6. வேறு தேவதைகளிலும், வேறு விஷயங்களிலும் பற்றை ஒழித்து, எம்பெருமானையே பலனாக எண்ணி பக்தியைச் சாதனமாகக் கொண்டவன் வைணவன். 7. இதர விஷயங்களை அடியோடு விட்டுப் பரிசுத்தனாய், சம்சாரிகளிடத்திலும், சரீரபந்துக்களிடத்திலும், பற்றில்லாதவனாய் அவர்கள் சம்பந்தத்தை அறவே ஒழித்து, எம்பெருமானே சகலமும் என்று இருப்பவன் ஸ்ரீவைஷ்ணவன். (பிராமண குலத்தில் பிறந்த வைணவர்களை ஸ்ரீ வைணவர் என்றும் மற்றக் குலத்தில் பிறந்த வைணவர்களைப் பாகவதர்கள் என்றும் இக்காலத்தில் ஒரு புது வழக்கை உண்டுபண்ண முனைவது தவறானது என்று இதனால் அறியலாம்.) 8. உண்ணுஞ்சோறும் பருகு நீரும் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணனே என்று எல்லா பாரங்களையும் அவன் திருவடிகளிலே வைத்து மற்றப்பற்றுகளை அறுத்தவர் - பிரபத்தி நெறியில நின்றவர் பிரபந்நர் 9. பக்தியை உபாயமாகக் கருதுவதையும் விட்டு, அவன் திருவடிகளையே சாதனமாகக் கருதி, "ஆறெனக்கு நின்பாதமே சரணாகத் தந்தொழிந்தாய், உனக்குக் கைம்மாறு நானொன்றிலேன், எனதாவியும் உனதே" என்றபடி எல்லா பாரத்தையும் அவன்மேல் போட்டிருப்பவர் ஏகாந்தி. 10. எம்பெருமானைத் தான் பற்றாமல் அவனே தன்னைக் கைக்கொள்ள வேண்டும் என்ற நினைவுடன் தன்னை அவன் சொத்தென்றும், சொத்துக்குடையவனான (சுவாமி) அவன் விருப்பப்படி செய்து கொள்ளக் கடவன் என்றும் இருக்குமவர் பரமேகாந்தி.

ஸ்ரீவிஷ்ணு தனித்திருப்பதன்றி எல்லா உயிர்களிலும், தெய்வங்களிலும், பொருள்களிலும் கலந்து உறைவதால் விஷ்ணுவை வழிபடுகிறவர்கள், எதனையும் எவரையும், எம்மதத்தையும் வெறுப்பவு

ராகாரி. இவ்வுண்மையை "மருவிய மயிலினன் அறுமுகன் இவனோ?" "நுண்ணுணர்வின் நீலார் கண்டத் தம்மானும் நிறை நான் முகனும் இந்திரனும்," "ஒருவன் என்று ஏத்த நின்ற நளிர்மதிச்சடையன் என்கோ?", "நாட்டினான் தெய்வம் எங்கும் நல்லதோர் அருள் தன்னாலே'', "கருவுடைத் தேவில்கள் எல்லாம் கடல் வண்ணன் கோயிலே என்னும்,'' என்கிற ஆழ்வார்கள் அருளிச் செயல்களால் அறியலாம்.

**ஸ்ரீவைஷ்ணவர் பெயர்க் காரணம் :** சரணாகதியில் நிலை நின்று பிரபந்நர்களான இவர்களுக்கு "ஸ்ரீவைணவர்கள்'' என்று பெயர் வரக்காரணம் என்ன? என்று ஸ்ரீரங்கம் பெரியகோயில் வள்ளலாரைப் பெரியோர்கள் வினவ, அவர், "இவர்கள் ச்ரிய: பதியின் (லக்ஷ்மி நாயகன்) மக்களாகையாலும், இவர்களுக்கு ஸ்ரீ யோடு கூடின பெருமாள் (திருமால்) தந்தையாகையாலும், ஸ்ரீ (திரு) தாயாகையாலும், இவர்கள் ஸ்ரீமானுடைய (திருமால்) பெருமைகளை அறிகையாலும், ஸ்ரீமாந் இவர்களுடைய பெருமையை அறிகையாலும், பிராட்டியோடு கூடிய பெருமானுக்கு அடிமை என்ற பொருள் ஸ்ரீமத் என்ற பதத்திலே உண்டாகையாலும், ஸ்ரீ (பிராட்டி) இவர்களைப் புருஷகாரமாக இவன் குற்றங்களைக் கண்டு பெருமாள் வெறுக்காமல் பண்ணி அங்கீகரிக்கும்படி செய்து இவர்களை வளர்க்கையாலும் இவர்களுக்கு 'ஸ்ரீவைஷ்ணவர்கள்' என்று பெயர் குறிக்கும்படி ஆயிற்று'' என்று அருளினார்.

**திருமண் காப்பு :** ஸ்ரீவைணவர்கள் என்று அறிய புற அடையாளமாய் விளங்குவது திருமண் காப்பு. இதை ஊர்த்வ புண்ட்ரம் என்பர். மேல்நோக்கி இடும் ரேகைகள்-கோடுகள். இது நெற்றி முதல் பிடரிவரை உடலின் பன்னிரு இடங்களில் அணியப் படுவது; திருமண் தூய வெள்ளை மண்ணாலும் ஸ்ரீசூர்ணத்தாலும் அணிய வேண்டியது. வெள்ளை மண் மோட்சம் தருவது. ஸ்ரீ என்றால் ஹரித்ரை—ஹரித்திரா—மஞ்சள் ஸ்ரீசூர்ணம் மஞ்சள் பொடி. மஞ்சள் மங்கலத்தையும், செல்வத்தையும், கவர்ச்சியையும், ஞானத்தையும் தருவது. இது சிவப்பாயும் பொன்நிறமாயும் இருக்கும். இவை நமக்குக் காப்பு (ரக்ஷை) ஆகையாலே திருமண் காப்பு என்பர். ஸ்ரீமந் நாராயணனை (அகாரம்) இரண்டு ஊர்த்வ வெண்மண் ரேகைகளிலும் (இருபாதங்கள்), ஸ்ரீமகாலக்ஷ்மியை (உகாரம்) ஸ்ரீசூர்ணத்திலும், ஆத்மாக்களுக்கு [மகாரம்] முதல்வராக ஆசார்யராக இருக்கிற இராமாநுசரை பீடத்திலும் இருப்பதாகக் கொண்டு, திருமண் காப்பு பிரணவ சொரூபமாக [ஓம்] அணிவது என்று கூறுவர் ஞானியர்.

திருமண்காப்பில் இலக்குமியோடு கூடிய நாராயணன் வசிப்பதால், இதைத் தரிக்கும் தேகம் பகவானுக்குக் கோயில் ஆகிறது. அதனால் பேய் பிசாசு சூன்ய பீடை முதலியன அணுகா; எமதூதர்களும் அஞ்சுவர்; எல்லாப் புண்ணியங்களும், செல்வங்களும், நன்மைகளும் சேரும்.

பெருமாள், தாயார் இருவருடைய முக்கியமான பன்னிரு திருநாமங்களையும் ஓதிக்கொண்டு இடப்படுவதால் இது "திருநாமம்" என்றும் வழங்குகிறது. இச்சீரிய வைணவச் சின்னத்தின் மீது இதர தேவதைகளின் பொருள்களை இடுவது அறியாமை; பாவம்.

பெருமாளுக்கு ஏன் திருமண் அணிகிறார்கள் என்ற ஐயப்பாடு எழுப்பப்படுகிறது. இறைவன், தானே ஆசார்யனாகவும், சிஷ்யனாகவும் இருந்த இருப்பை உலகத்தார் அனுஷ்டிக்க வேண்டியதைக் காட்டுவதற்காக என்பர். ஸ்ரீராம பிரானும் சீதாப்பிராட்டியாரும் ஸ்ரீரங்கநாதரை வழிபட்டுக் காட்டியுள்ளனர். அவனது திருவடிகள் நமக்குக் காப்பு என்பதை நினைவூட்டுவதாகவும், ஓர் அணியாகவும் விளங்குகிறது.

குரு : வைணவனாகுமவன் ஞானம் அநுட்டானம் இரண்டும் நன்றாக உடைய ஒரு குருவை [இருளைப் போக்குபவன்] அடைந்து எல்லாம் பெறவேண்டும். எல்லா உலகுக்கும் காரணனும், காப்பவனும், திருமகள் கேள்வனும் சர்வ சேஷி—எல்லார்க்கும் தலைவனும், எல்லையில்லாத கல்யாண குணநிதியும், எல்லாவித பந்துவுமான ஈசுவரனுக்கும், ஞான ஆனந்த சொரூபனும், அணு சொரூபனும், சுயம் பிரகாசனுமான ஆத்மாவுக்கும் உள்ள ஒன்பது விதமான சம்பந்தங்களையும், இருவருடையவுமான சொரூபம், உபாயம், விரோதி, புருஷார்த்தம் முதலானவைகளையும் உள்ளபடி சிஷ்யனுக்கு எடுத்துக் காட்டும் தன்மையுடைய குருவே ஆசார்யன் எனப்படுகிறான். "பீதக ஆடைப் பிரனார் பிரம குருவாகி வந்து" என்றருளுகிறார் பெரியாழ்வார் (பா. 101) எம்பெருமானே ஆசார்யனாகிறான். ஆதலால் ஆசார்யனைப் பர பிரம்மசொரூபி என்றும் 'நாம் தஞ்சம் அடைய வேண்டிய மேலான இடம் அவனே என்றும் சான்றோர் சொல்லுவர். உண்டியே உடையே பிறவே என உகந்தோடிடும் இக்காலத்தில் இந்நலங்களெல்லாம் அமைந்த ஆசார்யன் கிட்டுவது அருமை. ஞானம் நன்பால் போன்றது. கெட்ட கலத்தில் காய்ச்சினால் பால் திரியும்; பயனற்றுப்போம. ஆகவே நல் ஆசார்யனை அருளுமாறு இறைவனிடமே விண்ணப்பிப்பது நல்லது.

**சிஷ்யன்:** நல்லாசிரியனை அணுகும் மாணவன் தூய்மையும் தணியாவேட்கையும், ஐம்பொறி அடக்கம்,

அன்பு, தொண்டு, நன்றி, சத்துவ குணத்தைத் தரவல்ல நல்லுணவு, புலால் முதலிய தீய தாமசப் பொருள்களை விலக்குதல், பொறை, இரக்கம், உழைப்பு முதலியவை உடையனாக இருத்தல்வேண்டும்.

**பஞ்ச சமஸ்காரம்:** ஸ்ரீவைணவனாகுமவன் ஆசார்யன் மூலமாகப் பஞ்ச சமஸ்காரங்களைப் பெற்றுக் கொள்ளக் கடவன். அவை: 1 தாபம்; 'தீயிற் பொலிகின்ற செஞ்சுடராழித் திகழ் திருசக்கரத்தின் கோயில் பொறியாலே ஒற்றுண்டு நின்று குடி குடி ஆட்செய்கின்றோம், (பா. 7–103) என்றபடி ஆசார்யனால் விதிப்படி ஓமத்தீயில் காய்ச்சப்பட்ட சங்கு சக்கர சின்னங்களைத் தோள்களில் தரித்துக் கொள்வது. அதனால் ஆட்செய்யும் அடிமை பூணும் தகுதி பெறப்படுகிறது. 2 புண்ட்ரம்: ஆசார்யனால் நெற்றி முதல் பிடரி முடிவாகப் பன்னிரண்டு இடங்களில் இடப்படும் திருமண்காப்பை (நாமம்) அணிந்து கொள்வது, 3 நாமம்: இராமாநுச தாசன் என்கிற தாஸ்ய நாமத்தைப் பெறுதல், 4 மந்திரம்: திருஅஷ்டாக்ஷர (எட்டெழுத்து) மந்திரத்தைப் பொருளோடும் உபதேசிக்கப் பெறுதல் 5 யாகம்: எம்பெருமானுக்குத் திருவாராதனம் செய்யும் முறையை அறிதல், திருவாராதனம் இல்லாத இல்லத்தில் திருவாழாள் என்றும் பெரியோர் கூறுவர்.

இருபது பிறவிகள் அக்னி இந்திரன் சூரியன் முதலானவர்களிடத்திலும் ஏழுபிறவி சிவனிடத்திலும், மூன்றுபிறவி பிரம்மாவிடத்திலும் பக்தி செய்பவன், அந்தந்த தேவதைகளின் அருளால் விஷ்ணுபக்தன் ஆகிறான் என்று கூறியுள்ளனர். வைணவக் குடியிலே பிறந்தவர்கள் தங்கள் பிறப்பின் அருமைகளை அறிந்து ஒழுக வேண்டியது கட்டாயம்.

**சாஸ்த்திரம்:** வைணவன் வேதம், ஸ்ரீமத்ராமாயண மகாபாரத இதிகாசம், விஷ்ணு, பாகவத புராணங்கள், ரகசிய சாத்திரங்கள், திவ்வியப் பிரபந்தம் முதலியவைகளின் அறிவைப் பெறவேண்டும். வேதம்; எப்பொழுதும் ஒரேவிதமாய், ஒன்றோடொன்று பிணைக்கப்பட்டு ஒலிக்கப்படும் சப்தங்களின் கூட்டமே வேதம் என்பர். அது நேரேயும் அனுமானத்தாலும் அறிய முடியாத பொருள்களை அறிவிப்பதனாலும். ஞானத்திற்கு இடமாய் உள்ளதனாலும், வேதம் என்பர். ஏட்டில் எழுதப்படாமல் குருசிஷ்ய சிரவண (செவி வழி) பரம்பரையாகவே கற்பிக்கப்பட்டு வருவதால் சுருதி எனப் பெயர் பெற்றது என்பர். வேதத்திற்கு மறை என்றும் பெயர். அம்மறைதான் வடமொழி மறை, தென்மொழி மறை என்று இருவகைப்படும்.

அவை இரண்டும் நித்தியமானவை (அழியாதவை). இறைவனால் அருளப்பட்டவை.

**வடமொழி மறை :** ருக், யஜுஸ், சாமம், அதர்வணம் என நான்கு வகையாய், சமஸ்கிருத மொழியில் உள்ளது. அது பூர்வபாகம், உத்ரபாகம் என இரண்டு பாகங்களாகப் பிரிக்கப் பட்டுள்ளது. பூர்வ பாகம் அக்னி, இந்திர வணக்கம், ஓமம், யாகம், ஜியோதிஷ்டோமம் முதலானவை, அவற்றின் சாதனங் கள், பலன்கள் முதலியவற்றைப் பற்றிப் பேசுவதால் கர்ம காண்டம் எனப்படுகிறது. உத்தரபாகம், பிரமத்தினுடைய சொரூப, ரூப, குண, விபூதி, சேஷ்டிதங்களையும், ஆத்மாக் களுடைய சொரூபம் (தன்மை) உபாயம் (வழி) புருஷார்த்தம் (பேறு) முதலியவைகளையும் விளக்குவதால் பிரமகாண்டம் எனப்படுகிறது.

**தென்மொழி மறை :** இது தமிழ்மொழியில் உள்ளது. இதனைத் திராவிட வேதம் என்றும் வழங்குவர் நம் பூர்வாசாரியர் கள். இது எம்பெருமான் அருள் மூலமாக அவதரித்தது. மயர்வற மதிநலம் அருளப்பெற்றவர்களும், சுத்த சத்துவகுணத்துக்கு எல்லை நிலமானவர்களுமான ஆழ்வார்களால் அருளிச் செய்யப் பட்டது. இதை நாலாயிர திவ்வியப் பிரபந்தம் என்றும் வழங்குவர். "தென் குருகைப் பிரான், பாட்டென்னும் வேதப் பசுந்தமிழ் தன்னைத் தன் பத்தியென்னும் வீட்டின் கண் வைத்த இராமாநுசன்" என்று திருவரங்கத் தமுதனார், இராமாநுச நூற்றந்தாதியில் "பசுந் தமிழ்வேதம்" என்றும் பசுமையாக உள்ள தமிழ் வேதம் என்று அருளியுள்ளார்.

பரத கண்டத்தில் பல மொழிகள் உள்ளன. அவை அனைத் திற்கும் இவ்விரு மொழிகளுமே மூலம். இவை இரண்டனை மட்டி லுமே நம்பூர்வர்கள் மறை மொழிகளாகக் கொண்டனர். இங்கு, "எவ்வுலகத்து எவ்வெவையும் என்கையாலே வேதம் பஹு விதம்", "இதில் சமஸ்கிருதம் திராவிடம் என்கிற பிரிவு ருகாதி பேதம் போலே", "செந்திறத்த தமிழ் என்கையாலே ஆகஸ்தியமும் அநாதி", "வடமொழிமறை என்றது தென் மொழி மறையை நினைத்திறே" எனும் ஆசார்ய இருதயம் சூர்ணிகைகள் (31...42) நினைக்கத்தகும். இதனால் இவை இரண்டனுள் ஏற்றத் தாழ்வு கருதுவது அறவே கூடாது என்பதற்கு வைணவ தர்சன சான்றோர்கள் பலபல ஏதுக்கள் காட்டி விளக்கி யுள்ளனர். "இரு நிலம் கால் தீ நீர்விண் பூதம் ஐந்தாய், செந்திறத்த தமிழோசை வடசொல்லாகித் திசை

நான்குமாய்த் திங்கள் ஞாயிறாகி,'' என்னும் திருமங்கையாழ்வார் அருளிய திருநெடுந் தாண்டகம் குறிக்கொள்ளத் தக்கது.

**நாலாயிரத்தின் தனிமிகு சிறப்பு:** வடமொழி வேதம் சொரூபத்திற்குச் சேராத கர்மங்கள், பல புதுத்தேவர் வணக்கங்கள் முதலான கண்டகண்ட பொருள்களையும் பிரமத்தையும் கலந்து பேசிக் குழப்பித் தெளிவின்றி இருக்கிறது. ஆனால் திராவிட வேதமோ சொரூபத்திற்குச் சேர்ந்தவற்றையும், பிரமத்தையுமே சிறப்பித்துப் பேசுகிறது. வேதத்தில் தெளிவு படாத இடங்களைச் "செய்ய தமிழ்மாலைகள் நாம் தெளிய ஓதித், தெளியாத மறைநிலங்கள் தெளிகின்றோமே" என்று சுவாமி தேசிகர் கூறுவது கொண்டு தமிழ்மொழி வேதத்தால் வடமொழி வேதம் தெளிவுபடுவதை அறியலாம். கற்றற்கரும் அருமை நோக்கி வடமொழியை 'முரட்டு சமஸ்கிருதம்' என்றும், எளிமை, செம்மை, இனிமை நோக்கித் தென்மொழியை 'ஈரத்தமிழ்', செவிக்கினிய செஞ்சொல். யாலேய் பைந்தமிழ் என்றும் கூறுவர் வடமொழி வல்லுநரான வைணவச் சான்றோர். பிரம்ம சூத்திரத்திற்குப் பொருள்...(ஸ்ரீபாஷ்யம்) உரைக்குங்கால் மயங்கப் பொருள் தரும் சூத்திரங்களுக்கு ஆழ்வார்களின் ஸ்ரீசூக்திகளைக் கொண்டு பொருள் முடிவு செய்வர் சுவாமி இராமநுஜர் என்றுங் கூறியுள்ளனர். இதனாலன்றோ, மகாகவி என்று ஸ்ரீமணவாளமாமுனிகளாலும், நம்பிள்ளையாலும்; போற்றப்பட்டவர், சடகோபர் அந்தாதியில்,

"தோன்றா உபநிடதப் பொருள் தோன்றலுற்றார் தமக்கும்
சான்றாம் இவையென்ற போதுமற் றென்" என்றும்.

"பண்ணும் தழிழும் தவஞ் செய்தன, பழ நான் மறையும்
மண்ணும் விசும்பும் தவஞ்செய்தன, மகிழ்மாறன் செய்யுள்
எண்ணுந் தகைமைக் குரிய மெய்யோகியர் ஞானமென்னுங்
கண்ணும் மனமும் செவியும் தவம் செய்த காலத்திலே"

என்றும் சடகோபன் தமிழ்மறையைப் பெற பழநான்மறையும் தவம் செய்ததாக கவிச் சக்கரவர்த்தி கம்பநாட்டாழ்வார்

வடமொழிவேதம் எம்பெருமான் குணங்களைப் பேசத் தொடங்கி முடிவு காணாது அவன் பின்னே தேடிச் செல்வதற்கு அறிகுறியாக பெருமாள் திருவீதி புறப்பாட்டிலும், விழாக் காலங்களிலும் எம்பெருமானுக்குப் பின்னே வேதம் பாராயணம் செய்யப்பட்டு வருகிறது. தமிழ்வேதமாகிய திவ்வியப் பிரபந்தம்

எம்பெருமானை உள்ளபடி உணர்ந்து, பேதையரும் அறியலாம் படி வெளியிட்டு வேதத்திற்கு மேம்பட்டச் சிறப்புத் தோன்ற அப்பெருமானுக்கு முன்னே சேவிக்கப்பட்டு வருகின்றது.

திருக்கோயில்களில் ஓமம், யாகம், திருமஞ்சனம் முதலான செயல்கள் — (கிரியைகள்-சடங்குகள்) நிகழும்போது வேதத்தை ஓதவும், அதனை அடுத்து எம்பெருமானது அழகு குணம் ஆற்றல் அருள் முதலியவைகளில் ஆழ்ந்து அனுபவித்து நெஞ்சுருகி ஈடுபட திவ்வியப் பிரபந்த சேவையையும் வைத்திருக்கும் முறை அறிந்து மகிழ்தற்கு உரியது. கிரியைகள் பலன் கருதியவை; சேவை அவன் முகமலர்ச்சிக்கே உரியது.

**ஆழ்வார்கள் பதின்மர் :** திவ்வியப் பிரபந்தம், திருமால் இருவருளால் மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார்கள் பத்துப்பேரும், பிராட்டியாம் ஆண்டாளும்,நம்மாழ்வாரைப் பாடிய மதுரகவி ஆழ்வாரும் ஆகப் பன்னிருவரும் அருள்மிக்குப் பாடிய நாலாயிரம் இன்தமிழ்ப் பாக்களாலான இருபத்து நான்கு நூல் களின் தொகுப்பாகும். இது அருளிச் செயல், ஸ்ரீகோசம் என்றும் வழங்கப்படும்.

ஆழ்வார்கள் நித்ய-திவ்ய சூரிகளின் அவதாரம். அவர்கள் பாடியவை எம்பெருமானைப் பற்றிக் கூறும் நூல்களுள் சிறந்தன எனும் கருத்தால், திவ்விய பிரபந்தம் என்றனர். திவ்வியப் பிரபந்தங்களைப் பெற்ற தலங்கள் திவ்ய தேசங்கள் (108) ஆயின.

1. **ஸ்ரீ பொய்கையாழ்வார் :** ஸ்ரீ பாஞ்சசன்னிய அம்சம் [சங்கு] இவர் காஞ்சீபுரத்தில் திருவெஃகா என்கிற சொன்ன வண்ணம் செய்த பெருமாள் திருக்கோயில் பொற்றாமரைப் பொய்கையில் ஐப்பசித் திருவோணத்தில் அவதரித்து 100 பாசுரங்கள் கொண்ட [முதல்] திருவந்தாதியை அருளிச் செய்தார்.

2. **ஸ்ரீ பூதத்தாழ்வார் :** ஸ்ரீ கௌமோதகி கதாம்சம் [தண்டு] திருக்கடன் மல்லையில் ஐப்பசி அவிட்டத்தில் மாதவிப் பூவில் அவதரித்து 100 பாசுரங்கள் கொண்ட [இரண்டாம்] திருவந்தாதியை அருளிச் செய்தார்.

3 **ஸ்ரீ பேயாழ்வார் :** ஸ்ரீ நாந்தகாம்சர் (வாள்), தேனமர் சோலை மாடமா மயிலையில் ஆதிகேசவப் பெருமாள் கோயில் திருக்கிணற்றில் செவ்வல்லிப் பூவில் ஐப்பசி சதயத்தில் அவதரித்து 100 பாசுரங் கொண்ட (மூன்றாம்) திருவந்தாதியை அருளிச் செய்தார்,

4. **ஸ்ரீ திருமழிசையாழ்வார் :** ஸ்ரீ சுதர்சனாம்சம் (சக்கரம்), திருமழிசையில் தை மாதத்தில் மகநட்சத்திரத்தில் அவதரித்து 96 பாசுரங்கொண்ட நான்முகன் திருவந்தாதியையும், 120 பாசுரங்கொண்ட திருச்சந்த விருத்தத்தையும் அருளிச் செய்தார்.

5. **ஸ்ரீ நம்மாழ்வார் :** பகவான், ஸ்ரீகௌஸ்துபம், சேனை முதலியார் ஆகியோருடைய அம்சமாய் திருக்குருகூரில் [ஆழ்வார் திருநகரி] வைகாசியில் விசாகத்தில் அவதரித்து திருவிருத்தம் 100 திருவாசிரியம்-7, பெரிய திருவந்தாதி-87, திருவாய்மொழி-1102 ஆகிய நான்கு திவ்வியப் பிரபந்தங்களை அருளினார்.

6. **ஸ்ரீ மதுரகவியாழ்வார் ;** ஸ்ரீ குமுதகணேசாம்சம். ஆழ்வார் திருநகரிக்கு அடுத்த திருக்கோளூரில் சித்தரை மாதம் சித்திரையில் அவதரித்தார். தம்குருவான நம்மாழ்வாரைத் தவிர வேறு தெய்வம் அறியாதவராய் ஆழ்வாரைப் பற்றி 11 பாசுரங்கொண்ட "கண்ணிநுண் சிறுத்தாம்பு" அருளினார்.

7. **ஸ்ரீ குலசேகராழ்வார் :** ஸ்ரீ கௌஸ்துபாம்சராய்க் கோழிக் கோடு—திருவஞ்சிக்களத்தில் மாசிப்பூசத்தில் அவதரித்து 105 பாசுரங்கொண்ட பெருமாள் திருமொழியை அருளினார்.

8. **ஸ்ரீபெரியாழ்வார் :** ஸ்ரீ கருடாம்சராய் ஸ்ரீ வில்லிபுத்தூரில் ஆனி மாதம் ஸ்வாதியில் அவதரித்து 12 பாசுரங்கொண்ட திருப்பல்லாண்டையும், 461 பாசுரங்கொண்ட பெரியாழ்வார் திருமொழியையும் அருளினார்.

9. **ஸ்ரீ ஆண்டாள் :** ஸ்ரீ தேவி பூதேவிகளின் அம்சமாய் ஸ்ரீவில்லிபுத்தூரில் திருவாடிப் பூரத்தில் ஜகத்துதித்துத் திருப்பாவை 30-ம் நாச்சியார் திருமொழி 143-ம் அருளினார்.

10. **ஸ்ரீ - தொண்டரடிப்பொடியாழ்வார் :** ஸ்ரீ வைஜயந்தி வநமாலிகாம்சம்ராய் மண்டங்குடியில் மார்கழிக் கேட்டையில் அவதரித்துத் திருப்பள்ளி எழுச்சி 10 பாசுரமும், திருமாலை 45 பாசுரமும் அருளினார்.

11. **ஸ்ரீ திருப்பாணாழ்வார் :** ஸ்ரீ வத்சாம்சராய் உறையூரில் கார்த்திகை ரோகிணியில் அவதரித்து அமலனாதிபிரான் 10 பாசுரம் அருளினார்.

12. **ஸ்ரீதிருமங்கையாழ்வார் :** ஸ்ரீ கார்முகாம்சராய் (வில்) திருவாலி திருநகரியைச் சார்ந்த திருக்குறையலூரில்

கார்த்திகைமாதம் கார்த்திகை நட்சத்திரத்தில் அவதரித்தார். இவர் அருளியவை ஆறு நூல்கள். அவை : பெரிய திருமொழி 1084, திருக்குறுந்தாண்டகம் 20, திருநெடுந்தாண்டகம் 30, திருவெழு கூற்றிருக்கை 1 (இரத பந்தனம்), சிறிய திருமடம் 77½ கண்ணிகள், பெரிய திருமடல் 148½ கண்ணிகள் ஆகும்.

இவை இருபத்துநான்கு அருளிச் செயல்களும் சேர்ந்து நாலாயிர திவ்வியப் பிரபந்தம் ஆயிற்று.

## ஆழ்வார்கள் தோற்றத்து அடைவு :

"பொய்கையார், பூதத்தார், பேயார், புகழ்மழிசை
ஐயன், அருள் மாறன், சேரலர் கோன்—துய்ய பட்ட
நாதன். அன்பர் தாள் தூளி, நற்பாணன், நன்கலியன்,
ஈதிவர் தோற்றத் தடைவாம் இங்கு"

—உபதேசரத்தினமாலை.

**நம்மாழ்வார் தலைமை :** ஆழ்வார்களுள் தலைமை (ஸ்தானம்) பெற்றிருப்பவர் நம்மாழ்வார். இவர் பிரபந்நஜன கூடஸ்தர்—சரணாகதி செய்பவர்களுக்கு மூல புருஷர். இவர் அவயவியாகவும், மற்றைய ஆழ்வார்களை இவருக்கு அவயவங் களாகவும் முன்னோர் நிரூபித்துள்ளனர். பூதத்தார் சிரம்: பொய்கையார் பேயார் கண்கள்; பட்டர்பிரான் முகம்; திருமழிசைப் பிரான் கழுத்து; குலசேகரர், பாணர் கைகள்: தொண்டரடிப்பொடி மார்பு; கலியன் கொப்பூழ்; மதுரகவி, இராமானுஜர் திருவடிகள் என்பர்.

ஒப்புயர்வற்ற மாறன் சடகோபன், நம்பெருமானால் 'நம் மாழ்வார்' என்று அருளப்பாடிட்டதனாலும், ஆழ்வாரும் எம் பெருமான் திருவடிகளுக்கு மிகவும் அணுக்கராய், அந்தரங்கராய் இருந்ததனாலும் பெருமானது பாதுகை ஸ்ரீசடகோபன் (சடாரி) என்று இவரது திருநாமத்தை இட்டு வழங்கப்படுகின்றது. நம்மாழவார் திருவடி நிலைகளுக்கு "மாறனடி பணிந்து உய்ந்த ராமாநுஜன்" என்பதாலே 'இராமாநுஜன்' என்ற திருநாமம்

வேதம், அங்கம், உபாங்கம் என்று வடமொழி வேதம் பகுக்கப்பட்டுள்ளது போன்று இந்தத் திராவிட வேதமும் பகுக்கப் பட்டுள்ளது. நம்மாழ்வார் அருளிய திருவிருத்தத்தில் ருக்வேதப் பொருளும், திருவாசிரியத்தில் யஜுர் வேதப் பொருளும், பெரிய திருவந்தாதியில் அதர்வண வேதப் பொருளும் திருவாய் மொழியில் சாமவேதப் பொருளும் பொலிவதாகப் பெரியோர் பகர்வர். இந்த நான்கு வேதங்களுக்கும் திருமங்கையாழ்வார்

அருளிய பெரிய திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந் தாண்டகம், திருவெழுகூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல் ஆகியவை ஆறு அங்கங்களாகவும், மற்றைப்பதின்மர் செய்த பதினான்கு பிரபந்தங்களும் உப அங்கங்களாகவும் சொல்லுவர்.

வேதம் பரத்வத்தையும், பாஞ்சராத்திர ஆகமம் வியூகத் தையும், ஸ்ரீமத்ராமாயண பாரத இதிகாசங்கள் விபவத்தையும் ஸ்மிருதிகள் அந்தர்யாமித்வத்தையும் பேசுகின்றன. திராவிட வேதம் இவற்றை எல்லாம் நன்கு விளக்கிப் பேசுவதோடு, செந் தமிழ் பாடுவார் தாம் வணங்கும் தேவரான—நாம் பற்றுதற்கு எளியரான அர்ச்சா அவதாரப் பெருமாளைப் போற்றும் துதிவடி வான அமிழ்தச் செஞ்சொல் இன் தமிழ்ப் பாசுரங்களாம் சிறப் புடையதாகவும் உள்ளது.

**அருளிச் செயல் மீட்பு :** இடைக்காலத்தில் ஆழ்வார்கள் அருளிச் செயல்கள் காண்பதற்கும் கேட்பதற்கும் அரிய வாயின. ஆழ்வார்களைக் கொண்டு இவற்றைத் தோற்றுவித்த ஸ்ரீமந் நாராயணனே ஆசார்யர்களை அவதரிப்பித்து அவைகளைத் திரும்பவும் வெளிக்கொணர்ந்து உலகை வாழ்விக்கக் கருதினான். அதன்படி குருபரம்பரையின் இடைக்கால ஆசார்யர்களில் முதல் வராக ஸ்ரீமந் நாத முனிகள் வீரநாராயண புரத்தில் அந்தணர் மரபில், சொட்டைக் குலத்தில் சோபகிருது ஆண்டு ஆனி மாதம் அநுஷ நட்சத்திரத்தில், சுக்கில திரயோதசியில் கஜாநநர் (யானை முகத்தர்) அம்சமாகப் பிறந்தார். ஞான ஒழுக்கங்களில் சிறந்து வளர்ந்தார்.

ஒருநாள் சில வைணவர்கள் பெருமாளை வணங்கும் போது திருவாய் மொழியில் "ஆரா அமுதே" எனும் பதிகத்தைச் சேவித்த தைக் கேட்டார். நீங்கள் முடிவில் ஆயிரத்துள் இப்பத்தும் என்று சேவிக்கிறீர்களே! உங்களுக்குப் பிரபந்தம் முழுவதும் தெரியுமா? என்று வினவினார். அவர்கள் தெரியாது என்றனர். இப்பிரபந்தத் தின் பெருமையை உணர்ந்த அவர், அதனை முழுவதுமாகப் பெற வேண்டும் என்று, அப்பிரபந்தம் பிறந்த மண்ணான குருகூருக்குச் சென்று, ஆழ்வாரின் சிஷ்யரான மதுரகவிகளின் சிஷ்ய பரம்பரை யில் வந்த ஸ்ரீபராங்குச தாசரைக் (இது ஆழ்வார் திருநாமங்களில் ஒன்று. கண்டு வணங்கித் தமக்கு அப்பிரபந்தத்தை அருளுமாறு வேண்ட, அவரும் தமக்குத் தெரியாதென்று சொல்லி அவருக்குக் "கண்ணி நுண் சிறுத்தாம்பு" உபதேசித்து, அதனை ஆழ்வார் திருமுன்னே பன்னீராயிரம் உரு அநுசந்தித்தால் ஆழ்வார் தோன்றி அருள் செய்வார் என்றனர்.

ஸ்ரீமந் நாதமுனிகள் அவர் உபதேசித்தபடியே ஆழ்வார் திருவடிகளை நெஞ்சிற் கொண்டு திருப்புளியாழ்வாரடியில் மன உறுதியோடு பன்னீராயிரம் உருச்சொல்லி நோற்க ஆழ்வாரும் காட்சியளித்து நாதமுனிகளுக்குத் திருவிலச்சினை செய்து, திவ்ய ஞானம் உண்டாக்கி, ஸ்ரீவைணவர்களின் மூன்று திருமந்திரங்களையும், தத்துவங்களையும், திருவாய்மொழி முதலான நாலாயிரத்தையும், அஷ்டாங்கயோக ரகசியத்தையும் உபதேசித்தருளினான். பேரருளாளரான நாதமுனிகள் அவைகளை ஆத்ம குணம் உடையவர்களுக்கெல்லாம் ஓதி ஸ்ரீவைணவ நெறியை வளர்த்தரர்.

**நாலாயிரத்தின் அமைப்பு :** திவ்யப் பிரபந்தத்தை வகுத்துத் திருப்பல்லாண்டு முதல் அமலனாதிபிரான் வரையில் பிரணவப் பொருள் (ஓம்—அமலனாதிபிரான் முதல் மூன்று பாசுரங்கள் முறையே அ, உ, ம எனும் எழுத்துக்களில் தொடங்குவதைக் காண்க); கண்ணிநுண் சிறுத்தாம்பு நம : சப்தப் பொருள்; பெரிய திருமொழி முதல் பெரிய திருமடல் ஈறாக உள்ள 13 நூல்களும் 'நாராயணாய' என்ற பகுதியின் விரிவு; திருவாய்மொழி துவயப் பொருளான தீர்க்க சரணாகதியைத் தெரிவிக்கும் இறுதிப் பனுவல் என்று முறைப்படுத்தினார். மேலும் அவற்றை இயலும் இசையுமாக்கித் தம்முடைய மருகர்களாக கீழையகத் தாழ்வான், மேலையகத்தாழ்வான் முதலானோரர் மூலமாக நாடெங்கும் பரப்பினர்.

ஸ்ரீரங்கத்தில் நின்று போயிருந்த திருவாய்மொழித் திருநாளைத் (திருவத்யயன உற்சவம்) திரும்பவும் தொடங்கி மற்றைய ஆழ்வார்களின் திருப்பாசுரங்களையும் நம்பெருமான் திருச்செவி சாத்த வேண்டுமென்று பகல் பத்து இராப் பத்து உற்சவங்களை ஏற்பாடு செய்த வள்ளலும் இவரே.

**ஆசார்யர்கள் :** ஸ்ரீநாத முனிகளுடைய சிஷ்யர்கள் எண்மர். அவருள் முதன்மையானவர் குருகைக் காவலப்பனும் உய்யக் கொண்டாருமாவர். யோக ரகசியத்தைக் குருகைக் காவலப்பனுக்கு உபதேசித்தார். உய்யக் கொண்டார் 'பிணம் கிடக்க மணம் புணரலாமோ?' (வீட்டில் பிணம் கிடந்தால் திருமணம் நடத்தலாகாதது போல) எல்லோரும் பிணம்போல இறை ஞானம் இல்லாதவர்களாய்க் கிடக்க, தனியொருவன் யோகத்தால் இறைவனோடு இன்புறுவது தகாது என்ற கொள்கை உடையராய், யோகம் பயில்வதை விடுத்து, சாத்திரங்களையும், திராவிட வேதங்களையும் உபதேசம் பெற்று அவைகளை நாடும் நகரமும் நன்கறியப் பரப்பினர். அவருடைய அருள் உள்ளமே

நாம் இன்று ஸ்ரீவைணவ தரிசனத்தைப் பெறும் பேற்றை அளித்தது. நம்மை உய்யக்கொண்டார் அவரே என்பதைப் புலப்படுத்துவது அவர் திருநாமமே!

அவர் சிஷ்யர் மணக்கால் நம்பி. மணக்கால் நம்பி சிஷ்யர் நாதமுனிகளின் பேரரான யமுனைத் துறைவர் என்னும் ஸ்ரீஆளவந்தார். ஆளவந்தார் பேரருளாளர். அவர் காலத்தில்தான் திருமால் திருநெறி தழைத்தோங்கத் தொடங்கியது. திராவிட வேதம் சிறப்புற்றது. அவர் சிஷ்யர்கள்தாம் பெரியநம்பி, திருக்கோட்டியூர் நம்பி, திருக்கச்சி நம்பி, மாறனேர் நம்பி, திருமாலையாண்டான், திருவரங்கப் பெருமாளரையர், திருமலை நம்பிகள், இன்னும் பலர். மேற்படி இவரிடமிருந்தும், ஸ்ரீஇராமாநுசர் ஸ்ரீவைணவ தரிசனத்திற்கு வேண்டிய ஒழுக்கங்கள் அனைத்தையும் பெற்றார்.

இராமாநுசர் கல்வி அறிவையும், பெருமாளிடம் கொண்டிருக்கும் ஈடுபாட்டையும் திருக்கச்சி நம்பி வாயிலாக அறிந்திருந்த ஆளவந்தார் காஞ்சி மாநகருக்குப் போந்து, நம்பி காட்ட இராமநுசரைக் கண்டு, அவரை வைணவ மதத்தை வளர்க்கும் 'ஆம் முதல்வன் இவன்' என்று தம் திருக்கண்களால் நோக்கித் தீட்சை செய்துவிட்டுத் திருவரங்கம் திரும்பினார் என்பர். பின்னர் இராமநுசர் காஞ்சி பூர்ணரான திருக்கச்சி நம்பியை வேண்டி முதல் உபதேசமாக ஆறு வார்த்தைகளைப் பெற்றார். அவர் உபதேசப்படியே பராங்குச தாசரான பெரிய நம்பிகளிடம் பஞ்ச சமஸ்காரம் பெற்றார். பெரிய நம்பியிடம் த்வயார்த்தம் முதலியவைகளையும், திருக்கோட்டியூர் நம்பியிடம் பெரிய திருமந்திரமான திரு எட்டெழுத்து விளக்கமும், சரம சுலோகார்த்தமும், த்வயார்த்த விளக்கமும், திருமாலையாண்டானிடம் திருவாய்மொழிப் பொருளும், திருவரங்கப் பெருமாள் அரையரிடம் பேற்றுக்கு ஆசார்யனே வழி என்னும் ஸ்ரீமதுரகவியாழ்வார் அனுஷ்டித்துக் காட்டிய 'சரமபுருஷார்த்தம்' (ஆசார்ய நிஷ்டை) எனும் முடிவான பேற்றையும், திருமலை நம்பியிடம் ஸ்ரீராமாயணத்தையும் தமது பெரு முயற்சியால் பெற்று அவற்றை எல்லோருக்கும் வழங்கிக் "காரேய் கருணை வள்ளல் இராமாநுசராக" விளங்கி உலகை வாழ்வித்து அருளினார்.

இராமாநுசர், எம்பெருமானார், உடையவர் என்று போற்றி வழங்கப்படுகிறார். அவருடைய திருவடி சம்பந்தம் பெற்றோர் பல்லாயிரவராவர். அவர்களுள் மிகவும் முக்கியமானவர் எம்பார், முதலியாண்டான், கூரத்தாழ்வான் முதலானோர். எம்பெருமானார் 'விசிஷ்டாத்வைதம்' என்னும் ஸ்ரீவைணவ சமயத்

தின் தத்துவக் கொள்கையை நன்கு வளர்த்து நிலைநாட்டினார் அதனால் அது இராமாநுச தரிசனம் என்ற பெயரும் பெற்றது அவரை அடுத்து இந்த தரிசனத்தைப் போற்றி வளர்த்தவர். கூரத் தாழ்வான் திருக்குமாரரான பட்டர் ஆவார். ஆழ்வார் களின் அருளிச் செயல்கள் விளக்கம் பெறுவதற்கென்றே உடை யவர் பட்டரை நியமித்தார். பட்டார் எம்பாரின் சிஷ்யர்.

**பகவத் விஷயம் :** திருவாய்மொழிக்கு உடையவர் உரை செய்ய வேண்டுமென்று அவரைப் பெரியோர் பலரும் வேண் டினர். அதற்கு அவர், அருளிச் செயல்களுக்குத் தாம் உரை செய்தலாகாது என்றும், அப்படிச் செய்தால் அதற்குமேல் வேறு யாரும் உரை செய்யாமல் அவ்வளவோடே நின்றுவிடும் என்றும், அருளிச் செயல்களின் பொருளாழம்—அழகு—இனிமை—பெருமை அளவிட முடியாதது என்றும் தெரிவித்து, மேன்மேலும் அதன் விளக்கங்கள் கிளைத்துச் செழித்து வளர வேண்டுமென்னும் கருத்தாலே திருக்குருகைப் பிரான் பிள்ளான் என்பவரைக் கொண்டு ஸ்ரீவிஷ்ணுபுராண அளவில் ஆறாயிரப்படி உரையை எழுதுவித்தார். அதனை அடுத்துப் பட்டர் பேரருளால் அவரது சிஷ்யர் வேதாந்தி நஞ்சீயர் ஸ்ரீபாஷ்யம் அளவில் ஒண்பதனாயிரப் படி உரையை எழுதினார். நஞ்சீயர் சிஷ்யர் நம்பிள்ளை. நம்பிள்ளை திருவாய்மொழி காலக்ஷேபம் மிகவும் விரிவாக நடத்துவாராம். அதில் ஈடுபடும் கூட்டம் (கோஷ்டி) மிகப் பெரியதாக இருந்த தால் இது என்ன நம்பெருமாள் கோஷ்டியோ? நம்பிள்ளை கோஷ்டியோ? என்று பேசுமளவுக்கு இருந்ததாம். அவரிடம் திருவாய்மொழிப் பொருட் சிறப்புகள் அனைத்தையும் கேட்ட பெரிய ஆச்சான் பிள்ளை இராமாயண அளவில் இருபத்தி நாலாயிரப்படி உரையைச் செய்தார். இதைத் தவிர, அவர் நாலா யிரத்துக்கும் அருமையான வியாக்கியானத்தை அருளினார். நம் பிள்ளையின் மற்றொரு சீடரான வடக்குத் திருவீதிப் பிள்ளை, திரு வாய்மொழியின் பொருளைத்தாம் நம்பிள்ளையிடம் கேட்டது கேட்டபடியே பட்டோலை செய்து சுருதப் பிரகாசிகா அளவில் ஈடு முப்பத்தாறாயிரப்படி உரையை எழுதினார். பெரிய ஆச்சான் பிள்ளையின் திருக்குமாரர் நயினாராச்சலின் சிஷ்யர் வாதிகேசரி அழகிய மணவாளச் சீயர் பதப்பொருள் விளங்கும்படி பன்னீரா யிரப்படி உரையைச் செய்தார். இவ்வுரைகள் யாவும் ஒருசேர 'பகவத் விஷயம்' எனப்படுகிறது. பகவானான எம்பெருமானைக் குறித்துச் சொல்லும் விஷயம் என்று பொருள்படும். (படி—முப்பத்திரண்டு முழு எழுத்துக்களைக் கொண்ட ஒரு ஸ்லோகம் ஈடு—உரை, கவசம், பதில் ஈடுபடுத்துவது முதலிய பல பொருள்.

வடக்குத் திருவீதிப் பிள்ளையின் திருக்குமாரர் பிள்ளை லோகாசாரியர். இவர்தான் வைணவநெறி நன்கு விளங்க முமுக்ஷுப்படி ஸ்ரீவசனபூஷணம் முதலான பதினெட்டு ரகஸ்ய நூல்களை அருளிச் செய்தார். வடக்குத் திருவீதிப் பிள்ளையின் மற்றொரு திருக்குமாரரும், பிள்ளை லோகாசாரியரின் திருத்தம்பியாருமான அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் 'ஆசார்ய இருதயம்' (ஆசாரியன் நம்மாழ்வார், இருதயம்—உள்ளம்) என்னும் அருமையான நூலையும், திருப்பாவைக்கு 6000 படி உரையும் அருளினார்.

பிள்ளை லோகாசார்யரின் சிஷ்யர் கூர குலோத்தும தாசர். அவருடைய சிஷ்யர் திருவாய்மொழிப் பிள்ளை என்கிற திருமலையாழ்வார் (ஸ்ரீசைலேசர்). அவருக்குச் சடகோப தாசர் என்ற திருநாமமும் உண்டு. இந்தத் திருவாய்மொழிப் பிள்ளைதான், உடையவருக்குப்பின் பிரபத்தி (சரணாகதி) மார்க்கம் உலகெல்லாம் பரவுவதற்குக் காரணமாய்த் திருவனந்தாழ்வான் அம்சமாய் அவதரித்த ஸ்ரீ மணவாள மாமுனிகளின் ஆசார்யர் ஆவார்.

**ஸ்ரீமணவாள மாமுனிகள் :** தத்துவத்ரயம், ரகசியத்ரயம், ஸ்ரீவசனபூஷணம், ஆசார்ய இருதயம், பெரியாழ்வார் திருமொழி சில பகுதி, இராமாநுச நூற்றந்தாதி முதலானவைகளுக்கு வியாக்யானமும், திருவாய்மொழி நூற்றந்தாதி, உபதேச ரத்தின மாலை, யதிராச விம்சதி முதலான நூல்களும் அருளியுள்ளார். அடியார்கள் வாழ அரங்க நகர் வாழ சடகோபன் தண்தமிழ் நூல் வாழ வாழ்ந்தவர் மணவாள மாமுனிகள்.

ஸ்ரீமந் நாதமுனிகள் தொடங்கி ஸ்ரீ மணவாள மாமுனிகள் ஈறாக ஆசார்யர்கள் அனைவரும் ஒரே குரலில் (ஏககண்டர்களாக) திராவிடவேதமான நாலாயிர திவ்யப் பிரபந்தத்தின் உயர் பொருளை விளக்கிப் போந்தனர். ஒருவர் உரைத்த பொருள் பின் வந்தார் உரைத்த உரையால் மேலும் பொலிவுற்றுத் தெளிவாக விளங்கும் சிறப்புடையதாக அமைந்து, பண்டிதரும் பாமரரும் ஒருசேர அனுபவிக்கும் அருளிச் செயல் ஆயின. குரல்—அபிப்பிராயம்.

அருள் கொண்டாடும் அடியவர் இன்புற இறைவனருளால் தோன்றிய இப்பக்திப் பனுவல்கள், பகவத் ஏக பரங்களாய், விலட்சணங்களாய், போக்யங்களாய், இறைவன் முக உல்லாச ஏதுக்களாய், சாரதமங்களாய், வேதத்தைவிட விஞ்சியவைகளாய் பெருமானது பர, வியூக, விபவ, அந்தர்யாமி, அர்ச்சை ஆகிய ஐவகை நிலைகளையும் விளக்குவனவாய் இருக்கின்றன என்றாலும் இவை அர்ச்சை

மையே சிறப்பாகக் கொண்டனவாய் எளிதில் பயிலத்தக்கனவாய்த் திகழ்கின்றன.

பயில்பவர்களுக்குப் பிறவித்துயர் அறுத்துப் பேர் இன்பத்தை அளிக்கவல்லன. செவிக்கு இனிய செஞ்சொல்லாய், கற்பனை அலங்காரம், சொற்செறிவு, பொருட்பொலிவு, கருத்தாழம், குறிப்புப் பொருள் முதலிய காப்பிய இலக்கணங்கள் நிறைந்தன வாய் அமைந்துள்ளன. வீடுபேற்றில் விருப்பம் உடையவர் அவசியம் அறியவேண்டிய ஐந்தையும் (அர்த்த பஞ்சகம்) விரிப்பனவாய் ஆங்காங்கு உள்ளுறைப் பொருள் நிரம்பினவாய் உள்ளன. இரகசிய மரபுக்குத் தலைமைக் காரண பூதங்களாம் இந்நூல்கள் என்று நம் பூர்வாசாரியர்கள் உறுதிப்படுத்தி உள்ளனர்.

**அறியவேண்டிய ஐந்து — அர்த்த பஞ்சகம் :** 1. மிக்க இறைநிலை—பரப்பிரம்மசொரூபம். 2, மெய்யாம் உயிர் நிலை—ஆத்ம சொரூபம் 3. தக்கநெறி—உபாயம் 4. தடையாகித் தொக்கு இயலும் ஊழ்வினை—விரோதிசொரூபம் 5. வாழ்வினை—முத்தி என்பன.

**1. மிக்க இறைநிலை :** கடவுள், இறைநிலை முதலிய தலைப்புகளின் கீழ் விளக்கப்பட்டுள்ளது. மிக்க என்றதனால் எல்லாவற்றிற்கும் மேம்பட்ட உயர்வு அற உயர்ந்த நலம் உணர்த்தப்பட்டது. (பாசுரம்—223 236, 239, 259).

**2. மெய்யாம் உயிர் நிலை :** மெய்யாம் என்றதனால் உயிர் என்றும் உள்ளது என்பது புலப்படுத்தப் பட்டது. தேகத்தில் ஆத்ம புத்தி பண்ணுகை, சுதந்திரன் என்று இருக்கை, அந்நிய சேஷத்துவம் என்று இருக்கை, விஷய பிராவண்யம் (காமம் முத வானவை) முதலான அல்வழக்கு ஒன்றும் இல்லாது இருக்கும் நிலை பா. 215, 216).

உயிர், மன்னுயிர், ஆருயிர் எனும் தமிழ் வழக்கு உயிர் அழியா தது, நிறைவுடையது என்பதனைப் புலப்படுத்தும். உயிர் (ஆத்மா) தேகம், இந்திரியம், மனம், பிராணன் இவைகளைக் காட்டிலும் வேறானது: ஞான ஆனந்த மயமானது: நித்யமானது: (எக்காலத் தும் உள்ளது) : அணுவானது (கண்ணால் காண முடியா நுண்மை)); நிர்மலமானது (அழுக்கு - குற்றம் அற்றது); சுயம் பிரகாசமானது (தன்னைத்தானே விளக்கிக் கொண்டிருக்கை); நிரவயமானது (சூட்சமாயிருக்கை); நிர்விகாரமானது (மாறுபடாதது), ஞானாச்ரய மானது (அறிவுக்கு இருப்பிடமானது) ஈசுவரனால் நியமிக்கப்படுவ தாய், (தரிக்கப் படுவதாய். அவனுக்குச் சேஷமாய் (அடிமை)

இருப்பது. அந்தச் சேஷத்துவத்தை அவனடியாரவும் (பாகவதர்) உடையது. (பாசுரம் 250, 279).

**தத்துவம் 25 :** (பா. 291) உயிரைப் "பஞ்ச விம்சகன்" என்று சொல்லுவர், அதாவது இருபத்தைந்தாவது தத்துவ மானவன். அதன் விவரமாவது: மெய், வாய், கண், மூக்கு, செவி என்கிற ஞானேந்திரியங்கள் (பொறிகள்) ஐந்து; சுவை (ரசம்), ஒளி (ரூபம்), ஊறு (ஸ்பரிசம்) ஓசை (சப்தம்), நாற்றம் (கந்தம்) என்கிற புலன்கள (விஷயங்கள்) ஐந்து; நாக்கு, கை, எருகால், குதம் (எருவாய்) குறி (கருவாய்) என்கிற கருமேந்திரியங்கள் (செயல்படு பவை) ஐந்து: மண், நீர், நெருப்பு, காற்று, விசும்பு (ஆகாயம்) என்கிற பூதங்கள் ஐந்து; மனம்; பிரகிருதி; மகான், அகங்காரம், ஆக தத்துவங்கள் இருபத்து நான்கு. இவைகளைக் காட்டிலும் வேறான, இருபத்தைந்தாவது தத்துவமே உயிர் (ஆத்மா);

இருப்பத்தாறாவது தத்துவம் இறைவன்—பரமாத்மா.

உயிருக்கு மூன்று குணங்கள் (இலக்கணம்) கூறியுள்ளனர். அவை 'ஆகாரத்ரயம், எனப்படும். 1. அநந்யார்க சேஷத்வம் ஈசுவரனுக்கு அன்றிப் பிறருக்கு அடிமைப்படாதிருத்தல். 2. அநந்ய சரணத்வம் — ஈசுவரனையன்றி மற்றெவரையும், எவற்றையும் தஞ்சமெனக் கொள்ளாமை. 3. அநந்ய போக்யத்வம், ஈசுவரனுக் கன்றி மற்றெவருக்கும் பயன்படாதிருத்தல்.

ஆத்மாக்கள் அளவிறந்தன. அவை நித்யர், முக்தர், பத்தர் கேவலர், முமுக்ஷு என ஐவகைப் படுவர். 1. பரமபதத்தில் உள்ள அனந்தன், கருடன், விஷ்வக்சேனர் முதலானோர் நித்யர் 2. இறைவனருளால் பிறவிப் பெருங்கடல் நீந்தி பரமபதத்தில் ஆனந்திக்கிற முனிவர்கள் முக்தர் 3. சம்சாரமாகிற கட்டில் அகப்பட்டுள்ள, பகவத் விஷயத்தில் பிரியமற்ற சேதனர்கள் பத்தர் 4. ஆத்மாவேறு பரமாத்மாவேறு என்று பகுத்தறியாமல் ஆத்ம அனுபவம் செய்பவர் கேவலர். 3. பகவானை அடைய வேண்டும் என்கிற ஆசையால் சம்சாரத்திலிருந்து விடுபட்டு மோட்சத்தில் (பேறு) இச்சை பிறந்தவர்கள் முமுட்சுகள், இவர்கள் உபாசகர் என்றும் பிரபந்நர் என்றும் இரண்டு விதமாய் இருப்பர்.

மோட்ச சித்தியின் பொருட்டுத் தமது முயற்சியால் செய்ய வேண்டியதான கர்மயோகம், ஞானயோகங்களை அங்கமாக உடைய பக்தியோகம் என்கிற சாதனத்தால் ஈசுவரனை உபாஸிப்பவர் உபாசகர்.

சதாசார்ய உபதேசத்தால் அத்யந்த பாரதந்திரியமே ஆத்மாவுக்குச் சொரூபம் என்பதை உணர்ந்து, அந்தச் சொரூபத்திற்குத் தகுதியான பிரபத்தியில் (சரணாகதி) இழிந்து மற்றச் சாதனங்கள் அனைத்தையும் விட்டு, ஆகிஞ்சந்யமும் (தன்னைக் காப்பாற்றிக் கொள்வதற்குத் தகுதியான சாதனங்கள் ஒன்றுந் தன்னிடத்தில் இருக்கப் பெறாமை). அநந்யகதித்வமும் (எம்பெருமானைத் தவிர்த்து வேறு எவரையும், எவற்றையும், தஞ்சமாகக் கொள்ளாமை) உடையராய், ஈசுவரன் திருவடிகளே உபாயமும் உபேயமும் (பேறு) என புத்தி பண்ணி, நிர்ப்பரராய், ஆத்ம குணங்கள் மூன்றும் கைவரப்பெற்று வாழும் சேம்பரான பாக்கியவான்களே பிரபன்னர்கள்.

8. **தக்கநெறி :** (264 265) தகுதியான-பொருத்தமான வழி. பிரபத்தி முதலாக உள்ள வழிகள் (உபாயம்). பிரபன்னன் ஆவதற்குப் பற்ற வேண்டிய வழி பிரபத்தி (நன்றாகப் பற்றுதல்) மார்க்கம் (சரணாகதிவழி). அந்த வழியைக் காட்டித் தருபவர். புருஷகாரம் செய்பவர்-சேர்ப்பவர் நல்லாசிரியர், அவர் ஆத்ம சொரூபத்துக்குச் சொன்ன மூன்று குணங்களையும் உடையவராய் இருப்பவர். ஆசார்யர், பரமாசார்யர் என்ற வரிசை எம்பெருமான் அளவும் மேல் நோக்கிச் செல்லும்.

எம்பெருமானே முதலாசார்யன். பதரிகாசிரமத்தில் தானே நர நாரயணரென்ற இரண்டுருவில் சிஷ்யனும் ஆசார்யனுமாக நின்று, உயிர்கள் தன்னை அறிந்து அடைந்து உய்வதற்காகப் பெரிய திருமந்திரத்தை—ஓம் நமோ நாராயணாய : என்பதை வெளியிட்டருளினான்.

பின்னர், அவனே ஸ்ரீ வைகுண்டத்தில் திருமந்திரத்தின் பொருள் விளக்கமான துவய மந்திரத்தை,

ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே|
ஸ்ரீமதே நாராயணாய நம;||

என்பதை ஜீவகோடிகளில் முதலாமவளும், உலகமாதாவும், ஆத்ம சொரூபம் பரிபூரணமாக உடையவளுமான பெரிய பிராட்டிக்கு அருளினான்.

**புருஷகாரம் :** (பா. 171, 176, 184) தாயாம் தன்மையால் வந்த வாத்சல்யத்தின் மிகுதியால், பாவமே செய்து பிறப்பெற்ற மக்கள், சர்வேசுவரனைப் பற்றி உய்தி பெற வேண்டுமென்ற பெருங்கருணையால், அம்மந்திரத்தை விஷ்வக்சேனருக்கு (சேனை முதலியார்) உபதேசித்து அவ்வழியாக உலகுக்கு வழங்கினாள்

இம்மகாலட்சுமி. இவளுடைய அதிஷ்டான சம்பந்தத் தாலேயே மற்றைய பிராட்டிமார்களுக்கும், நித்ய சூரிகளுக்கும், ஆசார்யர்களுக்கும் புருஷகாரத் தன்மை உளதாகிறது என்பர். "நப்பின்னை நங்காய் திருவே துயிலெழாய்" (பா 42) என்னும் திருப்பாவை-20 மற்றைப் பிராட்டிமாரும் திருமகள் அம்சமே என்பதனை நினைவூட்ட வல்லதாம்.

**விஷ்வக்சேனர்:** லீலாவிபூதியான இந்நிலவுலகில் நம்மாழ்வாருக்கு உபதேசிக்க, நம்மாழ்வார் - மதுரகவிகளுக்கும் நாதமுனிகளுக்கும் அருள, நாதமுனி, உய்யக்கொண்டார், மணக்கால் நம்பி, ஆளவந்தார், பெரிய நம்பி, உடையவர் முதலான பேரருளாளர்கள் வழியாக இவ்வுலகம் இப் பேற்றைப் பெற்றது.

**ஸ்ரீதேவி புருஷகார பூதை:** எனப்படுகிறாள், இறைவனையும். சேதனனையும் புருஷனாகச் (பூரணனாகச்) செய்பவள் என்பது பொருள். ஈசுவரன் விஷயத்தில் பண்ணும் புருஷகாரமாவது சேதனர்கள் செய்த கர்மங்களைப் பார்த்து, இவர்களைப் பாபயோநிகளில் தள்ளுவேன், தண்டித்தே தீருவேன் என்று அவன் சீற்றங்கொள்ளும் போது அந்தச் சீற்றத்தையும். அதற்குக் காரணமாய் நிற்கும் அவனது தடைபடாத சுதந்தரத்தையும் தலைசாயப் பண்ணுவது. அவனிடத்திலுள்ள தயை வாத்சல்யம் முதலான குணங்களைப் பிரகாசிக்கச் செய்வது. அவனுக்கும் சேதனர்களுக்கும் உள்ள ஒழிக்க முடியாத உறவை (சம்பந்தத்தையும்) அவன் கடமையையும் நினைவூட்டி, அருள் பாவித்து அவர்களைக் காக்கும்படி பண்ணுவது.

சேதனன் விஷயத்தில் புருஷகாரமாவது, இறைவன் தனது அருளால் சேதனரைப் பெற நினைக்கும் போது, அவர்கள், தங்கள் பாப வாசனையால் விலகிப் போகாமல் உபதேசங்களால் தனது தாயாம் தன்மையால் திருத்தி, இசையச் செய்கிறாள். இறைவன் முன்னிலையில் செல்லுமவனாகச் செய்து இறைவனுக்கு உகப்பைப் பண்ணுகை.

இவைகளைச் செய்வதற்காகவே, இறைவனை இறையும் (கண்ணிமைப்பொழுதும்) விட்டகலாது, அவன் வலமார்பினில் நித்யவாசம் செய்து கொண்டும், அவன் திருவவதாரம் செய்யும் போதெல்லாம் அவனை விடாமல் தொடர்ந்து நாட்டில் பிறந்து படாதன பட்டும், தன் அழகாலும், அவன் பத்தினியாம் துணையாம் தன்மையாலும், அவன் மயங்கித் தான் சொன்னதை எல்லாம் செய்தே தீரும்படி எம்பெருமானுக்கு இனியளாய் இருந்து வருகிறாள் என்பர் பெரியோர்.

பெரிய பிராட்டியரர் சீதாப் பிராட்டியாய் இராமாவதாரத்தில் ஆவதரித்தபோது தமது எல்லாக் குணங்களையும் வெளிப்படுத்தி உள்ளாள். அவள் உயிர்களிடத்தில் கொண்டுள்ள அருள்-கருணை-தயை அளவில்லாதது. நல்லவர் தீயவர் என்று அவள் நினைப்பது இல்லை. எல்லோரும் தன் மக்கள் என்பதை மறப்பதும் இல்லை. தன்னிடத்துப் பெருங் குற்றம் புரிந்த காக்கையின் உயிரைக் காத்த விதம் அவள் அருளே உருவானவள் என்பதைக் காட்டும்.

சீதாப்பிராட்டி இராமபிரானை விட்டு மூன்றுமுறை பிரிந்ததாகவும் அம்மூன்று பிரிவும் பிராட்டியின் பெருங்குணங்களை வெளிப்படுத்தவே என்றும் பெரியோர் புலப்படுத்துவர். இராவணன் பிரித்தான் என்ற வியாஜத்தாலே முதலில் பெருமாளைப் பிரிந்தது தனது கருணையை வெளியிடுக்கைக்காக. 1. தெய்வப் பெண்கள் சிறையை விடுவிக்கைக்காகப் பத்து மாதம் சிறையிருந்தாள். 2. தன்னைப் பெருமாளிடமிருந்து பிரித்த பொல்லா அரக்கனுக்கு உபதேசம் செய்து திருத்த முயன்றாள். அவன் திருந்தாமைக்குக் காரணம் அவள் உபதேசக் குறையன்று; அவன் செய்த பாபத்தின் மிகுதியே என்பர். 3. திரிசடை கண்ட கனவைக்கேட்டு அஞ்சின அரக்கியர்கள் அச்சத்தைப் போக்கினாள். 4. தன்னைக் கொடுமைப் படுத்திய அரக்கியர்களைத் திருவடி (அனுமார்) சித்திரவதை செய்யக் காட்டித் தரவேண்டும் என்ன, அவரோடே மன்றாடி "(i) வானரோத்தம! இராச சேவையில் அமர்ந்தவர்களும், அரசன் கட்டளையினால் இட்ட காரியத்தைச் செய்கின்றவர்களும், அரசன் காரியத்தைச் செய்யாவிடின் தண்டிக்கப்படுபவர்களாதலால் இந்த வேலைக்காரிகளிடத்தில் எவன் சீற்றங் கொள்வான்? (ii) இவர்கள் கொலையுண்பதைக் காண்பதற்கு மனம் பொறேன் ஆதலால் நான் இவர்கள் செய்த குற்றங்களைப் பொறுக்கிறேன்" என்று பிறர் நோவுகண்டு பொறுத்திருக்கத் தக்க நெஞ்சு உரம் தனக்கு இல்லாமையைத் தெரிவித்தாள். (iii) பெரியவரான உம்மாலே அவர்கள் அருள் செய்யத் தக்கவர்கள்; குற்றம் செய்யாதவர் எவரும் உலகில் இல்லை; என்று உபதேசித்தும் தனது கிருபையை வெளியிட்டாள்.

2. நடுவில் பிரிந்தது பாரதந்திரியத்தை வெளியிடுவதற்கு (அதா) கங்கைக் கரையில் சீதாப்பிராட்டி இளைய பெருமாளிடம் சொல்லியது "பெருமாள் நினைவைப் பின்பற்றுவது—(கணவனுடைய) எண்ணத்தை சதா அனுசரிப்பதே நமக்குச் சொரூபம்" என்பதாம். பாரதந்திரியப் புத்தியால் திருவயிறு வாய்த்திருந்த காலத்திலும் கணவன் இராமபிரான் விரும்பியபடியே அவரைப்

பிரிந்து காட்டிற்குச் சென்று குழந்தைகளைப் பெற்றுப் பல்லாண்டுகள் முனிவராசிரமத்தில் தங்கியிருந்தது.

3. இறுதியில் பிரிந்தது அநந்யார்ஹத்வத்தை வெளியிடுவதற்கு (அதா) பெருமாளுக்கன்றித் தான் தரியாமை. ஸ்ரீவால்மீகி பகவானை முன்னிட்டுக் கொண்டு. காவியுடை உடுத்தியிருந்த சீதாப்பிராட்டி எல்லோர் முன்னிலையிலும் தனது குற்றமற்ற நிலையைப் புலப்படுத்திப் பின் பூமாதேவியை வேண்ட அவள் தனது இருகரங்களாலும் ஏந்திக் கொள்ள பாதாளத்தில் மறைந்தது.

எஞ்ஞான்றும் பிரிவில்லாதவளாய், கருமங்களுக்குக் கட்டுப் படாமல் இருக்கிற பிராட்டி, கருமங்களுக்குக் கட்டுப்பட்டவர்களைப் போன்று பிரிவைஏற்றது, மக்கள் பக்கல் அருள் செய்தற்குக் காரணமான பரம கிருபையையும், சர்வேசுவரன் பக்கல் அணுகி வசிகரிக்கைக்குக் காரணமான பாரதந்திரியத்தையும் (அவன் விரும்புகிறபடி நடத்தல்) அநந்யார்கத்வத்தையும் அவன் இன்றித் தரியாமை) தானே வெளிப்படுத்தியது தன்னைப் புருஷகாரமாகப் பற்றினார்க்கு இறைவன்மேல் விருப்பத்தையும் நம்பிக்கையையும் பிறப்பித்தற்காக என்பர் பூர்வாசிரியர்கள்.

4. **தடையாகும் ஊழ்வினை :** இது சொரூபவிரோதி, உபாய விரோதி, பிராப்பிய விரோதி என மூவகைப்படும். இவற்றைக் கழிக்க வேண்டும். 1. சொருப விரோதி கழிகையாவது தேகமே ஆத்மா, தான் சுதந்திரன், நாராயணனுக்கு அன்றிப் பிறர்க்கு அடிமையாய் இருத்தல் முதலியன விட்டு, "யானே நீ, என்னுடைமையும் நீயே" (திருவா. 2-9-9231) என்றிருக்கை. 2. உபாய விரோதி கழிகையாவது, கர்ம ஞான பக்தி மார்க்கங்களை விட்டு "களைவாய் துன்பம் களையாதொழிவாய் களைகண் மற்றிலேன்" திருவா. 5, 8, 8) (254). என்கிறபடி அவனே உபாய (வழி) என்றிருக்கை 3. பிராப்பிய விரோதி கழிகையாவது, பகவத் பாகவத அபசாரங்களில் இருந்து நீங்கி, "மற்றை நங்காமங்கள் மாற்று "(திருப்பாவை 29) (51) என்றபடி அவனையே பேறாகச் (செல்வமாகக்) கொள்ளுகை,

5. **வாழ்வு :** பேறு, மோட்சம் எனவும் படும். இது அந்தமில் பேரின்பமாகிய முத்திநிலை. இறைவன் தன் அருளே காரணமாகப் பற்றற்ற சேதனனைப் பற்றி, அர்ச்சிராதி மார்க்கத்தாலே பரமபதத்திற்கு எழுந்தருளச் செய்து, ஸ்ரீதேவி பூதேவி நீளாதேவி சமேதனாய் திவ்ய ஆயுத அணிகளோடு எழுந்தருளி இருக்கும் தன்

ஆதியஞ்சோதி உருவைச் சேவிக்கச் செய்து, தன் திருவடிக்கீழ்க் குற்றேவல் கொள்ள, இவனும் நித்ய ஸூரிகளோடே பெருமாளைச் சூழ்ந்திருந்து ஏத்திப் பல்லாண்டுபாடி மகிழ்ந்திருக்கும் இருப்பு, (பா. 217, 245, 280)

**நவ வித சம்பந்த ஞானம் :** இது இறைவனுக்கும் உயிர்களுக்கும் உள்ள உறவு இன்னதென்று அறியும் அறிவு. இது ஒன்பது வகை.

| | | |
|---|---|---|
| 1. | பிதா புத்ரன் (தந்தை—மகன்) | — திருமந்திரத்தில் |
| 2. | ரக்ஷ்ய ரக்ஷகன் காக்கப்படுவது காக்குமவன் | முதல் எழுத்தான அகாரத்தால் |
| 3. | சேஷிசேஷன் (எஜமான்—அடிமை | — தேறுகின்றவை. |
| 4. | பர்த்ரு பார்யா (கணவன்-மனைவி, தலைவன்-தலைவி) | உகாரத்தால் தேறுகின்றது. |
| 5. | ஞாத்ரு ஞேயன் (அறிபவன் - அறியப்படுபவன் | மகாரத்தால் தேறுகின்றது. |
| 6. | ஸ்வ் ஸ்வாமி (ஸ்வம்-சொத்து, ஸ்வாமி சொத்துக்கு உரியவன். சொத்தை அவன் விருப்பப்படி ஆளலாம்). | நமப்பதத்தில் தேறுகின்றது). பாரதந்திரியம் |
| 7. | சரீர சரீரி (உடல்-உடலை உடையவன்) | நார பதத்தால் தேறுகிறது. |
| 8. | ஆதார ஆதேயம் (தாங்குகிறவன்-தாங்கப்படும் பொருள்) | அயன பதத்தாலே தேறுகிறது. |
| 9. | போக்த்ரு போக்யம்(இன்பத்தை நுகர்பவன்—இன்பப்பொருள்) | ஆய பதத்தால் தேறுகிறது. |

இந்த வகையான உறவை அறிந்த பின்னேதான் தாங்கள் பிறந்ததாகப் பெரியோர் கருதினர். இதனை "அன்று நான் பிறந்திலேன், பிறந்தபின் மறந்திலேன்" (திருச்சந்தவிருத்தம் - 64 பா. 129) என்றருளுவர் திருமழிசை ஆழ்வார். இந்த உறவை இறைவனாலும் ஒழிக்க இயலாது; நம்மாலும் விடமுடியாது. இந்த உண்மையை மிகவும் அழகாக "உன்தன்னோடு உறவேல் நமக்கு இங்கு ஒழிக்க ஒழியாது "திருப்பாவை 28 பா. 50 என்று தாயார் அருளியுள்ளார். நமக்கு—உனக்கும் எங்களுக்கும் என்ற சொல்லாட்சியின் சிறப்பு நினைந்து நினைந்து உருகுவதற்கு உரியது.

**சேஷத்வம்** என்றால் அடிமை. இதுவே உயிர்க்கு இயற்கைத் தன்மையுமாகும், சேஷிக்கு இஷ்ட விநியோகப் படுகைக்கு யோக்யமாய் இருக்கும் தன்மை. பாரதந்திரியம் பரமபுருஷனுடைய அதீன

மாய் இருக்கை யானே நீ என்னுடைமையும் நீயே என்று எல்லாம் எம்பெருமானே என்று அவனிட்ட வழக்காய் இருத்தல். ஆத்மாவின் இந்தப் பாரதந்திரிய ஞானமே ஈசுவரனுக்கு மிக்க மகிழ்ச்சி விளைவிக்கின்றது. இது நமப்பதத்தால் தேறுவது, பாரதந்திரியத்தோடு கூடிய சேஷத்துவமே வேண்டுவதென்பர் ஞானியர்.

**ததீய சேஷத்வம்:** ததீயர் என்றால் எம்பெருமானுக்கு அடியவர்; சேஷத்வம் என்றால் அடிமையாய் இருத்தல்.

"அடியார்க்கு என்னை ஆட்படுத்த விமலன் (பா 74)" என்றும் "அடியனை அளியன் என்றருளி உன் அடியார்க்கு ஆட்படுத்தாய் (பா. 22)"; என்றும் 'தனிமாத் தெய்வத்து அடியவர்க்கு இனிநாம் ஆளாகவே இசையுங்கொல்"; என்றும் ஆழ்வார்கள் பலரும் கூறுவதாலும், "நின்திருஎட்டெழுத்தும் கற்று நான் உற்றதும் உன்னடியார்க்கு அடிமை [பா. 154)"; என்று திருமங்கை ஆழ்வார் அருளியுள்ளதாலும், அடிமை என்பது எம்பெருமான் அடியார் அளவும் ஆனால்தான் பூர்த்திபெறும் என்பர் ஞானியர்.

**ரகசியங்கள்:** நிறைமொழிமாந்தர் ஆணையிற்கிளந்த. "மறைமொழிதானே மந்திரம் என்ப" என்று கூறும் தொல்காப்பியம். பொருள்கள் எழுத்துக்களில் அடங்கியுள்ளன. எழுத்துக்கள் மந்திரங்கள் ஆகின்றன. சர்வேசுவரன் சகலவேத சரத்திர தாத்பரியங்களையும் சேதனர்கள் சுருக்கமாக அறிந்து அநுஷ்டிக்கும் வண்ணம் மூன்று ரகசியங்களை (ரகஷ்யத்ரயம்) வெளியிட்டருளினான். அவை சொரூபம், உபாயம், புருஷார்த்தம் என்பவைகளின் உண்மையான தன்மைகளைத் தெளிவாக விளக்கும். அவை திருமந்திரம், த்வயம், சரமசுலோகம் எனப்படும். பலபொருள்கள் (தாத்பரியங்கள்) சிலசொல்களிலே (மொழிகளிலே) மறைவாக வைக்கப்பட்டுள்ளதால் மறைமொழி—ரகசியம் எனப்பட்டது.

**திருமந்திரம்:** எட்டெழுத்தால் ஆனது. திரு சிறப்பைக் குறிப்பது. இது பெரிய திருமந்திரம், அஷ்டாக்ஷரம் எனவும் வழங்கும். ஓம் நமோ நாராயணாய என்பது அந்த எட்டெழுத்துகள். "நின் திரு எட்டெழுத்தும் கற்று" என்பது ஸ்ரீமந்நாராயணனாலேயே அம்மகா மந்திரத்தை உபதேசிக்கப்பெற்ற திருமங்கையாழ்வார் திருவாக்கு. பகவந் மந்திரங்கள் எல்லாவற்றிலும் இதுவே சிறந்தது என்பதனைத் தெரிவிக்கும் இதிலுள்ள 'திரு' என்னும் சொல், சகலவேத சாரமானது. அறியவேண்டிய அர்த்தம் எல்லாம் இதுக்குள்ளே உண்டு. சொல்லும் இரமமொழியச் சொன்னாலும் தன் சொருபம்கெட நில்லாது. "குலந்தரும் செல்வம் தந்திடும் (பா. 141-142)"; என்கிறபடியே இது

எல்லா நன்மைகளையும் அளிக்கும். எட்டிழையாய் மூன்று சரடாய் (மூன்றுபதம்) இருக்கும் இந்தத் திருமந்திரமாகிற மங்கல்ய சூத்திரம். "எம்பெருமானுக்கே உரியேனான நான் எனக்கும் பிறர்க்கும் உரியேனன்றிக்கே ஆகவேணும். சர்வசேஷியான நாராயணனுக்கே எல்லா அடிமைகளும் செய்யப் பெறுவேன் ஆக வேணும்" என்று தெரிவிக்கிறது.

**த்வயம்**: ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே ஸ்ரீமதே நாராயணாய நம: || என்று இரண்டு வாக்கியங் களை உடைய தாலகையாலே இதற்குத் துவயம் என்றுதிருநாம மாயிற்று. மந்திர ரத்தினம், சரணாகதி என்று வழங்குவதும் இதுவே. (நம்மாழ்வார் அருளிய திருவாய் மொழியை துவயம் என்பர்)

இதுவே பிரபந்நர் அனைவர்க்கும் நித்தியம்—எப்பொழுதும் அனுசந்திக்கப் படுவதாய் இருப்பது.

பூர்வ (முன்) வாக்கியம் உபாய பரம். உத்தர (பின்) வாக்கியம் உபேய பரம். முதற்கூற்றால் பெரிய பிராட்டியாரை (ஸ்ரீயை) முன்னிட்டு ஈசுவரன் திருவடிகளை உபாயமாகப் பற்றுகிறது. பின் கூற்றால் அச்சேர்த்தியிலே அடிமையை இரக்கிறது.

இங்குத் திருவாய்மொழி அவதாரிகை நோக்கத் தக்கது. 'நம் ஆசார்யர்கள் இரகசியத்தில் இரண்டு பதங்களாலும் அருளிச் செய்துகொண்டு செல்லும் பொருளுக்கு அடி இவ்வாழ் வாரே—(நம்மாழ்வார்) என்பது போதரும். இறைவனைப் பற்று கின்ற காலத்தில் "மலர்மகள் விரும்பும் நம் அரும்பெறல் அடிகள் என்று தொடங்கி, போகவேளையில் "கோலமலர்ப் பாவைக்கு அன்பாகிய என் அன்பே" என்று சொல்லுகையாலே. பற்றும் வேளையோடு போக வேளையோடு வேற்றுமையற ஒரு மிதுனமே — (அம்மையும் அப்பனுமே சேர்ந்தது) உத்தேசியம் என்னுமிடம் அருளிச் செய்தாராவர். ஆக, இவ்வகையில் பரம் பொருளின் சொரூபத்தை அறுதியிட்டார்.

"இரகசியம் துவயம் என்னும் மந்திரம். இரண்டு பதங்க ளாலும் என்றது "ஸ்ரீமத்": "ஸ்ரீமதே" என்ற பதங்களை. அருளிச் செய்யும் பொருள் என்றது முதல் பதத்தால் புருஷ காரமும், இரண்டாம் பதத்தால் பிராப்பியமும் (அடையத் தக்கது—பேறு) "நாளும் நம் திருவுடையடிகள் தம் நலங்கழல் வணங்கி" என்ற இடத்திலே புருஷகாரமும், "கோலத் திருமா மகளோடு உன்னைக் கூடாதே" என்ற இடத்தில் கூடுதல் என்ற பிராப்பியமும் காண்க."

"பெரிய பிராட்டி (மகாலட்சுமி) யாரையும், பெருமானை யும், இவர்களுக்குப் பிரிவில்லாமையையும், பெருமானுடைய பொருளையும் (உயிர்களையும்), அருள் சுரக்கும் திருவடிகளையும், திருவடிகள் சரணாம்படியையும், அரணாந்திருவடிகளை அடையும் படியையும், அடைந்தார் அனுபவத்தையும், அருளுடையவன் ஆக்கத்தையும், அனுபவத்தில் உகப்பையும், அனுபவத்தில் தன்னலங் கருதலாகிய அழுக்கறுக்கையையும் சொல்லுகிறது."

"ஸ்ரீமானான நாராயணன் திருவடிகளில், களையற்ற நித்ய கைங்கரியம் பெறுகைக்கு, ஸ்ரீமானான அவன் திருவடிகள் இரண்டையுமே சரணாகப் பற்றுகிறேன்" என்பதே துவயத்தின் கருத்து.

**பெரியநம்பி:** உடையவருக்குச் சொன்னது. "மந்திரங் களுக்குள் தலை சிறந்தது; மங்கலங்களை (நன்மைகளை) விளைப்பது; வேதாந்தங்களின் சாரமாய்ப் பழமையானது; எல்லாப் பாபங் களையும் போக்குவது; ஐஸ்வர்யங்களைத் தரவல்லது; மக்களை வசப்படுத்துவது; பிறவிப் பெருங்கடலைத் திண்ணம் நீந்தச் செய்வது துவயம்"

**உடையவர்:** தம் அந்திம தசையில் அருளியது. "சகல வேதங்களிலும், சகல சாத்திரங்களிலும், சகலமான ஆழ்வார் கள் திவ்வியப் பிரபந்தங்களிலும் பார்த்தவிடத்தில், ஒரு அதிகாரிக்கு, துவயமொழியப் புருஷார்த்தமில்லை; ஆசார்ய அபிமானமொழிய மோட்சோபாயமில்லை; பாகவத அபசார மொழிய மோட்ச விரோதியில்லை" (வார்த்தாமாலை).

**நஞ்சீயர்:** தம் அந்திம தசையில், துவய மந்திரம் தவிர வேறு மந்திரங்கள் சிவ பஞ்சாட்சர சமமாகும்" (ஏற்கத் தக்கவை யல்ல) என்றருளினார்.

**நம்பிள்ளை:** திருமந்திரம்என்னாகும் என்றார்க்கு "அது துவயார்த்தத்தின் சுருக்கமாகையாலே துவயார்த்தம்தான்" என்றார். மேலும், "விடாய்த்தவன் நீரருந்துமாபோலே பகவத் விஷயப் பெருவிடாய் கொண்ட வைஷ்ணவனுக்கு சதா ஜபிக்கத் தக்கதாய் இருப்பது துவயம்" என்றும் அருளினார்.

ஈசுவரனே உபாயம், அவன் திருவடிகளில் குற்றேவலே புருஷார்த்தம் என்னும் பொருளை உணர்த்தும் மிகமிகச் சிறந்த மந்திரமிது.

## சரம சுலோகம்

ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய மாம் ஏகம்சரணம் வ்ரஜ!
அகம் த்வாஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மாசுச: ||

இது பாண்டவர்களுக்கும் துரியோதனாதிகளுக்கும் நடந்த யுத்த களத்திலே, தேர்த் தட்டிலே, கண்ணன் எம்பெருமான் அர்சுனனுக்கு உபதேசித்த கீதையில் 18ம் அத்தியாயத்தில் உள்ளது. கர்மயோகம், ஞானயோகம், பக்தியோகம் முதலான உபாயங்களைக் கேட்டுக் கலக்கம் அடைந்த அர்சுனனுடைய சோகம் நீங்க அருளியது.

"எல்லாத் தர்மங்களையும் துறந்து என்னை (சகலதர்ம மாகவும் உள்ள என்னை) ஒருவனையே சரணமாகப் புத்திபண்ணு; நான் உன்னுடைய தீவினைகள் அனைத்தையும் போக்கி உன்னை விடுவிக்கக் கடவேன்; துயரப்படாதே" என்பதே சரம சுலேகத் தின் பொருள். இந்த உபாயந்தான் மற்ற உபாயங்கள் அனைத் திற்கும் மேம்பட்டதும், கடைசியானதும் என்று தெரிவித்தலால் இதற்குச் சரம சுலோகம் என்று திருநாமம் உண்டாயிற்று.

சொருபத்தை நிச்சயிக்கிறது திருமந்திரம். சொருபத்திற்கு ஏற்ற உபாயத்தை விதிக்கிறது சரமசுலோகம். இந்த இரண்டு அர்த்தத்திலும் ருசி உடையவனுடைய அநுசந்தானமே துவயம்.

திருமந்திரத்தில் ஆத்மாவாலே பேறு என்கிறது. த்வயத்தில் பெரிய பிராட்டி யாராலே பேறு என்கிறது. சரம சுலோகத்தில் ஈசுவரனாலே பேறு என்கிறது.

இரகஷ்ய த்ரயம் எனப்படும் இம்மூன்று மந்திரங்களின் (எண் கூ, கo, கக) பொருட்செறிவை — சிறப்பைத் தெளி வாக விளங்க வைப்பது வேதப் பசுந்தமிழ். "ஓம் நமோ" என்ற பதங்களின் பொருள் திருவிருத்தத்திலும், "நாராயணாய" என்பதன் பொருள் திருவாசிரியத்திலும், சரம சுலோகத்தின் பொருள் பெரிய திருவந்தாதியிலும், துவயத்தின் பொருள் திருவாய்மொழியிலும் மிளிர்கின்ற தன்மையை மிக விரிவாகவும் அழகாகவும் இனிமையாகவும் விளக்கிக் காட்டுகின்றது ஆசார்ய இருதயம்.

**மந்திரமூலம்:** "அகர முதல எழுத்தெல்லாம்" என்கிறது திருக்குறள். சகல சப்தத்திற்கும் காரணம்-மூலம் அகரம். தமி ழெழுத்திற்கே யன்றி வடவெழுத்திற்கும் முதலாதல் நோக்கி எழுத்தெல்லாம் என்றார் என்பது பரிமேலழகர் இதற்குத் தந் துள்ள உரை.

"மூலமாகிய ஒற்றை எழுத்தை" என்கிறார் பெரியாழ்வார். இது மூன்று மாத்திரையாக எழுகிறது-வளர்கிறது. இதனை "மூன்று மாத்திரை உள்ளெழ வாங்கி" என்று மேலும் விவரிக்கின்றார். அதற்கு மேலும், "முற்ற உலகெல்லாம் நீயே யாகி மூன்றெழுத்தாய முதல்வனேயோ" என்று மூன்றெழுத்தாம் முதல்வன் நிலையை விளக்கி அருளுகிறார். அந்த ஒற்றை எழுத்தாய் இருப்பவனும், அதை வெளிப்படுப்பவனும் இறைவன். அதாவது 'அ' ஆகவும், அதன் விரிவான 'ஓம்' எனும் மந்திரமாகவும், அம்ம ன் விரிவான வேதமாகவும், அதன் உள்ளீடாகவும் வியங்குபவன் அவைகளை அருளிய இறைவன்.

"இதில் அகாரம், சகல சப்தத்துக்கும் காரணமாய், நாராயண பதத்துக்குச் சங்கிரகமாய் (சுருக்கமாய) இருக்கையாலே, சகல ஜகத்துக்கும் காரணமாய், சர்வ ரக்ஷகனான எம்பெருமானைச் சொல்லுகிறது" என்று முமுக்ஷுப்படியில் (சூ. 35) பிள்ளைலோகாசாரியர் அருளியுள்ளதைச் சிந்திக்க வேண்டும்.

நிலம், காற்று, தீ, நீர், விண் எனும் ஐம்பூத தத்துவம் போன்று வேதமும் ஒரு தத்துவம். கண்ணுக்குப் புலனாகா கால தத்துவம் போன்றது வேத தத்துவம். வேத தத்துவமாவது நாத தத்துவம்-நாதம்-ஒலி-ஒலி தத்துவம். அந்த ஒலி தத்துவமே தமிழ் மறையாகவும், வடமொழி மறையாகவும் வெளிப்படுகிறது. தமிழ்மறை ஆழ்வார்கள் மூலமாகவும், வடமொழி மறை ரிஷிகளாகிய முனிவர்கள் மூலமாகவும் உலகுக்குக் கிடைத்துள்ளன. இவ்வுண்மையை மிகவும் தெளிவாகத் திருநெடுந்தாண்டகத்தில்

"இந்திரற்கும் பிரமற்கும் முதல்வன் தன்னை
இருநிலம் கால் தீ நீர் விண் பூதமைந்தாய்,
செந்திறத்த தமிழோசை வடசொல்லாகித்
திசை நான்குமாய்த் திங்கள் ஞாயிறாகி"

என்று திருமங்கையாழ்வார் அருளியுள்ளார்.

**திருவாய்மொழி :** செந்திறந்த தமிழோசை தமிழ்மறை. மறையை—வேதத்தை 'வாய்மொழி' என்று வழங்குகிறது பரிபாடல்—என்னும் சங்கச் செய்யுள். இறைவனை 'வாய்மொழி முதல்வன்' என்றும், "மாயா வாய்மொழி உரைதர வலந்து வாய்மொழி ஓடை மலர்ந்த" என்றும் வருகிற பரிபாடல் அடிகளையும், அவற்றின் உரைகளையும் நோக்குக. காலமறியா இந்தப் பழைய சொல்லையே நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் தலை

மையாகக் கருதப்படும் நம்மாழ்வார் அருளிச் செயலுக்கு வழங்கி யுள்ளார் பண்டைத் தமிழர். அதுதான் திருவாய்மொழி.

திருவாய்மொழி—திரு+வாய்மை+மொழி திரு—சிறந்த, வாய்மொழி வேதம்—சிறந்த வேதம். வாய்மை;—உண்மை; எப்பொழுதும் உளதாம் தன்மை. குடிமை என்ற அதிகாரத்தில்,

"நகை ஈகை இன்சொல் இகழாமை நான்கின்
வகை என்ப வாய்மைக் குடிக்கு"

என்ற திருக்குறளின் வாய்மை என்ற சொல்லுக்கு, மாறுபாடில் லாத என்று பரிமேலழகர் பொருள் செய்திருப்பதையும் அறிக. அதனால் திருவாய்மொழி, சிறந்த மாறுபாடில்லாத சொல் என்றும் பொருள்படும். வாய்—வாக்கு, இடம், உண்மை, மூலம், வாயில், மேன்மை முதலிய பலபொருளும் தரும் ஒரு சொல், அதனால் வேத மூலம், வேதத்தின் இடம், வேதத்தின் நுழைவாயில், என்றும் உள்ள உண்மை, முக்காலத்தும் மாறுபடா வாக்கு திருவாய் மொழியாம் திராவிடவேதம் எனவாகும்.

எம்பெருமானுடைய சொரூப, ரூப, குண, சேஷ்டிதங்களைப் திருவிளையாடல்களை) பேதையரும் உள்ளவாறு அறியலாம்படி அறிவிக்கும் செந்தமிழ் வாய்மொழிக்கு, 'அகலகில்லேன் இறையு மென்று அலர்மேல் மங்கை உறைமார்பா' என்றபடி கணப் பொழுதும் நீங்காதிருந்து நமக்கு எம்பெருமானைக் காட்டிக் கொடுக்கும் திருவை (ஸ்ரீ) முன்னிட்டு, திருவாய் மொழி என்று வழங்கிய ஸ்ரீவைஷ்ணவப் பெரியோர்களின் பேரறிவும் ஈடுபாடும் என்னே! என்னே!!

நம்மாழ்வார்க்கு மற்றைய ஆழ்வார்கள் எல்லோரும் அங் கங்கள் என்றாற்போல, நாலாயிரத்தின் மற்றப் பிரபந்தகள் எல் லாம் திருவாய்மொழி வேதத்துக்கு அங்கம் உபாங்கம் என்றனர் பெரியோர். அதனால் அறியவேண்டிய அர்த்தங்கள் (பொருள் கள்) அனைத்தும் இதில் உண்டு என்பதனை எடுத்துக் காட்டியும் உள்ளனர்.

திருவாய் மொழியால் உணர்த்தப்படும் பரம்பொருள்— ஸ்ரீய: பதி—திருமகள்கொழுநன்—ஸ்ரீமந் நாராயணன்—திருமால்,

ஸ்ரீ என்பது திரு என்றும், நாராயணன் என்பது மால் என்றும், ஸ்ரீமந் நாராயணன் என்பது திருமால் என்றும் தமிழில் வழங்குகிறது.

திரு = திருமகள், இலக்குமி, செல்வம், அழகு, அருள், கருணை, நல்வினை, மங்கலமொழி, தெய்வீகம், கண்டாரால் விரும்பப்படும் தன்மை, நிறைவு, பெண், மா, திருகு, (திருகு + அணி = திருகாணி), திருப்பு, திரி மாறுபடுத்து, திரு = குறைவற்ற—திருக்காப்பு—குறைவற்ற ரக்ஷை என்பர்.

திரு = த் + இ = தி. ர் + உ = ரு இகரம் பெண் பால் —த்தி, குறத்தி, இடைச்சி என்பவை காண்க. முதலெழுத்தில் உள்ள இகரம் முதல் தாயாம் பெரிய பிராட்டியைக் குறித்தும் அடுத்த எழுத்தில் உள்ள உகரம், அவள் செய்யும் உதவியை—உபாயத்தை—புருஷகாரத்தைக் குறித்தும் நிற்கும் அழகு எண்ணுதற்குரியது. இறைவனைச் சேதனன்பக்கலிலும், சேதனனை இறைவன் பக்கலிலும் திருப்பும் திரு என்றபடி. உண்டான அமங்களங்கள் போகைக்கும், இல்லாத மங்களங்கள் உண்டாகைக்கும் அருள் புரிபவள் திரு.

மால் = திருமால், மாயோன், கருமை, மேகம், பெருமை, மயக்கம், ஆசை, வேட்கை, விருப்பம், பழமை, காற்று, தொடர்பு, நீட்சி, வலை, வீடு, கொட்டில், வெற்றி, புகர்நிறம், கண்ணேணி, அருகன், சோழன், விஷ்ணுகரந்தை, (ஒருபூண்டு), இன்னும் பலபொருள் தரும்.

மா = தாய் (அம்மா), பெருமை, கருமை, வலிமை, பெரிய, மேன்மை, அழகு, அறிவு, வியப்பு, அளவு, நிலம், வயல், மா(மரம்), மான், விலங்கு, வண்டு, இலக்குமி என்று இன்னும் பல பொருள் தரும்.

ஆல் = ஆலமரம், தழைப்பு, நீர், ஒருவிகுதி, ஓர் உருபு, ஓர் அசைச் சொல், பரவுதல், ஆமெனல், கார்த்திகை மீன், நஞ்சு, அகற்சட்டி என்று இன்னும் பலபொருள் தரும்.

திரு + மால் (மிதுனம்) இவ்விரு சொற்களுக்கும் வழங்கி வந்துள்ள பல்வேறு பொருள்களும் பெருமாட்டி — பிராட்டி. பெருமான்—பிரான் ஆகிய தனிப்பெரு நாயகனான முதற்பெருங் கடவுளுடைய (திருமாலுடைய) சொரூப, ரூப, குணம், செயல்களுள் அடங்குவது காணின் வியப்பினும் வியப்பாம்!

திருமயங்கும் மால்; திருவிடம் மயங்கும் மால் திருமால். "மாலாய்ப் பிறந்த நம்பியை மாலே செய்யும் மணாளனை" என்று கோதைப் பிராட்டி அருளியுள்ளதை இங்கு நினைப்பது.

நெடுமால் என்பது ஓங்கி உலகளந்த உத்தமனை நினைவூட்டு வதோடு, நெஞ்சால் நினைப்பாரிடம்—அவனைக் காணும் வேட்கை உடையாரிடம் நெடுகச் சென்று சேரும் மால் என்பதனையும் தெரிவிக்கும் என்பர் பெரியோர்.

வேதமனைத்துக்கும் வித்தாகும் கோதை தமிழில். "நாரா யணனே நமக்கே பறை தருவான்" என்று நாரசயண பதத்தால் திருப்பாவையைத் தொடங்கி, "ஈரிரண்டு மால்வரைத்தோள், செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலால், எங்கும் திருவருள் பெற்று இன்புறுவர்", என்று திருமால் எனும் செந்திறத்த தமிழோசையால் வாழ்த்தி முடித்துள்ள அழகு நினைக்குந் தொறும் இனிக்கும்; உள்ளம் உருகும்.

தமிழ்மறையின் வழக்கை அறியாதவர், படர்பொருள் முழு வதுமாய், அவை அவைதொறும் உடல்மிசை உயிரெனக் கரந்து எங்கும் பரந்துள்ள பரம்பொருள், அருளே காரணமாக எந்நின்ற யோநியுள்ளும் பிறக்கும் பிறப்பை (அவதாரத்தை) நம்ப மறுப்பர். எல்லா மாகுமவன் மாயப் பிறப்பை ஏற்றல் அருமை யாகுமோ? பிறப்பை ஏற்பவன் இறைவனாவது எங்ஙனம்? என் பாரும், இராம கிருஷ்ணாதி அவதாரங்கள் வடக்கில் நிகழ்ந்தது கொணடு அவ்வவதாரங்கள் பழந்தமிழரால் வணங்கப்படவில்லை என்பாருமாகப் பிறசமயிகள் பலவாறு கூறுவர். அவர்கள் திரு மாலின் முதல் அவதாரமாகக் கருதப்படும் மச்சாவதாரமே (மீனம்) திராவிட தேசத்தில் தான் தோன்றிய தென்பதும், திராவிட தேசத்தரசனாகிய சத்ய விரதன் திருக்கையில் தவழ்ந்து வளர்ந்து, அவனால் இறுதியில் கடலில் விடப்பட்டது என்பதும், அவன் சரணடைந்து வேண்டுதல் செய்ய அவனுக்கு எல்லாத் தத்துவங்களையும் உபதேசித்தது என்பதுமான ஸ்ரீபாகவத புராண வரலாறு அறியார். இது தவிர இராம கிருஷ்ண அவ தாரங்கள் நாவலம் பெரிய தீவு முழுமையும்—ஆட் கொண்டி ருந்தன என்பதனையும் நினையார்.

ஸ்ரீ இராமர், "என்று முள செந்தமிழ் இயம்பி இசை கொண்ட வரும்," தமிழ்மொழிக்கு இலக்கணம் வகுத்தவருமான அகத்திய முனிவரைச் சந்தித்து, வரங்களும் ஆயுதங்களும் பெற்றார் என்கிறது ராமாயணம்.

இவ்வரலாற்றினைச் சேரநாட்டின் அரசர் பெருமானான குலசேகராழ்வார்,

"வலிவணக்கு வரைநெடுந்தோள் விராதைக் கொன்று
வண்தமிழ் மாமுனி கொடுத்த வரிவில் வாங்கி
கலைவணக்கு நோக் கரக்கி மூக்கை நீக்கிக்
கரனோடு தூடணன்றன் உயிரை வாங்கி,
சிலைவணக்கி மான் மரிய எய்தான் தன்னைத்
தில்லைநகர்த் திருச்சித்ர கூடந்தன்னுள்,
தலைவணக்கிக் கைகூப்பி ஏத்த வல்லார்
திரிதலால் தவமுடைத்து இத்தரணி தானே,

என்று பாடி மகிழ்வதாலும் அறியலாம்.

கொல்லேறு எனப்படும் ஏழு முரட்டுக் காளைகளை அடக்கி ஆயர் மடமங்கையான நப்பின்னைப் பிராட்டியாரை மணந்தான் ஸ்ரீகிருஷ்ணன் என்கிறது தமிழ்மறை.

ஸ்ரீராமதூதரான அனுமார் இலங்கையில் அசோகவனத்தில் அரக்கியர் சூழ இருந்த சீதாப்பிராட்டியைச் சந்தித்துப் பேசியபோது, அரக்கியர்களுக்குத் தெரியாமல் இருக்கும் பொருட்டு மதுரபாஷையில் உரையாடினார்கள் என்று ஸ்ரீ வால்மீகி பகவான் குறிப்பிடுவதை எடுத்துக்காட்டி, மதுர பாஷை என்றால் இனிய மொழி என்று பொருள்படுவதால் அப் பெயர் பெற்ற தமிழ்மொழியிலே தான் இவர்கள் பேசியிருப் பார்கள் என்று முதுபெரும் புலவர். ரா. ராகவ ஐயங்கார் சுவாமி தமது 'தமிழ் வரலாறு' என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார். "தமிழ் என்பது இனிமை நீர்மை" என்று நிகண்டும், "தமிழ் தங்கிய சாயலார்" என்று கம்பராமாயணமும் கூறுவது அறியத் தகும். பெரும்புலவர். திருநாரயண ஐயங்கார் சுவாமி எழுதி யுள்ள "வான்மீகியும் தமிழும் என்பதனையும்,வால்மீகி ராமாயணம் பாண்டியர் தலைநகரான மதுரையின் சிறப்பு முதலிய தென் னாட்டுச் செய்திகளைக் குறிப்பிட்டுள்ளதனையும் காணலாம்.

இராவணன் புலஸ்திய மரபினன் (பிரம்ம குலம்); சிவந்த மேனியன்; சிவபெருமானை வழிபட்டவன்; சமஸ்கிருத சாமவேத கீதத்தால் சிவபிரானைத் துதித்து வரம்பெற்றவன். அதற்கு மாறாக இராமன் அரச குடியினன்; கருப்பு நிறத்தவன்; எல்லோ ரிடத்தும் கலந்து பரிமாறினவன். ஸ்ரீ ரங்கநாதரை வழிபட்டவன். இறுதியில் ஸ்ரீ விபீஷணனுக்குத் தான் வழிபட்டுவந்த அந்த அரங்கநாதரை அவன் வழிபாடு செய்து உய்வதற்காக அளித்தவன் என்பவைகளையும் நோக்க வேண்டும்.

**சங்க நூல் பேசுகிறது :** சங்க காலத்திலேயே இராமா யண பாரத நூல்கள் தமிழில் இருந்தன. நமக்குக் கிடைத்துள்ள

சங்கநூல்களுள் மிகப்பழமையானதாகக் கருதப்படுவது புறநானூறு. அதன் முதற்பாட்டே பாரதத்தைக் குறிக்கின்றது. பாண்டவரும் துரியோதனாதியரும் பொருத காலத்து இருதிறத்துப் படைகட்கும் பெருஞ்சோறிட்டு நடுநிலை புரிந்தான் ஒருசேர மன்னன். அச்செயலை,

"அலங்குளைப் புரவி ஐவரொடு சினைஇ
நிலந் தலைக் கொண்ட பொலம்பூந் தும்பை
ஈரைம் பதின்மரும் பொருதுகளத் தொழியப்
பெருஞ் சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்"

என்று பாடுகிறது புறம். அதனால் அந்தத் தமிழ்மன்னன் பெருஞ்சோற்றுதியஞ் சேரலாதன் என்றே அழைக்கப்பட்டனன். இது இம்மையைப் பற்றியது. மறுமையைப் பற்றி மற்றொரு நூலான பரிபாடல் [15]

"நாறு இணர்த் துழாயோன் நல்கின் அல்லதை
ஏறுதல் எளிதோ வீறுபெறு துறக்கம்"

என்று திருத்துழாய் மாலையணிந்த திருமாலே மோட்சம் தர வல்ல பரதெய்வம் என்று பேசுகிறது. இதுபோன்ற செய்திகள் பலப்பல சங்க நூல்களில் உள்ளன. விரிக்கின் பெருகும். பொது மறையாம் திருக்குறளிலும்,

"மடியிலா மன்னவன் எய்தும் அடியளந்தான்
தாஅய தெல்லாம் ஒருங்கு"

என்று திருமால் உலகளந்த செய்தியும்,

"தாம் வீழ்வார் மென்றோள் துயிலின் இனிதுகொல்
தாமரைக் கண்ணான் உலகு"

என்று செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமால் அருளும் வீறு பெறு துறக்கமாம் மோட்ச இன்பமும் பேசப்படுகின்றன.

இறை உணர்வும், சமயப்பிடிப்பும், கலைத்தேர்ச்சியும், தனக்கென முயலா நோன்தாள் பிறர்க்கென முயலும் நோக்கும், புகழெனின் உயிரும் கொடுக்கும் திறலும், மேம்பட்ட பொருளைத் தனித்து நுகராது கூடியிருந்து உண்டு குளிரும் குணமும். யாதும் ஊரே, யாவரும் கேளிர் எனும் பேருள்ளமும், தீதும் நன்றும் பிறர் தர வாரா; நிலைபேறுடைய மன்உயிர் ஆருயிர் முறை வழிப்படும்; இது திறவோர்... அறவோர் காட்சியால் தெளியப் படுவது என்ற மெய்யுணர்வும், பெரியோரை வியக்காமலும் சிறியோரைச் சிறிதும் இகழாமலும், அவர்களும் உயர்வடைய, இன்னாத

உலகத்தில் இனிய காண்பவராய்த் துஞ்சாது உழைக்கும் உயர் பெருங் கொள்கையை உடையவர் தமிழ்மக்கள். இவை எல்லாம் கடைச் சங்க நூல்களின் செய்திகள் என்பதனை நன்றாக நினைவில் கொள்ளுதல் வேண்டும்.

இவற்றிற்கும் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முந்திய இடைச் சங்கம், முதற்சங்கம் அளித்த முதுபெரு நூல்கள் நமக்குக் கிடைத்தில. கிடைக்காமைக்குக் காரணம் பலப்பல. முதற்காரணம் பல ஊழிக் கடல் கோள்களால் தமிழ்நாடும், தமிழ் நூல்களும் அழிந்தன என்பதாம். "பஃறுளி ஆறும் பன்மலை அடுக்கமும், குமரிக்கோடும் கொடுங்கடல் கொள்ள" என்று இந்த வரலாற்று உண்மையைச் சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள் செப்புகின்றார். கடைச்சங்க காலத்தை அடுத்துத் தோன்றிய சிலப்பதிகார இலக்கியத்தில் ஆய்ச்சியர் குரவை என்ற பகுதியில் "தொல் இலங்கைக் கட்டழித்த சேவகன் சீர்கேளாத செவி என்ன செவியே? என்றும், "படர்ந்து ஆரணம் முழங்கப் பஞ்சவர்க்குத் தூது நடந்தானை ஏத்தாத நாவென்ன நாவே, நாராயணா என்னா நாவென்ன நாவே? என்றும் திருமால் புரிந்த சேஷ்டிதங்களை எல்லாம் தேனினும் இனிய தீந்தமிழில் இளங்கோவடிகளும் இவரும் ஒரு ஆழ்வாரோ? என்று எண்ணும்படிப் பாடியுள்ளார். இம்மாபெருங் கவிஞர் இப்படிப் பாட வேண்டுமானால் அவருக்கு முன்னே இவ்வரலாறுகள் தமிழ் மக்களிடையே எவ்வளவு நிலைபெற்றதாய்ப் பழங்கதையாய் இருந்திருக்க வேண்டும்! ஆகவே இவையெல்லாம் நோக்கும்போது அவதார காலத்தும், அதனை அடுத்தும் தமிழிலும் இராமாயண பாரத பாகவத நூல்கள் இருந்திருக்க வேண்டும் என்பது பெறப்படும். இதனை இந்த நூற்றாண்டில் காந்தியடிகள் தோன்றி செயற்கரும் செயல்கள் புரிந்ததை அவர் காலத்திலேயே எல்லா மொழிகளிலும் அவர் வரலாறாக எழுதப் பட்டமை கொண்டு நன்கு அறியலாம்.

மேல் கூறிய வாற்றால் வடமொழி தென்மொழியாகிய இவ் விருமொழி வழக்கும் வரலாற்றுக்கு எட்டாக்கால முதற் கொண்டே நாவலம் பெரிய தீவினில் நிலைபெற்றிருந்தது என்று தெளியலாம். இவ்விரு மொழி மக்களின் நம்பிக்கைகளும், பழக்க வழக்கங்களும், மெய்யுணர்வுகளும், பிறவும் கலந்து ஒரு சமுதாயமாக மலர்ந்தது. அச்சமுதாயத்தைப் பின்வானோர் பல நிலையில் பலபெயரில் வழங்கலாயினர், ஆனால் மொத்தமாக—கூட்டாக இந்து சமயம்—இந்து மதம் என்ற பெயரில் இன்று வழங்குவதாயிற்று.

வடமொழி வேதங்கள் வேள்வி, யாகம், ஹோமம், தவம், அக்னி முதலானவைகளைப் பற்றி மிகுதியாகப் பேசு

கின்றன. பண்டைத் தமிழ் நூல்கள், மரம், நிலம், நிலங்களுக்குரிய தெய்வம், நடுகல், வீர வழிபாடு, உருவ வழிபாடு, முதலியவை களைப் பற்றி மிகுத்துப் பேசுகின்றன.

வருணாசிரம தருமம் காரணமாகப் பிராமணர்களால் வட மொழி வேதங்கள் போற்றிக்காக்கப்பட்டு வந்தன. அது போன்ற ஒருமுறையும் தமிழ்மொழிக்கு வாய்க்காததாலும், நூல்களைப் பாதுகாக்கும் சூழல் இல்லாமையாலும் தமிழ் நூல்கள் மறைந்தன. ஆனால் இவ்விரு மொழிச் சான்றோர்கள் கண்ட மெய்யுணர்வு களின் வளர்ந்த—தெளிந்த நிலையே இன்று வைதிக சமயமாக— இந்து சமயமாக—விசிட்டாத்துவைத தத்துவங்களாக விளங்கு கின்றன. இது சமய வளர்ச்சி வரலாறு; விரிக்கின் பெருகும்.

சிறந்த வரலாற்று ஆசிரியரும், சிந்தனையாளரும், இந்தியத் துணைக் கண்டத்தின் முதல் பிரதமருமான ஜவஹர்லால் நேரு அவர்கள் தமிழ்நாட்டிற்கு வந்தபோதெல்லாம் "இங்கு வந்தால் நான் பழைய பரத கண்டத்தைக் காணும் மகிழ்வுணர்ச்சியைப் பெறுகிறேன்" என்று கூறியது இவ்வுண்மையைக் கருதியே ஆகும். இப்பெரும் தத்துவங்களை விளக்கிய ஆதிசங்கரர், மத்துவர், இராமநுசர் மூவரும் தென்னாட்டினரே என்பது அனைவரும்

வடமொழியில் தத்துவங்கள் பல நூல்களால் விளக்கப்படு கின்றன. ஆயினும் அதே தத்துவங்கள் தென்மொழியில் ஒளிர் வதைத் திவ்வியப் பிரபந்தங்கள் வழி நம் பூர்வாசாரியர்கள் விளக்கிக்காட்டினதை மேலே கண்டோம்; மேலும் சில உண்மை களைக் காண்போம்.

கடவுள், இறைவன், தெய்வம் என்ற சொற்களால் பரம் பொருள் தமிழில்வழங்கப்படுகிறது. கடவுள் என்ற சொல்லமைப்பே விசிட்டாத்துவைதத்தை விளக்கும். கடவுள் = கட + உள்; = கடந்தது, உள்ளது. ஒவ்வொரு பொருளையும் கடந்தது, தனித்து உள்ளது. அப்படிக் கடந்ததானாலும் அவ்வப்பொருளிலும் உள்ளது. அந்தர்யாமியாய் உள்ளது 'க' என்னும் முதலெழுத்தில் அகரம் நாராயணனைச் சுட்டும் அழகும், மூன்றாம் எழுத்தான "உ" "உய்ய உலகு படைத்து உண்ட மணிவயிற்றின்-அவன் திரு உந்தியின்-தாயாராம் தன்மையைச் சுட்டும் அழகும் அறியத் தக்கது. ஆகவே கடவுள் என்கிற சொல் இறைவன் ஒரு மிதுனம் என்ற பொருளைப் புலப்படுத்துவதாயுள்ளது. மேலும் மனமொழி மெய்களைக் கடந்த பரம்பொருள் கடவுள் என்ற பொருளும் தரும்.

**விசிஷ்டாத்வைதம்** என்பது விசிஷ்டஸ்ய + அத்வைதம் என விரியும். விசிஷ்டஸ்ய—உயிர்ப்பொருள், உயிரல்பொருள் களாகிய வஸ்துக்களைச் சரீரமாக உடைய அத்வைதம்— இரண்டல்லாமை. அஃதாவது சேதனா சேதனங்களைத் தனக்குச் சரீரமாக உடைய வஸ்து இரண்டாயில்லை—ஒன்றேயாகும் என்பதாம். ஈசுவரனும் அவனுக்குச் சரீரமாக உள்ள ஆத்மா (உயிர்)வும் - பிரகிருதியும் (இயற்கை) நித்தியமாய் இருக்கும் உள்பொருளாம். இந்த மூன்று பொருள்களின் கூட்டமே உலகு என்பர்.

**இறைவன் :** இறை = தலைமை, முதன்மை, தங்குதல் என்னும் பொருள்படும். "இருள்சேர் இருவினையும் சேரா இறைவன், பொருள் சேர் புகழ்புரிந்தார் மாட்டு"; 'பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார், இறைவனடிசேரா தார்" என்னும் திருக்குறள்களால் இறைவன் என்கிற சொற்சிறப்பை நன்கு உணரலாம். சேதனன் அசேதனம் இரண்டனுள்ளும் தங்குபவன்— உறைபவன் இறைவன் என்பதாம். (பா 173-174)

"மாயோன் மேய காடுறை உலகமும்" என்ற இடத்தும் உயிர், உயிரல்பொருள், தெய்வம் ஆகிய மூன்றன் கூட்டமே உலகு என்பது விளக்கப்பட்டது. உலகு தமிழ்ச் சொல். அது வடமொழி அன்று. அதனை உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க் கினியர் தமது சீவக சிந்தாமணி உரையில் "மூவா முதலா உலகம் ஒரு மூன்றும் ஏத்த" (கடவுள் வாழ்த்து முதற்செய்யுள்) என்பதற்கு உரைவரையுமிடத்தில், "ஆசிரியர் காலம். உலகம் என்றும் பிறாண்டுஞ் சூத்திரம் செய்தலின் அது (உலகு) வட மொழியன்று" என்று உறுதிப்படுத்தினார்.

ஆசிரியர் என்றது தொல்காப்பியனாரை. அவர் சொல்லதி காரத்தில், கிளவி ஆக்கம் ஐம்பத்தேழாம் சூத்திரத்தில்,

"காலம், உலகம், உயிரே, உடம்பே,
பால்வரை தெய்வம், வினையே, பூதம்,
ஞாயிறு, திங்கள், சொல்என வரூஉம்"

என்று தமிழ்ச் சொற்களுக்கே இலக்கணம் வகுக்கின்றாராதலின், அது வடமொழியாகாதென்பது நச்சினார்க்கினியர் முடிவு. அவர் இருமொழிகளையும் கசடறக் கற்றவர் என்பதனை அவர் வரைந் துள்ள உரைநூல்களைக் கற்பார் எளிதில் உணரலாம்.

இவையெல்லாம் பார்க்கும்போது தமிழ்மொழியானது எல்லாத் தத்துவங்களையும் தெளிவாகத் தெரிவித்தது, தெரிவிக்

கின்றது; இனியும் இனிதே தெரிவிக்க வல்லது என்பது புலப்படும். இவ்வுண்மையை நன்கு உறுதிப்படுத்துகிறது ஒரு திருவாய் மொழித் தனியன். இந்தத் தனியனை அருளியவர், வைணவ நெறி விளக்கம் பெறச் சாதிச்செருக்கு, கல்விச்செருக்கு, செல்வச் செருக்காகிய முக்குறும்பாம் குழியைக் கடந்து வாழ்ந்து காட்டினவரும், இராமநுசர் ஸ்ரீபாஷ்யம் அருளுவதற்குப் பலவகையாலும் பெருந்துணையானவரும், ஸ்ரீவைஷ்ணவ தரிசனத்துக்காகத் தமது திருக்கண்களையே கொடுத்த வள்ளலாரும், மொழியைக் கடக்கும் பெரும்புகழாளருமான நம் கூரத்தாழ்வானின் திருக்குமாரரான பட்டர். இராமாநுசருக்குப் பிறகு ஸ்ரீவைஷ்ணவ தர்மத்தைக் காத்து, பலரையும் திருத்திப் பணிகொண்டு அதில் சேர்த்து வளர்த்து வாழ்ந்த பட்டர் திருவாக்கு—தனியன் வருமாறு.

"மிக்க இறைநிலையும் மெய்யாம் உயிர்நிலையும்,
தக்க நெறியும், தடையாகித்—தொக்கியலும்
ஊழ்வினையும், வாழ்வினையும், ஓதும் குருகையர்கோன்,
யாழினிசை வேதத் தியல்"

இதில் "அர்த்த பஞ்சகம்" அழகு தமிழிலே மிக எளிதாக விளங்குவதைக் காணலாம்.

குருகையர்கோன் யாழினிசை வேதம் எவ்வாறு பிறந்தது? உயர்வற உயர்நலம் உடையவன் ஆழ்வாருக்கு மயர்வு அறமதி நலம் அருளியதனால் பிறந்தது. அது எவ்வாறு பிறந்ததென்பதனை அவரே பத்துப் பாசுரங்களில் மிகவிரிவாக வெளியிடுகின்றார் (திருவாய்மொழி 7ம் பத்து 9ம் திருமொழி முழுதும்) அவைகளைக் காண்போம்.

"எற்றைக்கும் என்னை உய்யக்கொண்டு போகிய
அற்றைக்கு அன்று என்னைத் தன்னாக்கி, என்னால் தன்னை
இன் தமிழ் பாடிய ஈசனை ஆதியாய்
நின்ற என்சோதியை, என்சொல்லி நிற்பனோ?"

"என் சொல்லால் யான்சொன்ன இன்கவி என்பித்து,
தன் சொல்லால் தான்தன்னைக் கீர்த்தித்த மாயன்"

"ஆம் முதல்வன் இவன் என்று தன்தேற்றி, என்
நா முதல் வந்து புகுந்து, நல் இன் கவி
தூ முதல் பத்தர்க்குத் தான் தன்னைச் சொன்ன என்
வாய்முதல் அப்பனை என்று மறப்பனோ?"

"என்னாகியே, தப்புதலின்றித் தனைக்கவி தான்சொல்லி"

சீர்கண்டு கொண்டு திருந்துநல் இன் கவி
நேர்பட யான்சொல்லும் நீர்மை இலாமையில்,
ஏர்விலா என்னைத் தன்னாக்கி என்னால் தன்னை,
பார்பர இன்கவி பாடும் பரமரே"

"என்னால் தன்னை வன்கவி பாடும் என் வைகுந்த நாதனே"

"வைகுந்த நாதன் என்வல்வினை மாய்ந்து அறச்,
செய் குந்தன் தன்னை என்னாக்கி என்னால் தன்னை,
வைகுந்தனாகப் புகழ வண்தீங் கவி,
செய்குந்தன் தன்னை எந்நாள் சிந்தித்து ஆர்வனோ?"

திறத்துக்கே துப்புரவாம் திருமாலின் சீர்,
இறப்பு எதிர்காலம் பருகிலும் ஆர்வனோ?
மறப்பிலா என்னைத் தன்னாக்கி என்னால் தன்னை
உறப்பல இன்கவி சொன்ன உதவிக்கே."

"உதவிக் கைம்மாறு என் உயிர் என்ன, உற்று எண்ணில்,
அதுவும் மற்று ஆங்கவன் தன்னது; என்னால் தன்னைப்
பதவிய இன்கவி பாடிய அப்பனுக்கு,
எதுவும் ஒன்றும் இல்லை செய்வது—இங்கும் அங்கே"

என்று இவற்றால் நம்மாழ்வார் தமிழ்மறையைத் தாம்செய்ய வில்லை என்றும், பொருத்தமிலா என்னைத் தானாக ஆக்கிக் கொண்டு வாய் முதலப்பனான (வாய்மொழி—வேதம்—வேத முதல்வன்) வைகுந்தநாதன்றான் தன்னைப் பற்றிச் சொல்லிக் கீர்த்தித்து, அவன் புகழைப்பாடும் வண் தீங்கவியை (கொடை வளமுடைய இனிய பாசுரம்) அவனே செய்வித்துக் கொண் டனன். நான் அவனுக்குக் கருவியானதால் அவன் திருமாலாம் சீர்மையை அறிந்தேன். அச்சீர்மையை (சுவாமித்வம் சௌசீல்யம், சௌலப்பியம் ஞான சக்திகள் முதலியன) முக் காலத்திலும் பருகினாலும் உள்ளம் நிறைவு பெறவில்லை. அப்படி அறியச்செய்த அப்பனுக்குக் கைம்மாறாக என் உயிரை அளிக்க லாம் என்று எண்ணினேன். ஆனால் சிறிது ஊன்றி எண்ணின் போது அவ்வுயிரும் அவனது தானே என்ற உண்மை புலப்பட்டது. அவனது லீலா விபூதியான இங்கும், நித்ய விபூதியான வைகுந் தத்தும், எங்கும் நிறைந்துள்ள அவனுக்கு என்னால் செய்யக் கூடியது எதுவும் ஒன்றும் இல்லையே" என்று ஏங்கி; எங்ஙனே சொல்லினும் இன்பம் பயக்கும் பாசுரங்களை அருளியுள்ளார் ஆழ்வார்.

மேலும் தெளிவாக ஒரு பாசுரம் அருளுகிறார் (திருவா. 10.6.4)

"என்னெஞ்சத்து உள்ளிருந்து இங்கு இருந்தமிழ் நூலிவை
மொழிந்து
வன்னெஞ்சத்து இரணியனை மார்விடந்த வாட்டாற்றான்,
மன் அஞ்சப் பாரதத்துப் பாண்டவர்க்காய்ப் படை தொட்டான்
நன்னெஞ்சே நம்பெருமான் நமக்கு அருள்தான் செய்வானே"

தூணில் அந்தர்யாமியாய் இருந்து இரணியனை மார்விடந்தவன் பாண்டவர்க்காகப் பாரதத்தில் படைதொட்டவன் நமக்கு அருளுவதற்காக இங்கு வந்து வாட்டாற்றில் அர்ச்சையிலே இருக்கிறான். அவனே இங்கும் என்நெஞ்சத்து உள்ளிருந்து பெருமை வாய்ந்த தமிழ்நூல்களை மொழிகிறான் என்று அருளு கிறார் ஆழ்வார். வாட்டாறு திவ்விய தேசம் வெளியிடும் குணம் பாரதந்திரியம் என்று ஆசார்ய ஹ்ருதயம் — நான்கு 184ம் சூத்திரம் பேசுவது இங்கு மனங்கொளத்தக்கது. தமிழ்வேதம் பிறக்க நான் பரதந்திரனாக—ஒரு கருவியாய் இருந்தேன் அவ்வளவே! என்கிறார்.

இவ்வளவு விளக்கமாக ஆழ்வார் அருளியிருந்தும் இக் காலத்தில் ஆழ்வார் ருக், யஜுர், அதர்வண, சாமவேதங்களைத் தமிழ் வேதமாக அருளினார் என்று கூறிவருகின்றனர். சமஸ் கிருத வேதங்களுக்கு உயர்வு கற்பிக்கவும், தரவும் இவ்வாறு கூறுகின்றனர். நான்கு சமஸ்கிருத வேதங்களின் மொழி பெயர்ப்பு என்று மறைமுகமாகக் கூறிவருகின்றனர். இவைகள் மொழி பெயர்ப்புகளானால் ஆழ்வார் அதனை மறைப்பானேன்? அவர் கூறியுள்ளவை பொய்யா? பொய்யுரையோ ஸ்ரீ வைஷ்ணவ வைதிகச் சான்றோர் பிரபந்நஜன கூடஸ்தர் என்று கொண்டனர்?

ஆழ்வார் அருள்வாக்கால் அறியப்படுவது வடமொழி மறை களின் மொழிபெயர்ப்பு அன்று அருளிச் செயல்கள் என்பதாம். மொழிபெயர்ப்பு என்று மயங்க வழியுண்டு. "நன்மையால் மிக்க நான்மறையாளர்கள் புன்மையாகக் கருதுவர்" என்று ஆழ்வாரின் சிஷ்யரும் அந்தணருமான மதுரகவியாழ்வார் அருளியுள்ளதால் அதனை அறியலாம். வடமொழி வேதங்களில் காணப்படும் உண்மைகள் ஆழ்வார்கள் அருளிச் செயல்களிலும் காணப்படுவதால் அம்மயக்கம் ஏற்படுகிறது. அப்படிக் கருத லாகாது என்பதற்காகவே எம்பெருமான் இத்தனைப் பாசுரங் களை ஆழ்வார் மூலம் வெளிப்படுத்தினான்.

கொக்கு எது? என்று வினவினால் கொக்கு ஒரு பறவை, வெள்ளையாக இருக்கும் என்ற விடை கிடைக்கும். யானையைப்

பார்த்தது உண்டா? அது எப்படி இருக்கும்? என்றால் யானையைப் பார்த்தவர் யானை ஒரு விலங்கு; மற்ற விலங்கு களுக்கு உள்ளதுபோல் நான்கு கால்களும், ஒரு வாலும் உண்டு. ஆனால் அதற்குத் துதிக்கை என்ற ஒரு தனி உறுப்பும், முறம் போன்ற காதுகளும் சிறப்பாக உள்ளன. பருத்த உருவத்தில் சிறுத்த கண்கள் காட்சியளிக்கின்றன என்று கூறுவர். கொக்கைக் கண்டவரும், யானையைப் பார்த்தவரும்தான் அவற்றின் தன்மைகளைக் கூறமுடியும்.

கொக்கு காக்கை போன்றது; யானை முயல் போன்றது என்று கூறுவாரானால் அவர்கள் அவைகளைப் பார்க்கவில்லை என்பது உறுதி. அவைகளை உள்ளபடிப் பார்த்தவர்கள் எம் மொழியினராயினும், அவரவர் மொழியில், அவரவர் கண்டபடி அன்றோ வெளியிடுவர். அப்போதுதானே அப்பொருள்களின் தன்மை மற்றவர்களுக்குப் புலப்பட்டு அறியத் தக்கதாகும். வெல்லம் எது என்றால் வெல்லம் கருப்பஞ்சாற்றின் கட்டி. இனிக்கும் பொருள் என்பர் அதனை அறிந்தோர். இல்லை வெல்லம் ஒரு பண்டம்; அது கசக்கும் என்று ஒருவர் உரைப்பா ரானால், அவர் வெல்லத்தைப் பற்றி அறியார், சுவைத்ததும் இல்லை என்பது வெளிப்படை.

சாதாரணப் பொருள்களே இவ்வாறு அறியப்படுமானால், எல்லாம் வல்ல—எல்லாம் உணர்ந்த—எங்கும் நிறைந்த பரம் பொருள் அருளே காரணமாகத் தன்னை ஒருவருக்குக் காட்டிக் கொடுத்துத் தன்னைப்பற்றி மற்றைய மக்கள் அறிந்து மேன்மை அடைய, அவரைக்கொண்டு அவர்மொழியில் புலப்படுத்து கிறான் என்றால் அது உள்ளது உள்ளபடியேயன்றோ அங்குத் தோன்றும்?

வேதம் மொழியன்று. வேதம் இறைவனே. வேதமுதல்வன், வேதமயன் (பா. 238) வேத உருவினன் இறைவன் என்ற வழக்கால் அறியலாம். அவனே அதனை வெளியிட்டவன். ரிஷிகள் மூலம் சமஸ்கிருத மொழியில் வெளியிட்டான். ஆழ் வார்கள் மூலம் தமிழ் வடிவில் தன்னை வெளியிட்டருளினான். அதுவே வேதம் தமிழ்செய்த மாறன் என்பதன் பொருளாம். அதனை அருளிச் செயல் என்ற வழக்கே மெய்ப்பிக்கும். வடமொழி மறைகள் தமிழாகச் செய்யப்பட்டன என்று கூறுவது உண்மைக்கு மாறானது; எம்பெருமான் திருநோக்கத்திற்கு ஒவ்வாதது; திராவிட வேதத்தைப் போற்றிப் பரப்பிய ஆசார்ய புருஷர்களின் திரு உள்ளத்திற்கும் ஏலாதது; பாபகரமானது.

இனி, மற்றைய ஆழ்வார்கள் திருவுள்ளங்களை வெளிப்படுத்தும் சில பாசுரங்களும் இங்கு நுகரத் தக்கவை.

"யானே தவம் செய்தேன் ஏழ்பிறப்பும் எப்பொழுதும்,
யானே தவமுடையேன் எம்பெருமான்!—யானே
இருந்தமிழ்நன் மாலை இணை அடிக்கே சொன்னேன்,
பெருந் தமிழன் நல்லேன் பெரிது"

இது பூதத்தாழ்வார் பூரிப்பு.

"கதவுமனம் என்றும் காணலாம் என்றும்,
குதையும் வினையாவி தீர்ந்தேன்—விதையாக
நல்தமிழை வித்திஎன் உள்ளத்தை நீவிளைத்தாய்,
கற்றமொழி யாகிக் கலந்து"

எம்பெருமான் நல்ல தமிழை விதையாகத் தம் உள்ளத்தில் விதைத்துக் கற்றமொழியாகிக் கலந்து உள்ளத்தை விளையச் செய்ததாகத் திருமழிசையாழ்வார் அருளுகிறார்.

செந்திறத்த தமிழோசை வடசொல்லாகி என்று இறைவன் இருமறையாகும் நிலையைத் தெரிவித்து, மேலும் தமிழுள்ளமான தன்னுள்ளத்தை நாடினன் என்பதனை,

"நாடி என்றன் உள்ளங்கொண்ட நாதனென்றும், நான்மறைகள்
தேடி என்றும் காணமாட்டாச் செல்வன் என்றும், சிறைகொள் வண்டு
சேடுலவு பொழில்கொள் நாங்கைத் தேவதேவன் என்றென்றோதி,
பாடகம் சேர் மெல்லடியாள் பார்த்தன்பள்ளி பாடுவாளே"

என்று திருமங்கையாழ்வார் தெரிவிக்கின்றார்.

"மாவினை வாய் பிளந்து உகந்த மாலை வேலை
வண்ணனை என் கண்ணனை, வண்குன்றம் ஏந்தி
ஆவினை அன்று உய்யக்கொண்ட ஆயர் ஏற்றை
அமரர்கள் தன் தலைவனை அந்தமிழின் இன்பப்
பாவினை, அவ் வடமொழியைப் பற்றற்றார்கள்
பயில் அரங்கத்து அரவணையில் பள்ளிகொள்ளும்
கோவினை, நாவுற வழுத்தி என்றன் கைகள்
கொய்ம்மலர் தூய் என்றுகொலே கூப்புநாளே"

என்று அரங்கத்து அரவணையான் அழகிய தமிழில் இன்பந் தரும் பாவாக இலங்குகிறான் என்று இயம்பி வடமொழியைச் சேய்மைச்

சுட்டை இட்டு "அவ்" வடமொழியை என்று சேரநாட்டு அரசர் குலசேகரப் பெருமாள் குறிப்பதும் குறிக்கொள்ளத்தக்கது.

பெரிய நம்பி, திருக்கச்சி நம்பி, திருமலை நம்பி என்று ஞான அனுஷ்டான குணநிறைவுடைய பூரணர்களை நம்பி என்று அழைப்பதும், எம்பெருமானார் உடையவர் இளையாழ்வார் என்பதும், பெரிய உடையார் (ஜடாயு), சிறியதிருவடி (அனுமார்) பெரிய திருவடி (கருடாழ்வார்) சிறிது அவதாரத்திலும், பெரிது மூலத்திலும் தொண்டு பூண்டுள்ளமையைச் சுட்ட வழங்கும் அழகும், பெருமாள், பெருமாட்டி [பிராட்டி], அழகிய மணவாளன், பேரருளாளன், ஆரா அமுதன், கண்ணன் எம் பெருமான், கோதை என்னும் வழக்காறுகளும், ஆழ்வார்கள் அருட்சொற்களுக்குப் பொருள் விரிக்கும் திறமும், வியாக்கியானங்களில் தமிழ், வடமொழியைக் காட்டிலும் மேன்மையானது என்று பலப்பல ஏதுக்கள் காட்டி விளக்கிச் செல்லும் பாங்கும், நாள்தோறும் வாழ்க்கையில் வைணவர்கள் கையாளுவதற்கென வழங்கி வைத்துள்ள செந்தமிழ்ச் சொல்வழக்காறுகளும், பிறவும் நம் பூர்வாசாரியர்கள் தென்மொழியைப் போற்றிக் காத்ததைத் தெள்ளிதின் விளக்கும். இவையெல்லாம் அறிந்தாலன்றோ தமிழ்மக்கள் திருமால் நெறி தம் முந்தையோர் கண்டநெறி, திருமால்தான் வணங்கத்தக்க முதற் பெருங்கடவுள், அவனருளால் தோன்றியவை தமிழ்வேதம், அது காட்டும் வழிதான் பின்பற்ற வேண்டிய வழி என்னும் உறுதி கொள்வர்.

**தொண்டக்குலம் :** தென்னரங்கமான கோயிலிலே இருந்து கொண்டு, தென்மொழியான திராவிடவேத பாஷ்ய பிரவர்த்தனமே வாழ்க்கையாகக் கொண்டிருக்குமவரைத் தென்னாசாரியர் என்று வழங்கியுள்ளனர். அவர்கள் ஆழ்வார்கள் காட்டிக் கொடுத்த தொண்டக் குலத்தை வளர்த்தவர்கள். தொண்டக்குலம் வைணவக் குலம். திருமாலிடம் அன்பு செய்து தொண்டு பூணும்-கைங்கரியம் செய்யும் அடியாரே அக்குலத்தார். அந்த நீக்கமில்லா அடியார் தம் அடியார் அடியார் எம் கோக்கள், அவர்க்கே குடிகளாய்ச் செல்லும் நல்ல கோட்பாடுடையேன் யான் [பா 282] என்றார் நம்மாழ்வார். தொண்டக் குலத்தினர் பண்டைக் குலத்தைத் தவிர்த்து தொண்டக் குலத்தினராக ஆனவர்கள்.

"இருடீகேசன் தனக்குத் தொண்டக் குலத்தில் உள்ளீர்! பண்டைக் குலத்தைத் தவிர்ந்து வந்து அடிதொழுது, ஆயிரம் நாமம் சொல்லி பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு என்மினே [பா 5] என்கிறார் சிறந்த அந்தணவேயர் குலத்துதித்த விட்டு சித்தரான பெரியாழ்வார். தேகசம்பந்தத்தால் வரும் சாதிசம்பந்தத்தை

விட்டுத் தொண்டக் குலத்தினரான பின்னர்தான் இருடீகேசனுக்குப் பல்லாண்டுபாடும் தகுதியுடையராகின்றனர் என்கிறார்.

"தூராத மனக்காதல் தொண்டர் தங்கள் குழாம் குழுமித் திருப்புகழ்கள் பலவும் பாடி" என்கிறார் திருமலையில் "அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்தியங்கும் படிக்காய்க் கிடந்து பவள வாய்க் காண [பா 121] விரும்புகின்ற குலசேகராழ்வார். "வண் பொன்னிப் பேராறுபோல் வரும் கண்ணநீர் கொண்டு அரங்கனார் கோயில் திருமுற்றம் சேறுசெய் தொண்டர் சேவடிச் செழுஞ்சேறு என்சென்னிக்கு அணிவனே [பா. 119] என்று மேலும் அவர் தம் அவாவினை விளம்புகிறார்.

"பழுதிலா ஒழுகலாற்றுப் பல சதுப்பேதி மார்கள்,
இழிகுலத் தவர்களேலும் எம் அடியார்கள் ஆகில்
தொழுமினீர், கொடுமின், கொள்மின் என்று நின்னொடும் ஒக்க
வழிபட அருளினாய் போல் மதிள் திருவரங்கத் தானே"
[திருமாலை-42]

"மதிள் திருவரங்கத்தானே! நீ, பாஞ்சராத்திர ஆகமத்திலே, பிரமன் முதல் உங்கள் அளவும் தொடர்ந்து வருகிற பரம்பரையில் ஒரு குற்றமும் இல்லாதவர்களாயும், நான்கு வேதங்களையும் ஓதினவர்களாயும் உள்ள சதுர்வேதிகளே! [நீங்கள் தான் வணங்கத், தக்கவர், மற்றையோர் வணங்குகிறவர் என்று நீங்கள் பாவிக்க லாகாது] எனக்கு அடிமைப்பட்டவர்களாயிருந்தால் தாழ்ந்த வகுப்பில் பிறந்தார்களேயாகிலும் நீங்கள் [அவர்களைத்] தொழுங்கள், [உங்களிடத்திலுள்ள விசேஷ அர்த்தங்களை அவர்களுக்கு] உபதேசியுங்கள். அவர்களிடத்தில் விசேஷ அர்த்தங்கள் உண்டாகில் கேட்டுக்கொள்ளுங்கள் என்று உபதேசித்ததோடு, எனக்குச் சமமாக அவர்களை ஆராதியுங்கள் என்று உரைத்தருளினாயே," என்று தொண்டரடிப் பொடியாழ்வார் உபதேசிக்கிறார். மேலும், "தொண்டரடிப் பொடி என்னும் அடியனை அளியன் என்றருளி உன்னடியார்க்கு ஆட்படுத்தாய்" என்றும் வேண்டுகிறார்.

"மற்றெல்லாம் பேசிலும் நின் எட்டெழுத்தும் கற்று நான் உற்றதும் உன்னடியார்க்கு அடிமை" [பா. 154] என்கிறார் திருமங்கையாழ்வார்.

"குலம் தாங்கு சாதிகள் நாலிலும் கீழ் இழிந்து, எத்தனை
நலந்தான் இலாத சண்டாள சண்டாளர்கள் ஆகிலும்,

வலந்தாங்கு சக்கரத்து அண்ணல் மணிவண்ணற்கு
ஆளென்று உள்
கலந்தார், அடியார் தம்மடியார் எம் அடிகளே''
[திவா. 3. 7. 9.]

என்று அடியார் யார்? வணங்கத் தக்கவர் யார்? என்பவைகளைத் தெளிவுபடுத்துகிறார் நம்மாழ்வார்.

இதுவரை எடுத்துக்காட்டியவற்றால் குலம், சாதி, இழிவு உயர்வுகளைக் கடந்து நிற்பது தொண்டக் குலமான அடியார் குழு என்பது போதரும். தொண்டக்குல வாழ்க்கையை வாழ்ந்து காட்டியவர்—அனுஷ்டித்துக் காட்டியவர் வைணவச் சான்றோர். ஸ்ரீவைணவ வரலாறு கூறும் குருபரம்பரை வைபவத்தில் தொட்ட தொட்ட இடமெல்லாம் இவ்வுண்மையைக் காணலாம்.

காரிமாறப்பிரான், குருகூர்நம்பி, சடகோபன் எனப்படும் நம்மாழ்வார் நாலாம்வருணத்தினர். இவர் தாம் வைதிக குலத்துக்குப் பதி என்று கூறி வைதிககுலத் தலைவரான ஸ்ரீ ஆளவந்தார் தமது ஸ்தோத்திரரத்தினம் ஐந்தாம் சுலோகமான "மாதா பிதா" என்பதில் முடி தாழ்த்தி வணங்குகிறார்.

நம்மாழ்வாரின் சிஷ்யர் மதுரகவியாழ்வார் அந்தணர். ஆழ்வாரை நோக்கித் தவமிருந்து நோற்று, அவர் அருள்செய்ய நாலாயிரமும் பெற்று நமக்கு வழங்கிய பெருவள்ளல் ஸ்ரீ நாதமுனிகள் அந்தணர். ஆளவந்தாரின் சிஷ்யரும் தாழ்ந்த குலத்தினருமான மாறனேர் நம்பிக்குப் பல தொண்டுகளும், அவருக்குப் புத்திரராக இறுதிச் சடங்கு செய்தவரும் இராமநுசரின் ஆசாரியருமான பெரியநம்பிகள் சிறந்த அந்தணர். ஆளவந்தாரின் மற்றொரு சிஷ்யர் திருக்கச்சி நம்பி வணிக குலத்தினர். வைதிக குலத்துதித்த இராமாநுசர் திருக்கச்சி நம்பியை ஆசிரியராக அடைய எவ்வளவோ முயன்றதும், அவர் உண்டமிச்சிலாவது கிடைக்குமா என்று முயன்றதும், பின்னர் அவர் மூலம் பேரருளாளனிடமிருந்து ஆறுவார்த்தைகள் உபதேசம் பெற்றதும் வரலாறு. "பூமன்னுமாது பொருந்திய மார்பன் புகழ்மலிந்த பாமன்னுமாறன் அடிபணிந்து உயந்தவன். பல்கலையோர் தாம் மன்னவந்த இராமாநுசன்" (பா. 303) என்று இராமாநுச நூற்றந்தாதி முதற் பாசுரமே அவர் ஆழ்வாரிடத்துப் பூண்டிருந்த அடிமையைப் போற்றுகிறது.

வருணாசிரம தருமம் மேலோங்கி நின்ற காலத்திலேயே, தாழ்ந்த குலத்தினருக்குத் "திருக்குலத்தார்" என்று பெயரிட்டு ஸ்ரீவைஷ்ணவர்களாக்கித் திருக்கோயிலில் நுழைந்து வழிபாடு

செய்யும் நிலையையும் உரிமையையும் வழங்கிய வள்ளல் இராமநுசர். உயர்சாதி அந்தணரும், தாழ்ந்தசாதி உறங்காவில்லிதாசர்-பொன்னாச்சியும், கல்விஞானம் மிக்க துற வியரும், ஒன்றும் அறியா ஊமையும் தம்மிடம் ஒக்க உபதேசம் பெறலாம்படி வாழ்ந்துகாட்டி வளர்த்த நெறி—ஸ்ரீ வைணவ சமயம்—இராமாநுச தரிசனம்.

இராமநுசர் தரிசனம் அவருக்கு முன்னோரான பெரியநம்பி, ஆளவந்தார், நாதமுனி, மதுரகவி, லோகசாரங்க மகாமுனி முதலானோர் ஞான அனுஷ்டானங்கள் அடியாகப் பிறந்தது. இவ்விடத்தில் குருபரம்பரை வைபவத்தில் வரும் ஒரு செய்தியை நினைப்பது தகும். அது வருமாறு:

**ஸ்ரீ ஆளவந்தார் அருளுரை :** ஸ்ரீரங்கத்தில் ஆளவந்தார் (ஸ்ரீ நாதமுனிகள் பேரர்) நோய்வாய்ப்பட்டிருந்தார். அச்சமயம் திருக்கோட்டியூர் நம்பியும் பெரிய நம்பியும், திருவரங்கப் பெருமாள் அரையரை முன்னிட்டுக்கொண்டு அவரை அணுகி, 'தஞ்சமாயிருக்கும் அர்த்தத்தை அருள வேண்டும்' என்று கேட்டனர். அதற்கு சுவாமி "கோயிலாழ்வாரே (ஸ்ரீரங்கநாதனே) உங்களுக்கு உயிர்நிலை, உங்களுக்குத் தஞ்சம் என்று புத்திபண்ணிப் போருங்கோள்' என்றும், பெரியபெருமாள் திருவடிகளின் கீழே வீணையும் கையுமாய் சேவித்திருக்கும் திருப்பாணாழ்வார் விக்ரகத்தைப் பாதாதி கேசாந்தமாக சேவித்துக் கொண்டிருங் கோள். மேலும் திருவேங்கடமுடையான் உயிர்நிலை (சரம சுலோகத்திலே அறியப்படுகிற பேற்றுக்கு அவனே உபாயம் என்ற நிலை) அறிந்தவர் குறும்பறுத்த நம்பி (குயவர்). காஞ்சி பேரருளாளரின் உயிர் நிலை (துவயத்தாலே அறியப்படுகிற குற்றேவல்—தொண்டு) என்று அறிந்தவர் திருக்கச்சி நம்பிகள் (வணிகர்—பேரருளாளனுக்கு விசிறி கொண்டு வீசும் திருவாலவட்ட கைங்கரியம் புரிந்தவர்). பெரிய பெருமாள் உயிர்நிலை (திருமந்திரத்தாலே அறியப்படுகிற உற்றதும் உன்னடியார்க்கு அடிமை என்கிறபடி பாகவத சேஷத்வமான நிலை—அடியார்க்கு அடிமையாகும் நிலை) அறிந்தவர் திருப்பாணாழ்வார் (சாதிகள் நாலினும் கீழ் இழிந்த பஞ்ச வர்ணம்) திருப்பாணாழ்வாருடைய உயர்நிலை (தொண்டர் தொண்டர் தொண்டர்தம் அடியனாகிய நிலை) அறிந்தவர் திருவரங்கப் பெருமாளரையர் (அந்தணர்). இவர்கள் நிலையிலே நில்லுங் கோள்! என்று அருளி, அடியேனும் எனக்குப் பேறும், பேற்றைத் தருவதுமாகத் திருப்பாணாழ்வாரின் விக்கிரகத்தையே எண்ணி யிருப்பன்" என்று அருளினார்.

"ஒருவன் பேறும், பேற்றைத் தருவானும் பெருமானே என அடைக்கலம் புகுந்தானானால் (பிரபந்நனானால்) பகவானாலே ஆளப்படுகிற ஆத்மாவைப் பற்றி உத்தம குணங்களுக்காகக் கரைதல் வேண்டாம். எம்பெருமானோடு உள்ள உறவை அறிந்து அவனை அடைக்கலமாக அடைந்தபின், அவனுடைய உடலான ஆத்மாவைப் பற்றி அவனே அக்கறை கொண்டு அவ்வாத்மாவைத் தனதாக்கிக் கொள்வதற்காக ஆத்மகுணங்களை எல்லாம் அவனே ஆக்கித் தருவான். அது போலவே ஊழ்வினையின் பயனாகக் கிடைத்துள்ள அவ்வுடலுக்கு உயிர் தரித்தல் (தாரகம்) வளமடைதல் (போஷகம்) இன்பப் பொருள்களை (போக்யம்) அடைதல் ஆகிய இவை ஊழ்வினையின் படியே கிடைக்குமாதலால் அவ்வுடலுக்காகவும் கவலைப்பட வேண்டுவதில்லை. அதாவது பகவததீநமான ஆத்ம யாத்திரை, கர்மாதீநமான தேகயாத்திரை ஆகிய இரண்டிலும் தனக்கும் அந்வயம் (பங்கு) உண்டு என்று இருந்தானானால் ஆத்ம சமர்ப்பணம் குலைந்து நாத்திகனாய் விடும். ஆகையால், நாராயணனே நமக்கே பறைதருவான் என்கிறபடியே நிர்பரங்களாய் இருக்கையே நமக்குச் சொரூபம்" என்று மேலும் விளக்கி அருளினார் அவ்வந்தண சிரேஷ்டர்.

வருணாசிரம தருமத்தில் பற்றுள்ளவன், நிலைப்பவன் வைணவன் ஆகான். தமிழ்மறையைக் கற்று அதன் உட்பொருள் உணர்ந்து ஒழுகுபவரே வைணவர்—மேலைத் தலைமறையோர். சாதியைப் பின்பற்றினால் வைணவத்வம் சித்திக்காது என்னும் உண்மைகளைப் பற்பல மேற்கோள்களை எடுத்துக் காட்டித் தெளிவுபடுத்துகிறது நம்மாழ்வார் திருவுள்ளத்தை விளக்கத் தோன்றிய "ஆசார்ய ஹ்ருதயம்" எனும் அரும்பெருஞான நூல்.

"அத்யயன ஞான அனுஷ்டானங்களாலே பிராம்மண்யம்
ஆகிறாப்போலே"

"சந்தங்கள் ஆயிரமும் அறியக்கற்று வல்லவரானால்
வைஷ்ணவத்வ சித்தி".

"இந்த உட்பொருள் கற்றுணர்ந்து மேலைத் தலைமறையோர்
ஆகாதாரை அயல் சதுப்பேதிமார் என்று உற்பத்தி
நிருபிக்கும்"

"அஜ்ஞர் ப்ரமிக்கிற வர்ணாச்ரம வித்யா விருத்தங்களை
கர்தப ஜன்மம் ச்வபசாதமம் சில்ப நைபுணம்
பஸ்மாஹுதி சவ விதவா அலங்காரம் என்று கழிப்பார்கள்."

என்பவை முதலான சூர்ணிகைகளை (37, 38, 86) நோக்கி இவ் வுண்மைகளை அறியலாம்.

வைணவ மதம் சாதியற்றது. இக்காலத்திற்கு ஏற்றது. கொள்கையால் எல்லா உயிரும் பொருளும் உலகும் எம்பெருமான் உறைவிடம் என்பது. உயிர்களிடத்துச் செய்யும் அன்பு இறைவனிடத்துச் செலுத்தும் அன்பாகும்; செயலைச் செய்து அதனால் விளையும் பலனைப்பற்றிக் கருதாதிரு என்று கற்பிப்பது. எல்லாம் அவன் விட்டவழி என்று இரு என்னும் சரணாகதி தர்மத்தைக் காட்டிக் கொடுப்பது. இதனினும் எளிதான வழி உலகில் வேறு இல்லை என்று கற்றோரால் கருதப்படும் சிறப்புடையது.

பிரபத்தி மார்க்கம் எனப்படும் இதைப் பின்பற்றக் கால தேச, அதிகாரி, பிரசார, பலன் முதலிய ஒரு நியமும் கிடையாது என்பர். அரசரான தருமபுத்திராதிகளும், பெண்ணான திரௌபதியும், தேவருபத்தை மறைத்து மகாஅபராதத்தைப் பண்ணின காகமும், பிரதிகூலனான பாம்புக் காளியனும், விலங்காகப் பிறந்த அனுகூலனான கஜேந்திர ஆழ்வானும், ராட்சச சாதியனான விபீஷண ஆழ்வானும், சர்வ சரண்யரான ஸ்ரீராமபிரானும், இளையபெருமாளும் முதலான எல்லாரும் சரணம் புகுகையாலே பிரபத்திக்கு இன்னார்தான் அதிகாரி என்ற ஒரு நியதியுமில்லை என்பர் பெரியோர். இறைவனிடம் சரணாகதியைப் பண்ணின ஒருவர் செய்ய வேண்டுவது, அவருக்கு இடப்பட்ட கடமைகளை உலககாரியமாக ஒழுங்காகச் செய்து கொண்டு, நல்லாரோடு கூடியிருத்தல், இறைவன் புகழைக் கேட்டல், பாடல், அவனது திருநாமங்களையும் மந்திரங்களையும் எப்பொழுதும் சொல்லிக் கொண்டு, அவைகள் புலப்படுத்தும் பொருள்களை அனுபவித்துக் கொண்டிருத்தலாம்.

ஞான அனுஷ்டானங்களும் இரக்கமும் அருளும் உடைய ஆசாரியன் கிடைப்பாரானால் பெரும்பேறாகக் கொள்ளலாம்.

"எயிற்றிடை மண்கொண்ட எந்தை இராப்பகல் ஓதுவித்து,
என்னைப் பயிற்றிப் பணி செய்யக் கொண்டான்" என்றும்,

"ஏதங்களாயின எல்லாம் இறங்க லிடுவித்து என்னுள்ளே,
பீதக ஆடைப் பிரானார் பிரமகுருவாகி வந்து, போதில்
கமல வன்நெஞ்சம் புகுந்தும் என்சென்னித் திடரில், பாத
இலச்சினை வைத்தார் பண்டன்று பட்டினம் காப்பே"

என்றும் பெரியாழ்வார் அருளியது கொண்டு இறைவனையே நல்லாசிரியனைக் காட்டித் தருமாறு இறைஞ்சி, ஆழ்வார்கள்

அருளிய திருப்பாசுரங்களையும், திருமந்திரங்களையும், திருநாமங்களையும் அனுசந்திக்க வேண்டும்.

**எங்ஙனே சொல்லினும் இன்பம் பயக்கும்:** உபதேசம் இல்லாமல் ரகசிய மந்திரங்களைச் சொல்லலாகாது என்னும் அச்சம் தேவையற்றது. பெரியோர்கள் அப்படி அச்சுறுத்தவில்லை. திவ்யப் பிரபந்தத் தொடக்கத்திலேயே திருப்பல்லாண்டு பாசுரத்தில் பெரிய திருமந்திரம் "நாடும் நகரமும் நன்கறிய நமோ நாராயணாயவென்று. பா 4 என்றும், "நமோ நாராயணாவென்று நாமம் பல பரவி" (பா. 11) என்றும், "நமோ நாராயணாவென்று, பல்லாண்டும் பரமாத்மாவைச் சூழ்ந்திருந்து ஏத்துவர் பல்லாண்டே" (பா 12) என்றும் பெரியாழ்வார். அருளியுள்ளதையும், பெருமாளாலேயே பெரிய திருமந்திர உபதேசம் பெற்ற திருமங்கையாழ்வார், "வாடினேன் வாடி" என்னும் பதிகத்தில் அஷ்டாக்ஷரத்தின் பெருமையைப் பேசும் பத்துப்பாசுரங்களிலும் 'நாராயணா' என்னும் நாமத்தை நாமெல்லாரும் ஓதி உய்ய வேண்டுமென்பதற்காகவே அருளி உள்ளதையும் நோக்க வேண்டும். துஞ்சும் போது அழைமின் துயர்வரின் நினைமின் துயரிலீர். சொல்லிலும் நன்றாம், நஞ்சு தான் கண்டீர் நம்முடை வினைக்கு நாராயணா என்னும் நாமம்" (பா. 142) என்று அருளியுள்ளதில், சொல்லிலும் நன்றாம் என்பதிலுள்ள சொல்லாற்றல், யார் சொல்லிலும், எப்படிச் சொல்லிலும், எங்குச் சொல்லிலும் இன்பம் பயக்கும், நலம் தரும் என்பதே ஆழ்வார் திருவுள்ளம். 'ஓம்' என்பதன் விரிவே நாராயணா என்பது.

திருப்பாவை இறுதியில் "வங்கக் கடல் கடைந்த மாதவனை" என்னும் திருப்பாசுரத்தில் அப்பிரபந்தத்தைக் கற்றவருக்கு, நோன்பை அநுஷ்டித்துப் பயனைப் பெற்றவரைப் போலவும், அதனை அருளிய ஆண்டாள் போலவும் பிராட்டியாலும், எம்பெருமானாலும் இம்மையிலும் மறுமையிலும் எப்பொழுதும் திருவருள் செய்யப்பெற்று, மகிழ்ந்திருத்தலாகிய பலன் சித்திக்கும் என்ற தாயிற்று என்பது உரை. இப்பிரபந்தத்தைச் சொன்ன மாத்திரத்திலே சொன்னவருக்குப் பலன் சித்திக்குமோ என்ற ஐயப்பாடு சிலருக்குத் தோன்ற, அவர்களுக்கு, "கன்று இழந்த தலைநாகு தோல்கன்றுக்கும் இரங்குமாபோலே, இப்பாசுரம் கொண்டுபுக நமக்கும் பலிக்கும்" என்று பட்டர் அருளிச் செய்வர் என்று வைணவச் சான்றோர் எடுத்துக் காட்டியுள்ளனர். இங்குத் தலைநாகு பிராட்டிக்கும் - பெருமானுக்கும்; கன்று

நோன்பு அனுஷ்டித்தார்; தோல்கன்று திருப்பாவை பாடும் நம் போல்வார்.

இவ்விடத்துத் திருவாய்மொழி முதல் பத்து ஆறாம் திருமொழியின் ஈடு வியாக்கியானத்தையும் அறிதல் நலம் "பரிவதில் ஈசனைப்பாடி" (பா. 61) முதல் "மாதவன் பால் சடகோபன், தீதவமின்றியுரைத்த, ஏதமில் ஆயிரத்திப்பத்து, ஓதவல்லார் பிறவாரே" என்ற பாசுரம் ஈறாகக் கொண்டு "இத்திருவாய்மொழியைக் கற்க வல்லார்கள், உபதேசம் இல்லாமலே சம்சார சம்பந்தம் அற்றுப் பகவானுடைய அனுபவமே யாத்திரையாம் படி இருக்கிறவர்களோடே கூடி அனுபவிக்கப் பெறுவர்களாதலின் "ஓதவல்லார் பிறவார்", என்கிறார். அவன் படியையோ பார்ப்பது; அருகில் இருப்பார் [மாதவன்—மாது] படியையும் பார்க்கவேண்டாவோ? விரோதிகள் கணநேரத்தில் போகும். பிறக்கவேண்டா." என்பது ஈடுதரும் துணிவு.

**வைகுண்ட ஏகாதசி :** கடவுள் தன்மையையும், அவரை அடையும் எளிய வழியையும், வாழ்வையும், தத்துவங்களையும், பிறவற்றையும் மக்கள் தெளிவாகப் புரிந்துகொள்ளச் செய்வது தமிழ்மறையான திருவாய்மொழி என்பதனையும், அதன் தலைமையையும் அதனை அருளியவர் மாறன் என்னும் நம்மாழ்வார் என்பதனையும் முன்னர் கண்டோம். மாறன் என்னும் திருநாமம் பாண்டிய அரசர் குடிப்பெயர். ஆழ்வார் கலியுகம் பிறந்த நாற்பத்து மூன்றாம் நாள் வைகாசி மாதம் சுக்லபட்சம் பௌர்ணமி கூடின வெள்ளிக்கிழமை விசாகநட்சத்திரத்தில் அவதரித்தார் என்பர். அவர் அவதரிப்பதற்கு நாற்பத்துமூன்று நாள்களுக்கு முன்னேதான் ஸ்ரீமந்நாராயணனின் பூரண அவதாரமான கிருஷ்ணபகவான் தனது அடிச்சோதிக்கு [வைகுந்தத்துக்கு] எழுந்தருளி விட்டான். அவனைச் சேவிக்க பெற்றிலனே என்ற ஏக்கம் மிக்குடையராய் அந்த அவதாரத்திலேயே மிகுதியாக ஈடுபட்டு, உண்ணும் சோறு, பருகுநீர், தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன் எம்பெருமான் என்றே வாழ்ந்து மண்ணினுள் அவன் சீர்வளம் மிகவும், அவ்வளத்தைக் கலியுகத்தில் நாம் எல்லோரும் பயன்கொள்ளவும், திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி ஆகிய நான்கு தமிழ் மறைகளாய்த் தொண்டர்க்கு அமுதுண்ண சொல்மாலைகளாய் அருளி, முப்பத்தைந்து திருநட்சத்திரம் (ஆண்டு) நமக்காக இவ்வுலகினில் வாழ்ந்தருளி மார்கழி மாதம் சுக்லபட்சம் ஏகாதசி (வைகுண்ட ஏகாதசி)

அன்று ஆவாக நற்று வீடுபெற்று வைகுந்தமாநகர் புக்குத் மாமணி மண்டபத்தில் அந்தமில் பேரின்பத்தில் அமர்ந்தார்.

நம்மாழ்வாரின் பெருமையை நன்கு அறிந்த திருமங்கையாழ்வார், திருக்குருகூரிலிருந்து ஆண்டு தோறும் ஆழ்வாரைத் திருவரங்கத்திற்கு எழுந்தருளச் செய்து, மார்கழி மாதம் சுக்லபட்ச ஏகாதசி சமயத்தில் திருவாய் மொழியைப் பெரிய பெருமாள் திருச்செவி சாத்தியருளப் பண்ணினார். இடையில் பல இடையூறு காரணமாக அவ்விழா நின்று போயிற்று. நின்றிருந்த அவ்விழாவினை நாதமுனிகள் திரும்பவும் தொடங்கி, நம்மாழ்வார் மோட்சத்திற்குச் சென்ற ஏகாதசிக்கு முன்னே பத்துநாள்கள் மற்றைய ஆழ்வார்கள் அருளிய திவ்வியப் பிரபந்தங்களைப் பெரியபெருமாள் திருச்செவி சாத்தியருளுமாறு சேவிக்கச் செய்து பகல்பத்து என்றும், ஏகாதசி தொடங்கிப் பத்து நாள் திருவாய் மொழியைச் சேவிக்கச் செய்து இராப் பத்து என்றும் திருவாய் மொழித் திருநாள் கொண்டாடி இறுதி நாளில் இயற்பா முழுவதையும் சேவித்துச் சாத்துமுறை செய்யும் பெரிய திருவத்தியயன உற்சவத்தை ஏற்பாடு செய்து திராவிடவேதம் இன்றுவரை சிறப்புப் பெற்றுத் தழைத்தோங்கச் செய்தார்.

**கலியுகம்: கலிக்கெடும்:** கலியுகம் பிறந்து விடவே, திருநாடு செல்லும் தகுதியுடையார் யாரும் இல்லாமையாலே வைகுந்த நீள்வாசல் மணிக்கதவம் மூடப்பட்டு விட்டது. ஆழ்வார் இந்நிலவுலகில் அவதாரம் செய்து, திராவிட வேதங்களை வெளியிட்டு, கலியுகத்தில் அவதரித்த மதுரகவி முதலானவரும் வைகுந்தம் புகும் தகுதியுடையராக்கி நின்றார். எம்பெருமான் அவருக்கு மட்டும் வைகுந்த நீள்வாசலைத் திறக்கலானார். ஆனால் ஆழ்வாரோ எனக்கு மட்டிலும் பரமபதம் அருளினால் வர மாட்டேன்; என்னைப் பின் பற்றுவார் அனைவருக்கும் அப்பேற்றை நல்குவதானால் வருவேன்'' என்று விண்ணப்பித்தார். பெருமாளும் அவ்வாறே அருள் புரிந்தார், அதன் அடையாளமாகவே திருமால் திருக்கோயில்களில் "பரமபத வாயில்" என்று ஒன்று வைத்து, அதனை மார்கழி மாதம் சுக்லபட்ச ஏகாதசியன்று திறந்து அவ்வழியாகப் பெருமாள் எழுந்தருளி நம்மாழ்வாருக்குச் சேவைசாதித் தருளுவதைப் பெரியோர் ஏற்பாடு செய்துள்ளனர். ஆழ்வார் நலமந்தமில்லதோர் நாடான வைகுந்தம் புகுந்த நாளின் அருமையும், பெருமையும் தோன்ற அந்நாளை 'வைகுந்த ஏகாதசி'யாகக் கொண்டாட வழி வகை

செய்துள்ளனர் வைணவச் சான்றோர். இவ்வரலாற்றினை ஸ்ரீகாஞ்சி ஜகதாசார்யர் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்க ராசாரிய சுவாமி தமது இராமநுசன் பத்திரிகை எண் 199-200லும், மற்றைய இதழ்களினும் வெளியிட்டிருப்பது அறியத் தக்கது. ஆழ்வார் திருநகரியில் வைகுந்த ஏகாதசி இரவு முழுவதும் ஆழ்வாருக்கு அர்ச்சிராதி மார்க்க வைபவம் நடப்பதும், அடுத்தநாள் விடியற்காலையில் ஆழ்வாரை மற்றைய ஆழ்வார் ஆசார்யர்களோடு ஒருசேர பரமபத வாசலின் முன்னே எழுந்தருளச் செய்து, பெருமாள் பரமபத வாசல் திறந்து சேவை சாதிக்கும் கண்கொள்ளாக் காட்சி இன்றுவரை நடைபெற்று வருவது அதனை உறுதிப் படுத்துகிறது. இராப்பத்து முடிவில் பெருமாள் திருவடியில் ஆழ்வாரைச் சேர்த்துத் திருத்துழாயால் அலங்கரிக்கும் சடங்கு, பெருமாள் அவரைத் தமது அர்ச்சா மேனித் திருவடிகளில் அமர்த்திக் கொண்டதையும், பின்பு ஆழ்வாரை நமக்காகப் பெருமாள் திரும்பவும் நிலவுலகிற்கு நல்கி அருளுவாதயும் காணலாம்.

**ஆழ்வார் அருள் வாக்கு:** ஆழ்வார் கலியும் கெடும் என்பதனைத் தமது திருவாய்மொழி ஐந்தாம்பத்து இரண்டாந்திருமொழியில் பரக்கப் பேசுகிறார்.

"பொலிக பொலிக பொலிக போயிற்று வல்லுயிர்ச் சாபம்,
நலியும் நரகமும் நைந்தநமனுக்கு இங்கு யாதொன்றும்இல்லை
கலியும் கெடும் கண்டுகொண்மின் கடல் வண்ணன் பூதங்கள் மண்மேல்,
மலியப் புகுந்து இசைபாடி ஆடி உழிதரக் கண்டோம்"

"கொன்றுயிர் உண்ணும் விசாதி பகை பசி தீயன எல்லாம்,
நின்றிவ் உலகில் கடிவான் நேமிப்பிரான் தமர்போந்தார்,
நன்றிசை பாடியும் துள்ளி ஆடியும் ஞாலம் பரந்தார்,
சென்று தொழுது உய்ம்மின் தொண்டீர்! சிந்தையைச் செந்நிறுத்தியே,

"கறுத்த மனமொன்றும் வேண்டா கண்ணன் அல்லால் தெய்வம் இல்லை.
இறுப்பதெல்லாம் அவன் மூர்த்தியாய் அவர்க்கே இறுமினே.

"மேவித் தொழுது உய்ம்மினீர்கள் வேதப் புனித இருக்கை
நாவிற் கொண்டு அச்சுதன் தன்னை ஞான விதி பிழையாமே,
பூவில் புகையும் விளக்கும் சாந்தமும் நீரும் மலிந்து
மேவித் தொழும் அடியாரும் பகவரும் மிக்கது உலகே."

"கலியுகம் ஒன்றுமின்றிக்கே தன்னடியார்க்கு அருள் செய்யும்,
மலியும் சுடரொளி மூர்த்தி மாயப்பிரான் கண்ணன்"

என்று கலிகெடுகின்ற வாற்றையும், மாயப்பிரானான கண்ணன் அர்ச்சையில் சுடரொளி மூர்த்தியாய் நிற்கின்ற நிலையையும், அவனை வழிபடும் வழியையும், அடியார் பகவர் சிறப்பையும் அவராற்றும் தொண்டையும், அவரால் உலகம் துன்பம் நீங்கி இடையறா இன்பம் பெறுவதையும் அறிவிக்கும் ஆழ்வார் அருள் வாக்கை நம்புவோம்; பற்றுவோம்!

பிற சமயங்களுக்குப் பெரும்பெரு விளம்பரங்களும், சாதனங்களும், துணைகளும் இருக்க, தொண்டர் குலத்தைப் பெருக்கும் திருமால் திருநெறிக்கு அவை அருகில் உள்ளன. அதனைச் சார்ந்தாரும் நெறிபிறழ்ந்து போகின்றனர். மாயப்பிரான் வாளா இருப்பானோ? நம்மாழ்வாரையும், நாதமுனியையும், இராமாநுசனையும் அனுப்பி வையம் காத்த வள்ளல் வைணவம் தழைக்க உயர்வு தாழ்வு இல்லாத் தொண்டர் குலம் பெருக இன்பம் மலிய வழிவகை செய்வான் என்று நம்பி அத்திருமால் திருவடி மலர்களுக்குப் பாடுவோம் பல்லாண்டு!

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

நெற்றியுள் நின்றென்னை யாளும் நிரைமலர்ப் பாதங்கள்சூடி
கற்றைத்துழாய் முடிக்கோலக் கண்ணபிரானைத் தொழுவார்,
ஒற்றைப் பிறை அணிந்தானும், நான் முகனும் இந்திரனும்,
மற்றை அமரரும் எல்லாம் வந்தெனதுச்சியுளரே.

கையார் சக்கரத்து என் கருமாணிக்கமே என்றென்றும்,
பொய்யே கைம்மை சொல்லிப் புறமே புறமே ஆடி,
மெய்யே பெற்றொழிந்தேன்; விதிவாய்க்கின்று காப்பாரார்,
ஐயோ! கண்ணபிரான் அறையோ இனிப்போனாலே"

# அலர்மேலுமங்கை அருள் மாலை



என் ஆசிரியர் பெருந்தகை

**புலவர் அரகு அவர்கள் அருளிய**

சிறப்புப் பாயிரம்

நேரிசை வெண்பா

அலர்மேலு மங்கை மணவாள ரன்பின்
'அலர்மேலு மங்கையருள் மாலை'—நலமுற
அன்னை யருள்பெற் றரியருள் பெற்றிட
நன்னர்தொடுத் தான் கண்ணன் நன்கு.

செந்தமிழ் தேர்கவிஞன் நட்பினிக்குஞ் சீராளன்
சிந்தை யெலாந்திருமால் சீர்நிறைப்பான்—சிந்தை
மலர 'அலர்மேலு மங்கையருள் மாலை'
நலமுற யாத்தளித்தான் நன்கு.

தாயருள் பெற்றுப்பின் தந்தையருள் நாடுறும்
ஏய சமய இனியநெறி—மேய
உலகு பயன்பெற் றுவக்கத் தொடுத்த
மலர்மாலை வாழ்கமணம் வாய்ந்து.

ஸ்ரீ காஞ்சீபுரம் ஜகதாசார்ய ஸிம்ஹாஸநாதிபதி
மஹா மஹோபாத்தியாய
உ.வே. பிரதிவாதி பயங்கரம்

## அண்ணங்கராசார்ய ஸ்வாமிகள்

அருளிச்செய்த

சாற்றுக்கவி

வெண்பா

அலர்மே லுறைவா ரருள்மாலை கண்டு
மலர்ந்ததென் னுள்ளம் மகிழ்ந்தே—பலர்க்கும்
பயனாம் படியே பணித்தவிந் நூலின்
நயங்கண்டு நன்குவப்பன் நான்.

நூற்றெட்டுச் செய்யுளமர் நுண்பொருளை யாராயின்
நூற்றெட்டு நாமம்போல் நுண்மதியோர்—சாற்றுவரென்
றண்ணங் கராசிரிய ராய்ந்து மகிழ்ந்துரைத்த
வண்ணமிது கண்டுமகிழ் வார்.



சிந்தாமணிச் செல்வர், இலக்கணத் தாத்தா,
செந்தமிழ்க் களஞ்சியம், மகா வித்துவான்

## மே.வீ. வேணுகோபாலப் பிள்ளை

அவர்கள் அருளிய

வாழ்த்துப்பா

அலர்மேலா மங்கையரு ளாசித்தெங் கண்ணன்
அலர்மேலு மங்கையருள் மாலை—பலர்பயிலத்
தந்தா ரிதனைத் தரணியுளா ரோதுவரேல்
எந்தநல மெய்தா ரினிது?

கண்ணன் இதனாற் கருணையுடன் எல்லாரும்
எண்ணியே வாழ்த்தநல மெய்தியிவண்—கண்ணியமாப்
பல்லாண்டு வாழப் பரமன் அருள்கவெனப்
புல்லாண்டு சொன்னேன் பரிந்து.

## நூல்

தாயாய் மதலைக்குச் சேயாய் நறுந்துளவ
மாயாமால் தன்மனத் தின்தார்மேல்—மேயாய்நீ
ஆயா யெனவேமன் அல்லும் பகலுமுனை
ஆயா தழைக்க அருள். 1

தந்தை யருள்சுரக்கத் தாயன்பால் சேர்த்திடுதல்
முந்தைநாள் தொட்டு முடிவன்றோ—எந்தையாம்
வேங்கட வாணன்றாள் வேண்டியவெல் லாமருளப்
பூங்கமலப் பொன்னே யருள். 2

முந்தையர் முந்தையர் முந்தையோர் போற்றுநல்
எந்தை இராமா நுசன்றாட்கீழ்ச்—சிந்தையடி
செய்யடி யாரோ டருளிச் செயலோத
செய்யமலர்த் தாயே யருள். 3

சீரார் சடகோபன் செந்தமிழ்வே தம்பரவும்
பேரார் மதுரகவி பேசுந்தாள்—காரார்
திருவேங் கடக்கோன் திருமார் புறைவாய்
தருமாறு தாயே யருள். 4

மருப்பொசித்த மாதவன்றன் வாய்ச்சுவையுஞ் சொல்லும்
விருப்புற்ற கோதையடி வேட்டேன்—பொருப்பிற்
சிறப்புறாஉஞ் சேண்முகில்சேர் சீர்மலையா னாகம்
சிறக்கவமர் தாயே யருள். 5

வையந் தகளியா வான்தமிழே நெய்யாகச்
செய்ய சுடரேற்றுஞ் செந்தமிழோன்—பொய்கையான்
செய்ய மலர்த்தாளைச் சேர்ந்துய்யச் செந்தேனைப்
பெய்யு மலர்ப் பேறே யருள். 6

அன்பே தகளியா ஆழியங்கைச் செங்கண்மால்
இன்புற ஞான விளக்கேற்றும்—இன்றமிழ்செய்
பூதத்தான் பொன்னங் கழற்சேரப் பொய்கையலர்
மீதத்தாய் மேவி யருள். 7

புரிசங்கங் கைக்கொண்டோன் பொன்னார மார்பில்
திருக்கண்டேன் செஞ்சடையோன் சீர்சால்—உருக்கண்டேன்
வேங்கடத்தில் என்றியம்பும் பேயன்றாள் மேவோத
ஆங்கமலத் தாயே யருள். 8

திருமகளைத் தன்மகளாப் பல்லாண் டிசைக்கும்
அருமறையின் விட்டுசித்தன் பொற்றாள்—அருவி
இசைபாட மன்னுயிர் இன்பார் அனந்தன்
மிசையோங்கும் மின்னே அருள். 9

செடியாய வல்வினைகள் தீர்க்குந் திருவைப்
படியாய்க் கிடந்தேனும் பார்க்கக்—கடியார்
அலர்மேல் உறைமார் பருள்வேள் பெருமாள்
மலர்ப்பாத மன்னா யருள். 10

பூநிலாய ஐந்தொடும் பூமகள்தன் கேள்வன்றாள்
தாநிலாய தன்மைசார் சந்தஞ்சேர்—பாநிலாவ
நாயேற் கருள்புரியும் நன்மழிசை யானடியைத்
தாயே தழுவ அருள். 11

போதெலாம் போதுகொண்டு பொன்னடி போற்றிடும்
ஆதரவார் தொண்ட ரடிப்பொடியார்—பாதஞ்சேர்ந்
தின்பமுற வேங்கடத்தா னின்னருளே பொன்னுருவே
அன்புடனே வேண்ட வருள். 12

திருவார மார்பதன்றோ ஆட்கொண்ட தென்றப்
பெருமாயன் பேர்பரவும் பாணன்—திருத்தாள்
பெரும்பாரப் பேயூழைப் போக்குவிக்குந் தாயே
தருமாறு வேண்ட வருள். 13

காரிமா றன்கணியாற் கட்டுண் கவியேறு
மாரியென மன்னு மதுரகவி—சீரிய தாள்
பேரும் பொருளும் பெருகிய ஏழுமலை
யாருடையாய் வேண்ட வருள். 14

வாள்வலியால் மந்திரங்கொள் மங்கையர்கோன் செந்தமிழை
நாள்கழியா நாநவில நல்லவன்றன்—தாள்விரும்ப
மின்னார் முகில்போல்வான் தண்ணார்நல் வேங்கடத்தான்
பொன்னாவாய் வேண்ட வருள். 15

தாயே தமிழ்வேத ஆழ்வார்தம் தண்தவமே
வேயே விளைந்தோங்கு வேங்கடன்றாள்—நீயேதான்
சேர்ப்பாய் செயலெல்லாஞ் செப்பமுறக் காப்பாயென்
றார்ப்பார்பால் வேண்ட வருள். 16

நிலமகளும் பூமகளும் நின்னையலால் வேறோ?
அலர்மகளே மாலோ னணைப்பில்—நிலவும்
பசும்பொன்னே பாங்குடனே பல்வினைநோய் போக்க
விசும்புடையாய் வேண்ட வருள். 17

## நூல்

தாயாய் மதலைக்குச் சேயாய் நறுந்துளவ
மாயாமால் தன்மனத் தின்தார்மேல்—மேயாய்நீ
ஆயா வெனவேமன் அல்லும் பகலுமுனை
ஆயா தழைக்க அருள். 1

தந்தை யருள்சுரக்கத் தாயன்பால் சேர்த்திடுதல்
முந்தைநாள் தொட்டு முடிவன்றோ—எந்தையாம்
வேங்கட வாணன்றாள் வேண்டியவெல் லாமருளப்
பூங்கமலப் பொன்னே யருள். 2

முந்தையர் முந்தையர் முந்தையோர் போற்றுநல்
எந்தை இராமா நுசன்றாட்கீழ்ச்—சிந்தையடி
செய்யடி யாரோ டருளிச் செயலோத
செய்யமலர்த் தாயே யருள். 3

சீரர் சடகோபன் செந்தமிழ்வே தம்பரவும்
பேரார் மதுரகவி பேசுந்தாள்—காரார்
திருவேங் கடக்கோன் திருமார் புறைவாய்
தருமாறு தாயே யருள். 4

மருப்பொசித்த மாதவன்றன் வாய்ச்சுவையுஞ் சொல்லும்
விருப்புற்ற கோதையடி வேட்டேன்—பொருப்பிற்
சிறப்புறாஉஞ் சேண்முகில்சேர் சீர்மலையா னாகம்
சிறக்கவமர் தாயே யருள். 5

வையந் தகளியா வான்தமிழே நெய்யாகச்
செய்ய சுடரேற்றுஞ் செந்தமிழோன்—பொய்கையான்
செய்ய மலர்த்தாளைச் சேர்ந்துய்யச் செந்தேனைப்
பெய்யுமலர்ப் பேறே யருள். 6

அன்பே தகளியா ஆழியங்கைச் செங்கண்மால்
இன்புற ஞான விளக்கேற்றும்—இன்றமிழ்செய்
பூதத்தான் பொன்னங் கழற்சேரப் பொய்கையலர்
மீதத்தாய் மேவி யருள். 7

புரிசங்கங் கைக்கொண்டோன் பொன்னார மார்பில்
திருக்கண்டேன் செஞ்சடையோன் சீர்சால்—உருக்கண்டேன்
வேங்கடத்தில் என்றியம்பும் பேயன்றாள் மேலோத
ஆங்கமலத் தாயே யருள். 8

திருமகளைத் தன்மகளாப் பல்லாண் டிசைக்கும்
அருமறையின் விட்டுசித்தன் பொற்றாள்—அருவி
இசைபாட மன்னுயிர் இன்பார் அனந்தன்
மிசையோங்கும் மின்னே அருள். 9

செடியாய வல்வினைகள் தீர்க்குந் திருவைப்
படியாய்க் கிடந்தேனும் பார்க்க—கடியார்
அலர்மேல் உறைமார் பருள்வேள் பெருமாள்
மலர்ப்பாத மன்னா யருள். 10

பூநிலாய ஐந்தொடும் பூமகள்தன் கேள்வன்றாள்
தாநிலாய தன்மைசார் சந்தஞ்சேர்—பாநிலாவ
நாயேற் கருள்புரியும் நன்மழிசை யானடியைத்
தாயே தழுவ அருள். 11

போதெலாம் போதுகொண்டு பொன்னடி போற்றிடும்
ஆதரவார் தொண்ட ரடிப்பொடியார்—பாதஞ்சேர்ந்
தின்பமுற வேங்கடத்தா னின்னருளே பொன்னுருவே
அன்புடனே வேண்ட வருள். 12

திருவார மார்பதன்றோ ஆட்கொண்ட தென்றப்
பெருமாயன் பேர்பரவும் பாணன்—திருத்தாள்
பெரும்பாரப் பேயூழைப் போக்குவிக்குந் தாயே
தருமாறு வேண்ட வருள். 13

காரிமா றன்கணியாற் கட்டுண் கவியேறு
மாரியென மன்னு மதுரகவி—சீரிய தாள்
பேரும் பொருளும் பெருகிய ஏழுமலை
யாருடையாய் வேண்ட வருள். 14

வாள்வலியால் மந்திரங்கொள் மங்கையர்கோன் செந்தமிழை
நாள்கழியா நாநவில நல்லவன்றன்—தாள்விரும்ப
மின்னார் முகில்போல்வான் தண்ணார்நல் வேங்கடத்தான்
பொன்னாவாய் வேண்ட வருள். 15

தாயே தமிழ்வேத ஆழ்வார்தம் தண்தவமே
வேயே விளைந்தோங்கு வேங்கடன்றாள்—நீயேதான்
சேர்ப்பாய் செயலெல்லாஞ் செப்பமுறக் காப்பாயென்
றார்ப்பார்பால் வேண்ட வருள். 16

நிலமகளும் பூமகளும் நின்னையலால் வேறோ?
அலர்மகளே மாலோ னணைப்பில்—நிலவும்
பசும்பொன்னே பாங்குடனே பல்வினைநோய் போக்க
விசும்புடையாய் வேண்ட வ[illegible] 17

தேனார் பெருஞ்சோலைத் தெள்ளருவி வேங்கடமே
வானோர் திரளும் வடமலையாம்—சேரனார்
விரும்புங் கொழுந்தே வியன்பொரன் னலர்மேல்
திருமகளே வேண்ட வருள். 18

செவ்வரிக்கண் சீதையாய்த் தீயோன் சிறையிருந்தாய்
வெவ்வமரில் தீயோர் விரைந்தழியக்—கொவ்வைவாய்ச்
செய்யவளே சீர்சால் திருவேங் கடநல்லோன்
பெய்யன்பே வேண்ட வருள். 19

ஏரார் தமிழகத்தில் ஏழ்வரையான் தானுவந்து
பேரார் திமிலேறேழ் பேர்த்தடக்கிச்—சீரார்
திருமணஞ்செய் நப்பின்னை யானாய் திருவே
அருமகளே வேண்ட வருள், 20

நல்லாயர் நங்கைமார் நாடோறும் நாடிநிற்கப்
பொல்லாத செய்யும் புயல்நிறத்தான்—புல்லாங்
குழல்கேட்ட ஆவினம்போல் உள்ளுருகி நிற்க
மழலைச்சொல் லன்னாய் அருள் 21

அகமும் புறமுமென் றான்றோர் புகலும்
அகமொன்று காத லமைந்து—மிகவே
உருகும் உருக்கு மிணியா யுவந்த
திருமகளே சேயேற் கருள். 22

அருளாள னன்பின் பெருந்தேவி யானாய்
வருநோ யகற்றி வரந்தா—பெருநோக்
குடையாய் திருவேங் கடவ னருள்நோக்
குடையா யுவந்தே யருள். 23

அமிழ்தே! அலர்மேல் அமரும் அணங்கே!
தமியேன் துயர்தீர் சுடரே!—தமிழ்வேத
நூலார் பொருளே! நுவல்வேங் கடச்செல்வன்
பாலார் பயனே யருள். 24

வெந்துயர் வீழ்த்துநல் வேங்கட வாணன்றன்
சிந்தையில் வாழ்ந்தென் திருக்கெலாம்—வெந்துக
நன்றென் மனமலர் மேலுறை நங்கையே!
என்றுமுனை யேத்த வருள். 25

தூய நினைவுந் துயர்தீ ரொழுக்கமும்
வாய வெனக்கு வரந்தாராய்—போயலர்
மீதமர் மங்காய் வியன்வேங் கடன்மார்பு
மீதம ரன்னா யருள். 26

உற்றக்கால் பெற்றக்கால் உள்ளுவக்குந் தாய்தான்
பெற்றமகார் பேதுறக் காண்பனோ?—நற்றவஞ்செய்
நல்லார் பரவும் நறவே! திருமகளே!
நல்லமுதே! நன்றே யருள். 27

கண்ணின் ஒளியே! கருத்தின் குருத்தகமே!
எண்ண இனிக்கும் இளவழகே!—பண்ணின்
பயனே! பசுமலையான் பாகஞ்சேர் பொன்னே!
நயந்துயான் நாட வருள். 28

ஈன்று புறந்தருதல் ஏற்றங்கண் டின்புறுதல்
ஆன்றமை தாய்மைக் கழகன்றே?—சான்றநல்
பேரரு ளாளன் பெருந்தேவி என்பாலுஞ்
சீரரு ளோங்கவருள் செய். 29

ஈன்ற பொழுதின் பெரிதுவக்குந் தாயென்பர்
சான்றோ னெனும்போதிற் சாற்றுங்கால்—ஆன்ற
திருவரங் கப்பெருமான் சீர்சால் மணங்கொள்
திருவரங்க நாய்ச்சி யருள். 30

வெந்துயர்நோய் நீக்கியருள் வேதவல்லி யன்னாய் நீ
நொந்துள நோவ தொழிப்பாயால்—அந்தணர்
சிந்தையு மாழியங்கைச் செங்கண் திருமால்சீர்ப்
புந்தியு மாவா யருள். 31

தெளியு மறிவுஞ் செயல்திறமு மெம்மால்
விளையு நலமும் வியவேன்—அளிசெய்
யலர்மே லமர்மங்காய்! யானுன் னருணார்
மலரடி மன்ன வருள். 32

உயிர்யாவும் உன்றன் உடலாக மேவிப்
பயிலார்வ மென்றன்பா லாக—மயிலாடு
வேங்கடக் குன்றன் விரும்பும் இலக்குமியே!
யாங்குடனே பார்க்க வருள். 33

உயிர்தோற்றக் காரணம் உள்ளல் எளிதோ?
உயிர்தோற்றக் காரணமா வாய்ந்—பயில்வார்க்
கமிழ்தாம் அருநூ லதுபோல்வா யம்மா!
அமிழ்தமலர் வல்லி யருள். 34

நல்லோர் மனமும் நலிந்தோர்க் குதவுமம்
மெல்லோர் உளமுமே மேவுவைநீ — எல்லாரும்
வெங்குளிர் வேங்கடன் வெஃகும் இளமதியே!
செங்கமல வல்லி யருள். 35

அடுக்கல் பலவார் வடமலை ஆயன்
அடுக்க வருவினை யாற்றும்—அடுக்கார்
அலர்மே லழகே! அவன்றாள் அடைய
மலரடி மாண வருள். 36

துழாய்முடி யண்ணல் துயரறுக்குந் தூயோன்
விழாவயரும் வேங்கடமே மேவுந்—துழாய்கொண்
டமரர் தொழுதேத் தலர்மேல் கொழுநன்
தமருக்குச் செய்வ தருள். 37

ஏத்துவா ரெய்துவ ரேற்றம் எழுமையும்
நாத்தழும் பேற நவின்றுமே—காத்தற்
கடவுள் கருத்தார் கடிமல ரன்னாய்!
படர்துன்பம் பாற்றி யருள். 38

நினைப்பினும் நீளநினை யாதிருப்பி னுந்தாய்
முனைந்து குழவிநலம் முன்னல்—அனைத்துயிர்க்கும்
அன்னாய்! அறிவாய் அலர்மேல் அமரொளியே!
அன்பால் அழைக்க வருள். 39

ஓங்கு பெருஞ்சோலை உந்துநீர்ப் பொன்னருவி
பாங்கு பெறச்சூழ் பசுமலையான்—தாங்கியருள்
பூமகளே! பொன்னே! புகழ்சேர் அலர்மேல்வாழ்
கோமள வல்லி! அருள். 40

துயர்தீர் சுடராழி தூய்மைகூர் சங்கம்
வயவா ளொளிதண் டுயர்வில் — வியவார்
பறவையும் பண்பமை பாம்பும் பணிகொள்
அறவோன் அழகே அருள். 41

அருளாளன் அன்போ டறிவார் அடியார்
திருவாளன் தேவர் திறலோன்—கருவார்
அழகாளன் உன்னும் உயர்ந்தோர்க் கமிழ்தாம்
அழகுமலர் மேலாய் அருள். 42

செஞ்சுடரோன் வெண்மதியம் சேண்விசும்பு நீர்நீர்கால்
விஞ்சுபுகழ் சேர்பூமா தென்றிவற்றின்—நெஞ்சா
இனமாவா னின்றுழா யெந்தைக் கினியாய்
கனகவல்லித் தாயே யருள். 43

அன்பர் துயர்கண் டலருந் திருச்செங்கண்
அன்னவர் வாழ வலைகின்ற—பொன்னடிகள்
பொன்னவிர் மேனியாய்! போதில்வாழ் பூமகளே!
என்றும்யாம் ஏத்த வருள். 44

அம்மா அலர்மேல் அமரர் தொழநிற்கும்
எம்மா னெழில்வேங் கடவன்றாள்—எம்வினைநோய்
எய்தாமல் காக்க எழில்மார் பகத்திருந்து
பெய்யுமன்பால் பேணி யருள். 45

தாயன்பிற் குண்டோ தடங்கல்? தகைமைசால்
மாயன்பின் போகா மனமுண்டோ?—பாயமுதச்
சொற்கிளியே! வேங்கடவன் தொல்லருளே! பூமகளே
கற்பக வல்லியே காண். 46

தொல்வினையால் தோன்றியபின் மூளும் முதிர்வினையால்
பல்வினையால் மக்கள் பரிசழிதல்—எல்லா
அகிலமுந் தோற்றுவா னன்பே! அழகோ
அகிலவல்லி நாய்ச்சி யருள். 47

நினைப்பார் துயர்தீர்க்கும் நீள்வேங் கடவன்
வினைப்பாரந் தீர்த்தருள வேண்டும்—அனைத்துந்
திருமால் திருவுந்தித் தோன்றல் தெரிவாய்
திருமா மகளே யருள். 48

உள்ளங் குழைந்துன் னுயர்பொன் னடிநினை
துள்ளம் உயர்தற் குதவாய்நீ—வெள்ளத்
தரவில் துயில்கொள் ளறவோ னருளே!
அரவிந்த வல்லி யருள். 49

இன்கனிச் சோலை இனிதான் சுனைகளுடன்
பன்மணி சிந்திடு பாலருவி—மின்தவழ்
மேகம் மிகமேவு வேங்கடக் கோன்றிரு
வாகம்வாழ் அம்மா வருள். 50

இன்முகமு நல்லுளமு மின்சொல்லுங் கொண்டியான்
பன்முக மாகப் பணிசெய்து—நன்முக
மாமலர் மங்காய்! மணிவண்ணன் மாலூறு
மாமகளே மன்ன வருள். 51

குலம்விளங்கும் கொண்டல்நேர் கோவிந்தன் பாத
நலம்விளங்க நாவால் நவிலப்—பலவிதமாய்ப்
பாடிப் பரவும் பரிசருளாய் பங்கயம்
நாடியமர் நங்காய் நயந்து. 52

தாமரைப் பூவோ தனிவேங் கடவன்றன்
பூமனக் கோயிலோ புக்கில்தான்—தாமம்
நறுந்துழா யண்ணற்கு நல்கிமகிழ் அம்மா!
மறுப்பையோ மக்கட்குன் னன்பு? 53

செந்தமிழ் நல்லோர் செழுந்தமிழ்ப் பாவாலே
வந்தனை செய்ய வரந்தரச்—செந்தே
னுகுசெம் மலர்மே லுறைவாய்! திருவே!
புகுந்தென் னுளத்தே யுறை. 54

தீரா வினையாவுந் தீர்க்குந் திருமாற்குத்
தீரா மனக்காதற் றேவியராய்—பேரார்புள்
ளூர்ந்து பெருமா னுடன்போந் தெனதிடர்நோய்
பேர்ந்தொழியப் பேசாய் பெரிது. 55

குழவி மழலைக் குதலையுஞ் செவ்வாய்
விழுநீர் அமிழ்த விளைவும்—தழுவ
தளர்தா முடியுந் தவிர்ப்பனோ தாயே
தவிர்கும் மலரம்மா! சாற்று. 56

திருமலை ஏழுமலை தேவர் தொழநில்
பெருமலை யப்பனிடம் பேசும்—திருவே
அனைத்துயிர்க்கும் அன்னை எனவறிந்தென் சென்னி!
முனைந்து தொழுவாய் முயன்று. 57

கருமேனிச் செங்கண் கமலத் திருத்தாள்
திருமாலை நீங்காத் திருவே—கருமணியென்
கண்ணொளியே! காப்பாள் கருதாய் கமலமலர்
விண்ணொளியே காண விரும்பு. 58

துழாயலங்கல் கொண்டுநற் றொண்டர் பணிய
விழாவயரும் வேங்கட மேலான்—குழாத்துடன்
போந்திசை பாடவருள் பங்கயத்தாள் தாள்மலரை
மோந்துயர மூக்கே முயல். 59

வாய்மை யுறைவென வாழ்வாய் அதுமற்றுத்
தூய்மை யுடையார்பால் தோன்றுமே—தூய்மைதான்
தாய்மைக் கனிவுடைய தாமரையாள் தாள்மலரை
வாய்நிரம்ப வாழ்த்தி வரும். 60

செய்ய மலர்மிசை சேர்வாள்தன் சேவடி
பொய்யு மருட்செயலைப் பேசுவார்—மெய்யுரையை
ஓவாது கேட்டுற் றொழிப்பாய் இடரெல்லாந்
தாவாது சென்றென் செவி 61

செஞ்சொல் மறையவர் செப்பிமகிழ் செய்யவளை
நெஞ்சே! நிலையாய் நினைத்திடுவாய்—எஞ்சாமல்
இன்பும் பொருளும் இனிதா யருளலர்மேல்
அன்னை யவளே அறி. 62

செய்யுஞ் செயலெல்லாம் செங்கமலத் தாயருள்
பெய்ய நிகழ்வதாய்ப் பேணியுணர்—மெய்யறிவை
எய்த மலர்மகளை என்கைகா ளின்மலர்
பெய்து வணங்கிர் பெரிது. 63

திருவேஎன் சிந்தனையின் செஞ்சுடரே தெய்வத்
திருமால் மனத்திற் றிகழ்வாய்—அருவினையேன்
அல்லலுற் றேங்கி யலைதல் அழகோதான்
நல்லமலர்த் தாயே நவில். 64

திருவேங் கடவன் திருக்கோயி லென்றும்
விரும்பி வலஞ்செய்வார் மேனாள்—பெருகு
வளமும் புகழும் விளங்கவலர் மங்கை
உளமுவந்து நிற்கும் உணர். 65

கோவிந்தா என்று குலங்குலமாய் நின்றழைக்க
மேவியருள் செய்வார்நம் வேங்கடவர்—தாவில்
புகழ்த்தர மரைமேல் உறைவாய்! தமியேன்
மகிழ்வழைக்க மாலுக் குரை. 66

பொன்னே! புவிமகளே! பொய்கை யலர்மேல்வாழ்
மின்னே! மிகப்பலவாம் மேகஞ்சூழ்—பன்மலைசேர்
வேங்கடவ னெந்துயரின் வேரறுக்க நின்னருளை
நாங்கடவா வண்ணம்நீ நல்கு. 67

அழகா ரலர்மே லமர்வா யடியார்
பழகுநற் பண்பிற் பயில்வாய்—குழலேய்
அமிழ்த வருஞ்சொல் லணங்கேநின் தாளைத்
தமிழா லழைக்கவருள் தா. 68

அன்னையை வேண்டி யடையாப் பொருளுண்டோ?
இன்னினிய பூமகளே! என்தாயே!—பொன்னே!
பொருளே புகழே புயல்வண்ணன் தண்ணார்
அருளே! தருவாயுன் அன்பு. 69

பேசுவதுன் நற்புகழே பெய்யமுத வல்லிமலர்
வீசுவதுன் மெல்லடியின் விண்ணொளியே—தேசுறு
வேங்கடவன் மார்பில் மிளிர்கின்ற பொன்னாச்சி
யாங்கடவா அன்பை யளி. 70

பல்லுருவும் பல்வழியும் பல்லுணர்வு மென்நெஞ்சைத்
தொல்லைப் படுத்துந் துயர்தீராய்—அல்லிமலர்
வாழ்வே! அடியார்க் கமுதே! அடியோங்கள்
தாழ்வில் நெறிதங்கச் செய். 71

தூயோர் துயர்பார்த்துத் துன்புறு மென்னுள்ளம்
தாயே துயர்தீராய்! தாமரையாய்—வேயோங்கு
வேங்கட வாயன் விரும்பு குலக்கொழுந்தே!
தேங்கமழ் பூமேல் திரு. 72

அன்புடையா ரெய்துகின்ற அல்லல் அகன்றிடவே
என்புருக ஏங்குகின்றேம் ஏழையேம்—அன்புடையாய்
அம்மா அலர்மேல் அடியேம் துயர்களையாய்
எம்மால் இயல்வ தெது? 73

உன்னினைவே எப்பொழுதும் உன்பெயரே சொல்லுவதும்
என்னினி எய்தா தெமக்கேதான்—பொன்னே
பொதியவிழ் அல்லிமலர் போற்றவாழ் கண்ணே!
கதியாவாய் காத்தல் கடன். 74

நெடியோன் திருமார்பில் நீங்கா துறைவாய்
செடியாய வல்வினைநோய் சேராப்—படிசெய்வாய்
செங்கமல மேல்திகழ்நின் செய்ய திருவடியை
எங்கள் திருவுளத்தே ஏற்று. 75

உண்மைக் குயர்வும் உழைப்பிற்கு வெற்றியும்
தண்மைக் குணத்தளாம் தாமரையாள்—எண்மைக்
குணத்தா ரிடர்தீர் குறிப்பும் இனிதா
மணக்க வருளும் மகிழ்ந்து. 76

எல்லாச் செயற்கும் இனிதா யுதவியருள்
நல்லாய் திருமலை நாதன்றன்—மெல்லார்
மனத்தாய் அலர்மேலாம் வாழ்வே! அடியேன்
மனத்தார்வம் மாண வருள். 77

எண்ண வியலா எழிற்படைப்பின் நோக்கத்தைத்
திண்ண முணரத் திருவருள்தா—வண்ண
மலர்மேலும் மாலவன் மார்பகத்தும் வாழ்வாய்
அலர்மேலாய் நின்றாய் அரண். 78

தாயிற் சிறந்ததொரு கோயிலும் இல்லையால்
ஆயின் அதுவே அறிவுரையாம்—தாயினுக்கும்
ஆதிதாய் அன்னை அலர்மேல் அவளடியே
தீதிலாத் தன்மைதருந் தேர். 79

அன்பருளந் தித்திக்கும் அம்மை அலர்மேல்தன்
மென்மைதருந் தாள்மனத்தில் மேவுங்கால்—என்றும்
இளநலமும் இன்ப எழில்வாழ்வும் சேர்க்கும்
வளமார் திருவடியை வாழ்த்து. 80

கொங்கலர் தாமரைவாழ் கோகிலமே! கோவிந்தன்
தங்குபுகழ் மார்பில் தவழ்பவளே!—எங்கும்
இனிதாய் எவர்க்கும் இயலுதவி செய்யும்
இனியவுளம் தாராய் எனக்கு. 81

இடரெலாம் ஓய இயம்புவம் நல்வேங்
கடவனார் நாமம் கனிந்து—படமுடைப்
பாம்பணைப் பள்ளி பயில்வாரைச் சேரம்மா!
யாம்பிணைந் துய்யவருள் ஈ. 82

துன்பிலா வாழ்க்கைத் தொடர்பை எனக்கருளாய்
இன் பலர் மேலாம் இளமதியே!—என்னுயிரே!
எந்தை பசுமலையான் ஏரார் திருமார்பில்
முந்தி யிருப்பாய் முதல். 83

அருளாளா என்றன் அகத்தின் நினைவு
உருவாவ தென்றன் உணர்வால்—மருவார்
திருமார் புறையுந் திருவே அவரெற்
கருளுமா றன்போ டழை. 84

பெருந்தேவி அம்மா நின் பேரருளாளர்
விரும்பும் வகையை விளம்பாய்—திருவே!
திருமால் உவக்குந் திகழொளியே! என்றன்
அருவினையை ஆற்றி அருள். 85

பெருந்திருமால் நாமமே பேசுவேன் பேரார்
பெருந்தேவி அன்பே பெறுவேன்—ஒருமை
யுடனா னவரடி உன்னுவேன் ஓயும்
இடரா யினவெல்லாம் இன்று. 86

கமலமலர்த் தாயீர் கருதீர் சிறிதே
எமதிடர்ப் பாரம் எளிதோ?—உமது
திருப்பாதம் அன்றித் தெளியுமோ வேறு
விருப்பா யெனதுள்ளம் மேல். 87

அம்மா அலர்மேல் அழைப்பேம் ஒழிவின்றி
எம்மால் இயலுவ தேதுமிலை—பெம்மான்
திருவேங் கடவன் திருமார் புறைவாய்
அருநோய் அகற்றி அருள். 88

பூவார் பொழிலும் புனலார் சுனையுஞ்சூழ்
பாவார் பதிசேர் பசுமலையான்—காவா
தொழியின் கதியெமக் கொன்றுள தாமோ
மொழியாய் அலர்மேல் முனைந்து. 89

முதலாவான் எந்தை முகில்நிற வண்ணன்
முதலாயே நீயும் முதலே—மதலையர்
வேண்டும் மனநிறை வெய்த உனதருள்
வேண்டும் அருளாய் விரைந்து. 90

தாமரையே தண்டுளவார் தம்மடியார் தம்மனமே
பூமகளார் வாழும் புகழிடமாம்—நாமவர்
பொன்னார் திருவடியே போற்றிப் புகழுடைவோம்
மின்னேர் திருமகளே மேல். 91

இன்பந் தருமே இடரா வனநீக்கித்
துன்பந் தொடராத் துணைசெய்யும்—நன்மைசால்
அலர்மேலாம் மங்கை யருள்நினைந் தேத்திப்
பலர்புகழ் பாதம் பணி. 92

குளிர்ந்த குணத்தவர் கொண்டாடுங் கோனார்
மிளிரும் திருமார்பில் மேவும்—அளிசேர்
அலர்மேல் உறைவாள் அடிமலர் ஏத்தி
நலராவோம் இன்னல் நலிந்து 93

அம்மா என அழைப்பன் அல்லும் பகலுமே
சும்மா நினதுபெயர் சொல்லுவன்யான்—நம்மலையான்
கோதில் புகழையே கூறிடும் பொன்னெறியைப்
போதில்வாழ் பொன்னே புகல். 94

செந்தா மரைபோலென் சிந்தையும் உன்றனக்குச்
சொந்தமாய்க் கொண்டு சுகமருளாய்—கொந்தார்
மலர்ச்சோலை சூழ்வேங் கடவன் மகிழும்
மலர்மகளே மாண மகிழ்ந்து. 95

திருமார்வன் என்றேதான் தித்திக்கும் பேச்சால்
பெருமான் திருவுருவைப் பேசும்—திருவடியார்
உன்னை நினையாமல் உய்திபெறல் ஏதன்னாய்
என்னை இகழேல் இனி. 96

திருமால் எனும்பேர் திகழ்தல் உளத்துன்
பெருமானை நீயுகக்கும் பெற்றி—அருமையால்
செங்கமலத் தாயே செழும்பொன்னே நின்னியல்பை
எங்களுக்கு நல்காய் இனிது, 97

போற்றுவம் போற்றுவம் போற்றுவம் போதெலாம்
நாற்றத் துழாய்முடி நாரணன்—போற்றிக்கொள்
பேற்றை யருளும் பெருமாட்டி நல்லலர்மேல்
நாற்றங் கமழுநற் றாள். 98

தண்டை ஒலிசிறக்கும் தாமரையாள் நல்லடியைத்
தொண்டர் குழாத்தோடு தோத்திரித்துக்—கொண்டாடி
வாழ்கென வாழ்த்துவோம் வாழ்த்தி வணங்குவோம்
வாழ்வளிக்கும் வண்ண வடி. 99

பல்லாண் டிசைப்போம்யாம் பல்லாண்டிசைப்போம்யாம்
நல்லாண் டிசைவாழ்வும் நல்கிடுவாள்—மெல்லடிக்கே
எல்லாச் செயற்கும் இனிதாய் உதவியருள்
நல்லாய் மலர்மங்கை நாடு. 100

தாயே தளிரடி தந்தெம்மை ஆட்கொள்வாய்
வேயே விளைந்தோங்கு வேங்கடவர்—போயேற்கும்
பொன்னே திருவே பொதியவிழ் அல்லிமலர்
மின்னே உனதருளே மேல். 101

ஏத்தித் தொழுவோம்மன் ஏத்தித் தொழுவோம்நாம்
காத்தருள் அம்மை கனகவல்லி—பூத்தமலர்ப்
பாதம் பொருள்சேர் புகழ்பாதம் போற்றியென்றும்
நாத்தழும் பேற நவின்று. 102

வெல்க எமதன்னை வீசுபுகழ் மெல்லடிகள்
வெல்க அலர்மேல் விரைகழல்கள்—வெல்க
திருவேங் கடத்தான் திருவருளை நல்கும்
பெருமாட்டி பெய்யுமருட் பேறு. 103

சீரார் பொருளும் சிறப்பார் பெருவாழ்வும்
பேரார் மனையாளும் பிள்ளைகளும்—ஏரார்
மலர்ச்சோலை மாமலையான் மாட்டன்பு மெய்த
அலர்மேல் அழகே அருள். 104

பெற்றோர்பால் பேரன்பும் பெற்றியுடைச் சுற்றம்பால்
பற்றுதலும் பல்லுயிரும் பாங்குபெற—நற்றவமும்
நாடிடும் நல்லருளை நல்கலர்மேல் நற்றாளைப்
பாடிப் பரவிப் பணி. 105

வாழி அலர்மேல் வளமார் திருவடிகள்
வாழி அவன்தாள் வணங்குபவர்—வாழி
இடர்நீக்கி என்றும் இனிமை பயக்கும்
சுடர்வீசு தூயமலர்த் தாள். 106

சோதித் திருவடியே! சொல்லவருள் பேரொளியே!
ஆதித் திருத்தாய் அலர்மேலே!—ஆதிக்கும்
ஆதியான் அன்பே! அடிமைகொள் ளுன்னடியே
ஓதி உணர உதவு. 107

வாழியரோ அன்னை அலர்மேல் அருளழகு
வாழியரோ அப்பன் வடமலையான்—வாழியரோ
எல்லாம் இனிதாய் இயைந்திவ் வுலகத்தில்
நல்லாள் திருவருளால் நன்கு. 108



# பாராட்டுரை

திருச்சிராப்பள்ளியிலிருந்து வெளிவரும் மாத இதழான ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனம்' ஆசிரியர் ஸ்ரீ S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் ஸ்வாமி M. A. B. L., அவர்கள் புத்தக விமர்சனமாக பரிதாபிவருட ஆடிமீ (ஜுலை 72) இதழில் இந்நூலைப்பற்றி எழுதியருளியதை மிகுதியான நன்றியறிதலோடு கீழே தருகிறோம்.

"அகலகில்லேன் இறையும்" என்று ...வங்கடவன் திருமார்பிலே உறையும் அலர்மேல் மங்கையின் அருளைப் போற்றிப் பாடும் நூற்றெட்டு வெண்பாக்கள் ...ண்டது இந்நூல். எளிய இனியநடையில். ஸ்ரீ வைஷ்ணவ சித்... ...ப் பொருள்களைப் பொதிந்து கொண்டதாய், சிறுவர்க்கும் கற்கலா... விளங்குவது இந்நூலின் சிறப்பு. இத்தகைய நூல்கள் பலவற்றை ...டி வெளியிடும் ஊக்கத்தை அலர்மேல் மங்கை ஆசிரியருக்கு அளிப்ப... ...க.



Azhwargal Arulicheyal Thirattu: Vidwan R. Kann... has explained in this book the tradition of rendering the Paasurams of Azhwars daily by those who desire to follow the path of Bhakti through the Vaishnavite tradition. The more important stanzas fit for recitation daily, picked out from the Naalayira Divya Prabhandam, the method of conducting private personal worship (Aradhana), the mantras to be chanted and other details expected to be followed by a sincere devotee, are given. A brief account of the temple of Lord Krisnna at Nallidaisenal. Vandawasi taluk, N.A. district (the residents of the village are mostly Yadavas) which was renovated last year and which has an ancient background are provided.

HINDU—DATED 22-1-1985